திருவல்லிக்கேணி ஸ்ரீராமர் பட்டாபிராமர் திருக்கோலம்



# இராமாயண மங்கள காண்டம்

1020

# இராமாயண மங்கள காண்டம்

ஸ்ரீ சீதாராமஸ்வாமி கிருபையாலும்
ஸ்ரீ நிவாச பெருமாள் அனுகிரஹத்தாலும்
இந்த புத்தகத்தை எழுதி தயாரித்து அளிப்பவர்:

**சரோஜா கோபாலன்**
3-B, ஷரயாஷ் அபார்ட்மெண்ட்
4-வது ஸீவார்டு ரோடு, வால்மீகி நகர்,
திருவான்மியூர், சென்னை - 600 041.

Price. Rs. 41/=



"SRIMANNARAYANA RAMANUJA YATHIBHYO NAMAHA"

**JEEAR EDUCATIONAL TRUST**

Founder and Managing Trustee **His Holiness**
**Tridandi Srimannarayana Ramanuja**
**Chinna Jeear Swamy**

ஸ்ரீமதி ஸரோஜா கோபாலன்
அவர்களுக்கு அநேக மங்களா
சாஸனம்.
தாங்களால் எழுதப்பட்ட
(ஸ்ரீ தெய்வ கருமாங்கள்) என்ற புத்தகத்தை
கண்டோம். லோக க்ஷேமத்திற்
காகவும் தேச, ஜாதி, மத நன்மைக்
காகவும் தாங்கள் ஸேவ
செய்கின்ற விஷயங்கள்
மிகவும் போற்றத்தக்கது. லோகத்
திலே தாங்கள் கருத்துக்கள்
அனைத்தும் ப்ரசாரம் ஆகி,
தங்கள் உள்ளத்தில் உத்தமமான
பாடு குன்றாத செல்வம்
நிறைந்திருக்க பகவானை
அருள் புரியட்டும் என்று
அநேக மங்களாசாஸனங்களும்
செய்கிறோம்.

[illegible]
1/2/97



JET 1-2-412/1/3, GAGAN MAHAL COLONY, JEEAR MARG, DOMAL GUDA, HYDERABAD - 29 ☎ 599426
JET SITANAGARAM, MANGALAGIRI Tq., GUNTUR Dt - 522 501 ☎ (0866) 77929
JET SRI TULASI RAMANUJA KUTAM, INNISPETA RAJAMAHENDRY - 533 101 ☎ 79000



உடையவர் என்னும் ஆதிசேஷனாகிய ராமானுஜர்
தன் பூத உடலுடன் உத்ஸவ மூர்த்தியுடன்
ஸ்ரீரெங்கத்தில் நான் பெற்ற இன்பம்
இவ்வையம் பெற வேண்டும்.

கோயில் முன் த்வஜஸ்தம்பம் மரத்தால்
அமைத்து அதனில் கருடபெருமானை அமைத்து
உத்ஸவ காலத்தில் கருடக்கொடிக்கு
முதல் மரியாதை அளித்து இறைவனுக்கு
பாரம்பரியம் அடங்கி உள்ள தத்துவத்தை
கூறியிருக்கிறார்கள்.

த்வஜஸ்தம்பத்தை வணங்கிய
பின்பே மூலஸ்தானத்தை தரிசிக்க
வைத்து கோயில் மூலமே இறைவனுக்கு
பாரம்பரிய ரகஸ்யத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

இதையடுத்து இருந்த பஞ்ச தத்துவத்தில்
திருமகள், மண்மகள், நீர்மகள், கலைமகள்
ஆகிய நால்வருக்கும் மரியாதை
ஐக்கியத்தியம், கல்யாணம் மூலம்
அளித்திருக்கிறார்கள்.

நிலமகளாக பூமிப்பிராட்டியாக
ஆண்டாளை அவதரிக்கச் செய்து ஐக்கியம்

நீர்மகளான நீளாதேவியை
துலுக்க நாச்சியாராக ஐக்கியம்
மலைமகளான தாமரைக்கு பத்மாவதியாக
ஐக்கியம் அளிப்பவர்கள்

புத்தியான சரஸ்வதியை
மேரி மாதாவாக அவதரிக்கச் செய்து
உலகம் பூரா உள்ள மக்கள் வணங்கும்படி
செய்து ஐக்கியம் அளித்திருக்கிறான்
அரங்கன்.

ஆனால் மகாலட்சுமியானவளுக்கு
இன்னும் ஐக்கியம் அளிக்கப்படாமல்
வைஷ்ணவியாக காஷ்மீரத்தில் அமர்ந்துள்ளது
கல்கி அவதாரத்தின் போது லட்சுமிக்கு
முடிவளிப்பதின் முன்னோட்டமே இராமாயணமாகும்



கவிதார்கிஸிம்ஹாய கல்யாண குணசாலினே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குருவே நம:
ஸ்ரீமதே நிகமாந்த மகாதேசிகாய நம:



ஸ்ரீமான் வேங்கடநாதார்ய கவிதார்கியகேஸரி
வேதாந்தாசார்யோமே ஸன்னிதத்தாம் ஸதாமே.

தீப தரிசனம்! ஸ்ரீ: பாப விமோசனம்!!
ஜெய் ஸீதாராம்! ஸ்ரீ ஸீதாராம ஜெயம்!!
ஸ்ரீ அலர்மேல்மங்கா சமேதஸ்ரீ பிரஸன்ன வேங்கடேச பரப்ரஹ்மணே நம:



# ஸ்ரீ ஸ்ரீநிவாஸ நிகேதனம்

(பதிவு S/122/1976)
1 புஷ்பாநகர் மெயின் ரோட்
நுங்கம்பாக்கம், சென்னை 600 034
தொலைபேசி: 8271879

7/8/98

செல்வி சரோஜா கோபாலன் அவர்களுக்கு.

ஸ்ரீமத் ஸ்வாமிகளின் ஆசிர்வாதமும் அனுக்ரஹமும். தங்கள், தங்கள் குடும்ப க்ஷேமத்தை பிரார்த்தித்து குங்கும பிரசாதம் அனுப்பியுள்ளோம். தங்களின் குறை எல்லாம்வல்ல பேசும் பெருமான் ஸ்ரீ அலர்மேல்மங்கா சமேத ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேச பெருமான் திருவருளால் நல்லபடி நிவர்த்தி ஆகும். தங்களின் குறை தீர கீழே குறிப்பிட்டுள்ள விவரப்படி செய்யவும்.

ஆசிர்வாதம்

இப்படிக்கு
ஸ்ரீமத் ஸ்வாமிகள் சொல்படி
ஸ்ரீகார்யம்

தங்களுக்கு சூக்ஷுமமாக கிடைக்கும் உத்தரவுகள் அனைத்தும் சத்தியமே. ஸ்ரீ அலர்மேல் மங்கா சமேத ஸ்ரீ ப்ரசன்ன வேங்கடேசப் பெருமான் என்கிற பேசும் பெருமான் கலியாண் கல்கி

அவதாரத்தை உலகிற்கு
உணர்த்த வந்த பரம்பொருள்.
ஆகவே தாங்கள் இத்திவ்ய ராமாயணத்தையும், மஹாபாரதத்தையும் விளக்கிக் கூறும் அவன் திருவருள் கொண்டும் பல விளக்கங்கள் தாங்களுக்கு கொடுப்பார் என்பதில் ஐயமில்லை. கூடிய சீக்கிரத்தில் ஸ்ரீமான் சௌந்தர்யல் தாங்கள் - தந்தி நாகரீகம் பட்டம் சூட்டி அனுப்பி வைக்கிறேன். தாங்களும், தங்கள் குடும்பத்தாரும் சீரிய ஆயுளோடு திடகாத்திரமாக யாக்கவும், குடும்ப க்ஷேமத்திற்காக ஆசிர்வதித்து இங்கே பிரசாதம் அனுப்புகிறோம்.

ஆசிர்வாதம்



வினாயகர் திருவடி சரணம்

அரங்கனின் திருவடி பணிந்து
இராமாயண மங்கள காண்டத்தை
ஸ்ரீனிவாஸர், அலர்மேலுமங்காள்
ஐயப்பன், முருகன் ஆசியுடன்
எழுதுகிறேன்.

# பொருள் அடக்கம்



முக்கிய குறிப்பு:-

மதுராந்தகம் ஏரிகாத்த ராமரையும் திருமலைவையாரர் ஸ்ரீனிவாஸரையும் ஸேவித்து பகவானிடம் ஆசிபெற்று வந்த தினம் 8-5-99
புஸ்தகத்தை எழுத ஆரம்பித்தது 14-5-99
முடித்தது 2-10-99
அச்சாக்கக் கொடுத்து எழுத ஆரம்பித்தது 24-10-99
முடித்தது 6-1-99 (ஹனுமத்ஜெயந்தி தினம்)
அச்சாக்கக் கொடுக்க பலதடவைமுயர்ச்சி செய்தும் முடியாத நிலையில் மே 6ஆம் தேதி அட்ச்சயதிருதியை தினம் கொடுக்க நினைத்தஸமயம் டி.வி.பொதிகையில் 2.30 யிலிருந்து 3 மணிவரை ராமாயாண ரங்கவிமான வைபவத்தை முக்கியமாகக் காட்டியதுடன்

அரங்கனின் புறப்பாடும், படியேத்தம் அரையர்ஸேவையுடன் கிடைத்தது. அரங்கனின் பூர்ண ஆசிமட்டும் தான் கிடைத்தது அன்றும் அச்சிற்கு கொடுக்க முடியவில்லை.

திங்கட்கிழமை ராமானுஜர் அவதார தினமான திருவாதிரை தினம் கொடுக்க நினைத்தும் ஆசிதான் கிடைத்தது. செவ்வாய்கிழமை பகவான் சீதாராமஸ்வாமிகள் மௌன விரதம் அனுஷ்டிக்கும் தினம் புனர்வஸீ நட்ச்சத்திரமாக 9ம் தேதி அமைந்து அச்சிற்கு கொடுக்கும் வாய்ப்பு நெருங்கி வந்தும் முடியவில்லை.

வியாழன் 11ம் தேதி ஆயில்ய நட்ச்சத்திரம் கூடிய தினம் திருப்பதி, திருச்சானூர் தாயார் குங்குமம், பழனி ஆகிய இரு இடங்களிலிருந்தும் பிரஸாதம் கிடைத்தது. யாவரின் பூர்ண ஆசி கிடைத்த மகிழ்ச்சி ஏற்பட்டது. 12ந் தேதி வெள்ளிகிழமை திருச்சூர் பூரவிழாவை ஸன்நியூஸ் டி.வி, மூலம் நேரிடையாகப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. குருவாயூர் அப்பன், அம்பாள், ஆண்டாள், சிவன் யாவருடைய ஆசியும் கிடைத்த மகிழ்ச்சி ஏற்பட்டது. இன்றைய தினம் ஸ்ரீரெங்கத்தில் கோயில் ஸ்ரீராமநவமியும் கூடியதாக அமைந்தது. கண்ணனுடன், ஸ்ரீராமரின் பூரண ஆசி கிடைத்த மகிழ்ச்சி ஏற்பட்டது.

திருப்பதி தாயார் பெருமாள், மூகாம்பிகை, சோட்டானிக்கரை பகபதி ஆசிகிடைத்ததுடன் திருவெற்றியூர் தியாகராஜர், அம்பாள் ஆசியும் கிடைத்தது.

ஆதித்யனாகிய சூரிய பகவானின் ஆசி கிடைத்தது. 17+18ம் கூடிய தினத்தில் நரஸிம்மஜயந்தியும், புத்த பூர்ணிமா தினமுமாக அமைந்தது சபரிகிரீசன் ஐயப்பன் செயலே மதுரை மீனுட்சி சுந்தரேசர் ஆசியுடன் அச்சிற்கு கொடுக்கும் தினமாக அமைந்தது.

புருப் கைக்குக் கிடைத்து திருத்த ஆரம்பித்த அம்மாவாஸை வெள்ளிக் கிழமை எதிர்பாராத சமயத்தில் வரசூர் ஸ்ரீனிவாஸப் பெருமாள் தாயார் படம் கொரியரில் கிடைத்தது. ஸ்ரீனிவாஸரின் பூரண ஆசி கிடைத்த மனத்திருப்தி ஏற்பட்டது. நாச்சியார் கோயில் தாயார் பெருமாள் ஆசியும் கிடைத்தது.

இராமாயண மங்கள காண்டம் பூர்த்தி அடையும் சமயம் கர்னாடக மாநிலத்தவரால் தங்கத்தேர் அரங்கனுக்கு சமர்ப்பிக்க வைத்து ஐப்பசியில் தங்கத்திற்கு மதிப்பளிப்பவர் ஐப்பசி தீபாவளியில் தங்கத்தேரில் பவனி வரப் போவதை நினைக்கும் போதே தேனாக இனிக்கிறது.



## ஓம் ஸ்ரீ ராமஜெயம்

## ஆசியுரை:

ஒன்றே சாஸ்திரம்
தேவகீ புத்ரனால் பாடப்பெற்ற கிதை
ஒன்றே தெய்வம்
தேவகீ புத்ரனால் அவதரித்த பகவான்
ஒன்றே மந்திரம்
அவனுடைய நாமங்கள் எவையோ அவை
ஒன்றே கருமம்
அந்த தெய்வத்துடைய ஸேவை

-இதே போன்று, ஒன்றே தீபம் இது திருமலை வையாவூரின் சிரவண தீபம்.

"கீதை, கங்கை, காயத்ரீ, கோவிந்தன் என்ற நாலு 'க' கார நாமங்கள் இருதயத்தில் நிலை பெற்றால் புனர்ஜென்மம் கிடையாது"

'திருமலை வையாவூர் ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் ஆலயத்தில் ஜோதியை சுடர்விடும் சிரவண தீபம் தரிசித்தால் வேறு பேறு இல்லை' என்கிறது அடியார்களின் ஆத்மா.

கங்கை போன்ற தீர்த்தமும், கோவிந்தனைப் போன்ற தெய்வமும், காயத்ரியைப் போன்ற ஜபமும் வேறு இல்லை என்பர்.

சௌபாக்யவதி சரோஜா கோபாலன் அவர்கள் எழுதி வெளியிட இருக்கும் ஸ்ரீ ஹிருதயகமலஸ்ரீ என்னும் புஸ்தகத்தை கண்டு மனம் மகிழ்ந்து ஸ்ரீ அலர்மேல் மங்காள் ஸமேத ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் திருவடியில் வணங்கி வாழ்த்துகிறோம்.

இக்கற்பக மலர் புது மணம் நிறைந்து மனித சமுதாயத்திற்கு அமைதியும், இன்பமும், அருட்கனலும், பூரணமும் அளிக்கவல்ல ஒரு ஷேமநிதி போல் உதிக்கட்டும்.

இப்புத்தகத்தைப் படித்து சிந்தித்தொழுகினாலும் மனத்தெளிவும் சித்த சுத்தியும், நம்முள்ளே மறைந்தொளிரும் தெய்வக் கனலை கூட வேண்டும் என்னும் ஆர்வமும் ஏற்படக்கூடும்.

ஆசையாணவ மாயங்களிற் கட்டுண்ட பாசான்மா மாசகன்று சுத்தான்ம சித்தி பெற்று அமர வாழ்வு அடையும் எல்லாச் சாதனங்களையும் இப்புத்தகம் தெளிவாக விளக்குகிறது.

திருமதி சரோஜா கோபாலன் செய்து வரும் அருள் தொண்டும், சமுதாயத் தொண்டும், பல சமயத்தினருடைய கொள்கைகளில் உள்ள சிறந்த பொருட்களை வேற்றுமையின்றி தெளிவுபடுத்தி எடுத்துக் காட்டும் ஜாதி, மத, இன மொழி வேறுபாடுகளுக்கு அப்பால் பட்டு தொண்டாற்றும் இயல்பும் மிகவும் போற்றுதற்குரியது.

இப்புத்தகம் வெளிவரும் போது ஒரு மலையிலிருந்து வரும் பேராறு வெள்ளம் புரண்டோடுவது போலவும் சில சமயம் வாழ்க்கையில் உள்ள அழுக்காறுகளை தன் வேகத்தில் போக்கும் பிரசண்ட மாருதத்தின் நினைவாகவும் புத்தகம் வெளிவரவும் பக்தர்களுடைய அறிவை மலரச் செய்வதற்கும் வாழ்க்கையை புனிதமாக்கி அதைப் பயன்படும் படிச் செய்வதற்கும் அமைந்த புத்தகமாக "ஸ்ரீ ஹிருதயகமல ஸ்ரீ மலர்ந்து லட்ச தீபத்தன்று பக்தர்களின் கையில்,

"மந்திரமாய் சாத்திரமாய் மறை நான்காய் நீ இருந்த
தந்திரத்தை நான் அறியத் தகுமோ பூரண்மே என"

பட்டினத்தார் வேண்டுகின்ற ஒரு பக்தி நிலையை பக்தர் அடைய ஸ்ரீ அலர்மேல் மங்காள் ஸமேத ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசப் பெருமாளை பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

ஸ்வாமி ஸீதாராமர்.

## SRI SRINIVASA NIKETANAM

No.1, Pushpa Nagar Main Road,
Nungambakkam,
Chennai-600034

## Om Sri Sri Ramajayam

Kali purusha Lord Krishna as Srinivasa in Thirumala Seven hills and Thirumala Vaiyavur Srinivasa give peace Message through Ramayana Mangala Kanda to the world people.

In this book Geetha Charya Sri Krishna has come in so many roopas and given the true information of the Birth and Death. How the creation starts and how it ends.

Birth and death God and Goddess Sriman Narayana and Sri Maha Lakshmi takes the three roopas like.

Vishnu, Brahma, Siva, Lakshmi, Saraswathi, Parvathi, Lakshmi's birth first takes place from Thiruparkadal.

Before her birth god comes in the roopa of Koorma Avatharam (Tortoise) through Amurtha mathanam so many things comes with this Sri Mahalakshmi comes from Thiruparkadal and so she is the Goddess of milk. From this milk only the creation starts.

For the Amurtha mathanam, Vishnu, Brahma, Siva with the help of Devas and Asuras they put Manthra malai the mountain on the Tortoise and snake Vasuki as rope to chum the mouton for Amutha Mathanam.

In this Amutha mathanam with good things Visha the poison also comes which god Siva drinks the poison and saves Amurtham and Devas. If the Amurtham has gone to Asura the bad evil things also might have lived long. But to Asuras Ragu and Kethu trunked cunningly the amurtham. That is why little bad evils are living with us. To control these bad evils only god took Nine Avatharas more to save people.

Due to this god proves that they three milk as Lakshmi, Mud as Pooma Devi. Hill as Parvathi, Either as Saraswathi are with us water is Neela Devi as Ganga.

Through their ten Avatharams teaches us the good things and bad things which we say Puniya and paver.

Our ten fingers of hand and ten fingers of leg also teaches us to do only good things and walk to do only good things.

The six roopas of god and Goddess is formed in all over the countries people also. The formation of our body also says the true form of the body. This explanation in full detail I have given in the book.

God Krishna told Devaki that he is going to give birth through her. Like that Deva Dootha has told that Mary is giving birth to a God-Child before marriage to save people.

God Krishna is very fond of cows. God Christs birth also takes place only at cow yard. Cow boys only gives the message to the world.

So many things are the same in Krishna birth and Christs birth.

God Krishna says in Bagavath Geetha that when ever bad things take place at that time I will come in so many forms. He has kept us his world. When he comes as Christ he takes the body form in Naratha. Brahma Puthra because sage Naratha helps Kamsa when kamsa with human thought he things not to kill their seven children because his death is going to be done only by Devakis 8th child. He that time warns him not to do so. Due to that sin Naratha comes in christs Roopa. He is Brahmas son.

**EÄSU:** This name has been given to Christ because to give respect to previous birth parents. Not only that he gives Devaki as mary. Vasudeva as Susayappa. In their past birth they suffered very much by loosing their sons to help Krishna in Dhuvaparaugam.

Susay and Mary having Naratha as God child after that they have their lost children and had full satisfaction with playing with them.

There fore Lord Krishna never fails in his duty. Who suffer for him he alternately response them who ever if they be and give them respect in one another form.

Dasavatharam he has killed ten asuras. So he himself born in jail for the sin.

Naratha comes in christs roopa for the past sin. As he is Brahmas son in his death time Brahma comes in wooden form as holly-cross. Thorn crown as Siva.

Christs Athma Swarops as Krishna like that in christs form three god comes and help to tolerate the pain in hitting the mails on him.

His sin has destroyed after poring the blood from the body for the past sin. Then the sin of people are also destroyed when ever who worship him sincerely.

Not only that he keeps the name Ea-Su to give respect to previous birth parents. Devaki and Vasudeva Deva-Da and Vasu-Su and keeps the name as Easu to show us that who he is.

At Velankanni in Nagapattinam Mother Mary asks first only milk and curd to prove that they are only Saraswathi and Naratha. Here Mary has told as Saraswathi because christs birth take place only before marriage of Mary. Therefore Narathas real mother has come in Mary's Roopa. Like that Lord Krishna has come as Alla and Buddha.

After that when ever so many bad things does the people to control them he sends a sage to the WORLD.

Now he has seated as Srinivasa in seven hills Thirumala and Kali Purusha at Thirumalai Vaiyavoor. Now he has sent a alarm to wake the people from sin and save the WORLD.

Therefore as he has told us in the three forms of Christ, Alla and Buddha in Kali many other form as sage how not to do sin. We have to follow them now as fast as possible.

In India Ramayanam and Maha - Baratham teaches the people to walk and do good things and avoid bad things.

In other languages he has Created Bible. Thiru-Kuran and Dummapatham. These three for Christians, Muslims and Buddhists. Guru Nanak for Sikh as Seekia Vedam and so on.

Every religion are saying only things. Don't do bad things to others. Avoid war Atom energy must used only for good things.

Pranava helps us to breath good air to live. When air goes inside it becomes as poison when cleaning the body's blood. When the air comes out from out body trees purifies the air. Like that Om Pranava itself forms

three gods as Vishnu in entering, purifying in the roopa of Siva and the poisonous air been purified as Brahma. Therefore the three gods are living with us in every second and minute to save us from death.

In Sri Roopa Goddess Lakshmi Parvathi and Saraswathi are doing the body's duties as water, blood and milk. These three are very essential for us every day to live.

Like that the soul is controlled and served by them through out our life.

Two hands also explain us god and goddess 3+3=6 are with us and helping us in all the way.

God Ganesha the form at Vishnu and Siva Muruga in the form of 6 God and Goddess. Lord Ayappa also in the form of Vishnu and Siva.

We must help the world to live in unity and peace. We all are only one gods children.

God is in several roopas to creation. He pleases them in the roopas which they worship. Therefore they never wants to change the god to one another. But they says they are the same in every god. Therefore don't fight or say our God is great and other is not. Do your duties as told in your Veda and to do others also.

Vedas, Prayers, Songs, Natya, Drama, Katha Kalashepa about god helps the world food things to grow more. To bring RAIN Balances the earth to stay in one place. So many things are to say. That will help you all in studying the book.

Ramayana Mangala Kanda written by me with gods instructions in TAMIL.

**Price Rs.31**

**SAROJA GOPALAN**
3-B, Shreyash Apartment,
4th Seaward Road,
Valmiki Nagar,
Thiruvanmiyur,
Chennai-600041.

# சுவாமியே சரணம் ஐயப்பா

முன்னுரை:

சுக்லாம் பரதரம் விஷ்ணும்

ஸஸிவர்ணம் சதுர்புஜம்!

பிரஸன்ன வர்ணம் த்யாயேத்

ஸர்வ விகனோப சாந்தயே

யஸ்யத்விரத வக்த்ராயா:

பாரிஸத்யா பரஸ்ஸதம்!

விக்நம் நிக்நந்தி ஸததம்

விஸ்வக் ஸேனம் தமாஸ்ரயே!!

ஸ்ரீரெங்கத்தில் திருவண்நாழிச் சுற்றுப் பிரகாரத்தில் வினாயகரும் லஷ்மி நரசிம்மரும் உள்ளார்கள். வினாயகச் சதுர்த்தி அன்று வினாயகருக்குக் கொழுக்கட்டை நைவேத்தியம் இரவு 9 மணிக்கு அளித்து பிரஸாதம் கொடுக்கப்படுகிறது.

விபீஷணாழ்வார் எடுத்து வந்த ரங்கவிமானத்தை ஸ்ரீரெங்கசேத்திரத்தில் பிரதிஷ்டை செய்த பெருமை வினாயகரையே சேரும். வினாயகர் இல்லை என்றால் ஸ்ரீரெங்கநாதர் இலங்கை சென்று இருப்பார். அதைத் தடுத்து உலக நன்மைக்காக பூலோகத்தில் வைகுண்டமாகிய ரெங்கசேத்திரத்தில் அரங்கன் நித்தியவாஸம் செய்ய வைத்து அதன் அருகிலேயே உச்சிப்பிள்ளையாராக அமர்ந்து உலக நலனை சதா கண்காணிக்கிறார் வினாயகர்.

மகாபாரதத்தை வியாஸர் சொல்ல வினாயகரே எழுதுகிறார். முருகனின் வள்ளி திருமணத்தை முன்நின்று நடத்தி வைப்பவரும் வினாயகரே. காவேரியை ஸ்ரீரெங்கச் சேத்திரத்திற்கு அகஸ்தியர் கமண்டலத்தில் இருந்து தலைக்காவேரியாக குடகு மலையிலிருந்து ஸ்ரீரெங்க சேத்திரத்திற்கு கொண்டு வந்த பெருமையும் வினாயகரையே சேரும். அப்படிப்பட்ட முதல் மூலக் கடவுளை நாம் போற்றி வணங்கச் செய்வதே சுக்லாம்பரதரம் விஷ்ணும் ஸஸிவர்ணம் என வினாயகரின் மூல மந்திரஸ் துதி.

சரீரத்தில் நவத்துவாரங்களும் சரியாக அமைய வழி செய்யும் எலிக்கும் பூமியில் கோயில் அமைத்துக் கொடுத்ததோடு அல்லாமல் வினாயகர்

எலிகளுக்கெல்லாம் தலைவன் மூஞ்சூரைத் தனது வாகனமாக அந்தஸ்து அளிக்கிறார்.

காஞ்சி பரமாச்சார்யாளின் தரிசனம் பரமாச்சார்யாள், சின்னப்பெரியவாள் இருவரும் 1958லிருந்து மதறாஸில் தங்கி இருந்த சமயம் மதுரவாயிலில் முகாம் இருந்தார்.

அது சமயம் நான் என் கணவர் சின்ன மகன் ராம்குமாருடன் நேரில் சென்று நான் எழுதிய லட்ச்சம் ஸ்ரீராம ஜெயத்தை கார்த்திகை திருவண்ணாமலை தீபத்தன்று அதிகாலை பரமாச்சார்யாளிடம் சமர்ப்பித்தேன். அதில் பரமாச்சார்யாள் பேரில் சின்னக்கவிதை எழுதியிருந்ததை மிகவும் ரஸித்துப் படித்தார். அவர் சின்னக் குழந்தைபோல் அனுபவித்துப் படித்துக் கொண்டிருந்த சமயம் அவர் முதுகுப்புறம் இருந்த சாய்மானப்பலகை காற்றில் அவர்மேல் சாய்ந்துவிட்டது அவருக்கு வலிக்குமே என்ற உணர்வில் அப்பலகையை நான் கையால் தொட்டு பின்புரத்தூணில் சாத்திவிட்டேன் சாதாரணமாக யாரும் இப்படிச் செய்தால் ஸ்வாமிகள் தீர்த்தாட வேண்டுமாம். பக்கத்தில் இருந்த மடத்தைச் சேர்ந்தவர் ஏன் அம்மா இப்படிச் செய்து விட்டாய்? என்பதற்குள் பரமாச்சார்யாள் கை அமர்த்திப் பரவாயில்லை என்று கோபப்படாமல் என்னிடம் மேலும் 15 நிமிஷங்கள் பேசினர். அத்துடன் நான் எழுதியிருந்த ஸ்ரீராமஜெயம் நோட்டில் 3,5,7,9 எனப் புள்ளிவரிசைகளில் நான் ஏதும் அறியாமல் போட்டிருந்த ஹிருதயகமல ஸ்ரீ கோலங்களையும் ரஸித்தார். பின் இன்று திருவண்ணாமலை தீபம், பூஜை விசேஸமாக இருக்கும். பூஜையை ஸேவித்து பின் மடத்தில் அளிக்கும் போஜனத்தைச் சாப்பிட்டுச் செல்லுங்கள் என்று கூறிய அவரின் தேனின் இனிய குரல் சதா என் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. அவர் கையால் அளித்த காமாட்ச்சி அம்மன் பொரித்த பொர்காசை பெற்றுக் கொண்டதை விட இம்மகிழ்ச்சி அளவில் அடங்காது.

1979 குழந்தைகள் ஆண்டில் நான் எழுதிய ஹரே ராம், ஹரே கிருஷ்ண, ஹரே கோவிந்தா என்னும் புஸ்தகத்தை கடாச்சித்து ஸ்தல புராணம் சில மறைந்து விட்டது. அதை வெளிப்படுத்தவே பகவான் இதை உணர்த்தி உள்ளார் என திருவாய் மலர்ந்தருளி அருளாசி கூறினார்.

6.7.93 அன்று ஆல்பத்தைக் கொடுத்து ரோஜா மாலையும் கொடுத்து அனுப்பிய அன்று கிடைத்த அனுபவம் அவர் அன்பின் எல்லையின் அளவைக் கடந்ததாகும்.

ஸ்ரீராம ஜெயத்தை குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை எளிய முறையில் உணர்ந்து பக்தியுடன் எழுதச் செய்து பூஜையில் வைக்கச் செய்தது மாபெரும் தொண்டாகும்.

இம்மகான் இது மட்டும் அல்ல தேச விடுதலைக்காக பாடுபட்டு விடுதலை வாங்கித்தந்து ராம நாமம் சொல்லியே உயிர் நீத்த தேசப்பிதா பாபு காந்திஜியுடன் நெருங்கிய தொடர்பும் அவரிடம் அன்பும் கொண்டிருந்தார். அப்பேர்பட்ட மகானின் திருப்பாதங்களில் ஹிருதய கமல ஸ்ரீபுஸ்தகத்தை சமர்ப்பித்து,

இராமாயண மங்கள காண்டத்தை பூர்த்திசெய்கிறேன் நாராயண, நாராயண, நாராயண.

காந்திஜீ, கஸ்தூரிபாய் அவதார ரகஸியம். காந்தி என்ற பெயரில் சூரியனின் காந்தியும் கஸ்தூரி என்ற பெயரில் அரங்கனின் கஸ்தூரிதிலகமும் உள்ளதைக் பார்க்கலாம். பகவான் தன்னிடம் உள்ள சூரியகாந்திக்கும், கஸ்தூரி திலகத்திற்கும் கலியில் இவர்களுக்கு உலகச்சேமத்தை உண்டாக்கப் போகும் பணியை இவர்களுக்கு அளித்துள்ளார்கள். ஆழ்வார்கள் அவதாரத்தில் அளிக்கப்படாமல் இதற்காகவே தனித்து வைக்கப்பட்டிருந்து கலியில் பின்னிட்டு ஏற்படும் குழப்பகாலத்தில் இவர்களை அவதரிக்கச் செய்திருப்பது விசேஷமாகும்.

ர்குபதி ராகவ ராஜாராம்; ஈஸ்வர அல்லா தேரே நாம் என தைரியமாக இதனாலேயே அவரால் கூறமுடிந்தது. காந்திஜி நூர்ப்புயஞ்யம் செய்து ஏழ்மையைக் கடைப்பிடித்து தான் எளிய உணவு உண்டு, எளிய உடை உடுத்தி அஹிம்ஸையைக் கடைப்பிடித்து நம்மை நல்வழிப்படுத்த கடைப்பிடித்து காட்டியுள்ளார்.

ராமானுஜர் ஆதிசேஷன் அவதாரம், அவர் அஷ்டாச்சர மந்திரத்தை கோபுரத்தின் உச்சியில் நின்று கூறி தாழ்த்தப்பட்டோரும் கேட்கும்படி கூறியது போல காந்திஜியும் தாழ்த்தப்பட்டோரும் ஹரிஜனம் என்று ஸ்ரீமன் நாராயணரின் மக்களே என்று அழைத்துள்ளார்.

அவர் பார்த்த ஒரே சினிமா ராமராஜ்யம். ராம நாமமே அவர் மூச்சு. விடுதலைக்காக பலபேர் பாடுபட்டும் அஹிம்சை மூலமும் உண்ணாவிரதம் மூலமும் வெற்றியைத் தேடித்தந்தார் என்றால் அவரிடம் பகவத் அம்ஸம் இருந்ததே காரணம். நாகஸர்ப்பம் போல வழுக்கி விரைந்து செல்லும் நடை. பனி, குளிரைத் தாங்கும் சரீரம் இரண்டுமே அவரிடம் நிறைந்து இருந்தது ஒரு தெய்வீக சான்னித்யமே. அவர் உலகில் மத ஒற்றுமைக்காக பாடுபட்டார்.

இராமாயண காலத்தில் காந்திஜியும், கஸ்தூரிபாயும் விபீஷணுழ்வாரும், அவர் பத்தினியுமே ஆகும். அதனாலேயே இராமாயண காலத்தில் ராமர் கையால் அளித்த ரெங்கவிமானத்தை ஸ்ரீரெங்யதில கோயில் கொள்ளச் செய்த பெருமை உடைய அவரே மோகன் சந்த்கரம்சந்தரகாந்திஜி என்னும் பெயருடன் கூடிய தேசப்பிதா ஆனதால் ராமநாமமே தனது உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார். கடைசியில்

குண்டுக்கு இரையானது விபீஷணாழ்வாராக இருந்த சமயம் தன் சகோதரனான இராவணன் உயிருக்கு முடிவைத் தேடிக்கொடுத்த பாபத்தை இதன் மூலம் கடைசியிலும் ராம், ராம் எனக் கூறி உயிர்நீக்கினார் யாரானாலும் பாபத்திற்கு தன்டணை உண்டு என்பதே கடவுளின் தீர்ப்பு. இராமாய்ண சம்பந்தம் உள்ளவர் எனக்கூற தியாகய்யர்வாள் இராமாயணத்தை கீர்த்தனமாக வடித்துத் தந்தபின் உயிர் நீத்த பகுள பஞ்சமிதினமே காந்திஜியின் முடிவுதினமாக அமைந்து புலனாக்குகிறார்கள்.

கடவுள் கூறி உள்ள மத ஒற்றுமையை மக்கள் உணரும் போது பாரததேசத்தின் கொடி பஞ்சவர்ணத்தில் பறக்க வேண்டும் என்பதே காந்திஜியின் தணியாத ஆசை.

காந்திஜி நம்மிடையே 125 வருஷம் வாழ்வேன் என்றார். அதே போல இறந்த பின்பும் அவருடைய 125 வ்ருஷக் கொண்டாட்டங்களை கண்ட நம் தேசத்தில் 125 வருஷம் மட்டும் அல்ல ராம நாமம் இவ்வுலகில் உள்ளவரை காந்திஜீயும், கஸ்தூரிபாயும் உலக மக்கள் மனதில் வாழ்வார் என்பதில் சந்தேகமே இல்லை.

அப்பேர்பட்ட அதிதிவ்ய தம்பதிகள் கையில் ராமாயண மங்கள காண்டத்தை சமர்ப்பிக்கிறேன்.

லவ, குச சமேத சீதா ராம ஜெயம்.

ஆஞ்சனேய திருவடியே சரணம்.

## கடவுள் தரிசன விபரம்

சிறு வயது முதலே வினாயகரிடம் அதிகபக்தி கொண்ட நான் திருவிளக்கு பூஜை சமயம் விநாயகஸ்துதி சொல்லியே பூஜையை தொடங்குவேன்.

வைஷ்ணவ குலத்தில் பிறந்தும் வினாயக பக்தியையே நான் முதலாகக் கொண்டேன். இது தவிர பிற மதங்களின் கோயில்களுக்கும் சென்று வழிபடுவது எனக்கு என் வாழ்வில் ஒரு திருப்பத்தையே அளித்தது எனக் கூறலாம். வேளாங்கண்ணி, நாகூர் முதலிய ஆலயங்களுக்கும் நான் நேரில் சென்று தரிசித்துள்ளேன்.

என் தந்தை போலீஸ் அதிகாரி ஆனதால் கோயில் உத்ஸவங்களுக்கு அவர் பந்தோபஸ்து செய்யும் போது எல்லா ஸ்தலங்களிலும் அருகில் இருந்து தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

இதில் மிக முக்கியமானது சிக்கில் சிங்காரவடிவேலனின் உத்ஸவத்தில் ஒரு நாள் அவர் வீதிவலம் வந்து உள்ளே வந்ததும் அவர் வெங்கலச்சிலை ரூபத்தில் முத்து முத்தாக வியர்வை துளிப்பதை பட்டர்

1020

வஸ்திரத்தால் துடைத்து ஒத்தி எடுப்பதை நான் மிக அருகில் இருந்து தரிசித்ததாகும். இச்சம்பவம் எனக்கு முருகன் பால் மிகுந்த பக்தியை உண்டாக்கியது.

எனக்கு கல்யாணம் 44 ஏப்ரலில் ஆனபின் 46ல் ஒரு பையன் ஆடிக்கிருத்திகை அன்று பிறந்தான். இவனுக்கு நந்தகுமார் என கண்ணன் + முருகனின் இணைப்பாக வைத்தோம். 49 வைகாசி அஸ்வனி நட்சத்திரத்தில் ரேவதியும் + அஸ்வனியும் கூடியதினமாக இருந்ததால் ஸ்ரீரெங்கப் பெருமாளை நினைத்து ராம்குமார் என பெயர் வைத்தோம்.

1952ல் மூன்றாவது குழந்தை வயிற்றில் 5மாத கர்ப்பமாக இருந்தபோது ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

மதியம் உணவு உண்டபின் களைப்பில் தொட்டில் கட்டிலில் படுத்திருந்தேன். அது சமயம் என் வலது கண் நன்றாகத் திறந்திருக்க இடது கண்ணை யாரோ அழுத்தி மூடுவது போல் இருந்தது. அதுசமயம் என் பக்கவாட்டில் இருந்த சுவற்றில் என் உடல் எலும்புக் கூடு தலைமுதல் கால்வரை Xரே படத்தில் தெரிவது போலத் தெரிந்தது. அதன் வயிற்றுப்பாகம் மட்டும் நல்ல நீல நிறமாக இருந்தது. இந்த நிலை சற்று நேரம் நீடித்து இருந்து பின் மறைந்து விட்டது. பின் நான் என் நினைவுக்கு வந்து விட்டேன். இச்சம்பவம் ஏன் எதற்காக என் வாழ்வில் நடத்திக் காட்டப்பட்டது என்பதை நான் அப்போது உணரவில்லை.

பின் குழந்தை 13-10-52 ஐப்பசி மாதம் ஆயில்ய நட்சத்திரத்தில் வியாழக்கிழமை இரவு 12 மணிக்கே பிறந்தான். அவன் இருதோள்களிலும் பெரியமச்சம் இருந்தது. என் தாய் அர்ஜீனனுக்குத்தான் இரு தோள்களிலும் மச்சம் இருந்தது எனக்கூறி அவனுக்கு விஜயன் எனப் பெயர் வைத்தார்கள்.

பெரிய பையன் பெயர் நந்த குமார் என்றும் சின்னவன் பெயர் ராம்குமார் என்று இருந்ததால் இவனை விஜய குமார் என்றே அழைத்தோம். இவன் குழந்தையாக இருந்த போது நாகைப்பட்டிணத்தில் என் தந்தை இருந்ததால் வேளாங்கண்ணி, நாகூர், திருநல்லார், மாயவரம் கடைமுழுக்கு யாவஸ்தலங்களுக்கும் குழந்தையை அழைத்துச் செல்லும் பாக்கியம் கிடைத்தது ஏதும் அறியாமலேயே. பின் சிவகாசி வந்த பின் 13-6-53ம் வருஷம் வைகாசி மாதம் சனிக்கிழமை மாலை 6 மணிக்கு இறந்துவிட்டான். இவன் பிறந்தது வியாழக்கிழமை 13ந் தேதி. இறந்ததும் 13ந் தேதி சனிக்கிழமை. வாழ்ந்த காலம் சரியாக 8 மாதம்.

இவன் இறப்பதற்கு 13 நாள் முன்பு எடுத்த படத்தில் ஐயப்பனே என் வாழ்வில் வந்த அடையாளமாக போட்டோவில் இவன் தோளில் ஐயப்பனின் கருப்பு வஸ்திரம் போல் என் இரு பையன்களின் நிழலும் விழுந்து ஒரு நாயை வைத்துக்கொண்டு நான் இது போல ஒரு நாயை உன்னிடம் அனுப்பி வைப்பேன் என்பது போல அடையாளம் வைத்துள்ளதை இப்புஸ்தகத்தில் பிரசுரித்துள்ளேன்.

13 வருஷம் மஹாபாரதத்தில் பாண்டவர் வனவாஸம் சென்ற காரணம் திரௌபதி வஸ்திராஅபஹரணம். மகா பாரதத்தில் நம் சரீரதத்வமும், கீதாசார்யனின் கீதோபதேசத்தின் சாரமும் இப்புஸ்தகத்தில் விளக்கப் போவதின் அடையாளம் இந்த 13 என்பதை உணர்த்தவே பகவான் விஜயன் பிறந்த தேதியில் 13ம் இறந்த தேதியில் 13ம் என்று வைத்து சரியாக 8 மாதகாலம் வாழ்ந்து தேவகி, வசு தேவரின் பெயரை ஏசுவாக வைத்துக் கெண்டு உணர்த்தப் போகும் அடையாளமாக வைத்துள்ளார்கள்.

இது மட்டும் அல்ல அவரின் தூதனாக அனுப்பிய நாய் வாழ்ந்த காலத்தை சரியாக 14 வருஷம் என வைத்து இராமாயண மங்கள காண்டத்தையும் முருகனின் 6 படை வீடு தத்வங்களையும் மக்களுக்கு வெளிப்படுத்தப் போகும் அடையாளம் என வைத்துள்ளார்கள்.

இந்த நாய் எங்களிடம் வந்ததிலும் ஒரு தெய்வ அனுபவம் அடங்கி உள்ளது. என் கணவருக்கு மதறாஸிலிருந்து பெங்களூர் மாத்தல் இது சமயம் ஆகியிருந்தது. நாங்கள் சாம்ராஜ்பேட்டையில் டாக்டர் பெல்லிமால் ஆனந்தராவ் வீட்டு மாடியில் குடி இருந்தோம். அப்போது அவர்களிடம் இருந்த நாய் கருஉற்றிருந்தது. நான் அதன் குட்டியை வளர்க்க வேண்டும் என ஆசைப்பட்டேன்.

இந்த நாய் பிறந்ததும் ஒரு ஆச்சர்யம், 15-3-65 திங்கட்கிழமை காலை பிறந்த குட்டியின் மேல் பை நீலமாக இருந்ததால் குட்டி இறந்து விட்டது என எண்ணி டாக்டரான ஆனந்தராவ் 10அடி உயரச் சுவர் தாண்டி கறுவேல முள் புதரில் பின் புறம் எறிந்துவிட்டார். அந்த இடத்திற்கு போவதே மிகவும் சிரமம். இதை அவர் என்னிடம் சொன்ன சமயம் காலை 8 மணி.

தினம் நானும் என் கணவரும் சேர்ந்து வெங்கடேச சுப்ரபாதம் சொல்வது வழக்கம். இந்த சமாசாரம் கேட்டு அன்று நாங்கள் சுப்ரபாதம் சொல்லும் போது பகவானே அக்குட்டிக்கு உயிர் கொடுத்து விடு என நான் மனதில் பிரார்த்தனை செய்யும் போது குட்டியின் குரல் என் காதில் கேட்டது ஒரு ஆச்சர்யமான சம்பவமே.

பின் மிகவும் சிரமப்பட்டு அக்குட்டியை வெளியே கொண்டு வந்தோம். டாக்டர் ஆனந்தராவ் அக்குட்டியை தன்னிடம் 1 மாதம் வைத்துபாதுகாத்து 14-4-65 சித்திரை வருஷப் பிறப்பு அன்று குட்டியை எங்களுக்கு அன்பளிப்பாக அளித்ததும் சித்திரை மாதம் ஸ்ரீராம அவதார தினமும் அவரின் இராமாயண இதிகாசத்தின் மங்கள காண்டத்தை உணர்த்தப் போகும் ஒரு அடையாளமாகவே வைத்துள்ளதை உணராமலேயே அக்குட்டியை ஒரு குழந்தை போலவே யாவரும் அன்புடன் வளர்த்து வந்தோம்.

குட்டி வெண்சங்கு போல வெள்ளை வெளேர் என்று இருந்ததுடன் அதன் ரோமம் வெள்ளி கலந்தது போல ஒரு மினுமினுப்புடன் இருந்ததால் ஜிம்மி எனப் பெயர் வைத்தோம்.

பகவத் விஷயத்திற்கு ஜிம்மி மிகவும் உதவியுள்ளான் என்பதாலேயே இதனை நான் எழுதியுள்ளேன். பகவத் அனுபவம் ஏற்பட்டு புவனேஷ்வரில் படுக்கச் சென்று உறங்கியபின் விடியற்காலை 3 மணிக்கு என் காலைப் பிடித்து எழுப்புவான். இந்த பிரம்ம முகூர்த்த வேளையில் படுக்கச் சென்றதும் எனக்கு புலப்படுத்தப் பட்ட விஷயங்களை விபரமாக எழுதும் பாக்கியம் கிடைக்கும்.

ஜிம்மி எங்களுடன் 14 வருஷம் இருந்தான். இருந்த 14 வருஷமும் பிரம்மச்சர்யத்தைக் கடைப்பிடித்தே வாழ்ந்தான்.

தீபாவளி முதல் பூரண விரதம் இருந்து நான் திருச்செந்தூர் சென்று சூரசம்ஹாரவேலையும் முருகன் லீலையையும் ஸேவித்து வந்த பின்பே தூத்துக்குடியில் 1978 ஐப்பசி மாதம் மாலை 6 மணிக்கு எந்த ஸ்ரீனிவாஸர் கிருபையுடன் எங்களிடம் வந்தானோ அவர் படத்தின் முன்பு மூன்றுதரம் சுற்றி என் மடியில் உயிர்நீத்தான். கந்தஸஷ்டிக்கு மறுநாள்.

விஜயன் பிறந்ததும் ஐப்பசி மாதம் என்ற ஒற்றுமை இங்கு புலப்படுத்தப்படுகிறது. தெய்வப் பணிக்கே இவையாவும் என் வாழ்வில் நடத்தப்பட்டுள்ள சம்பவங்கள் என்று.

தட்ஷிணாமூர்த்தி 4 வேதங்களையும் 4 நாயாக மாற்றி உள்ளார். தர்மருக்கு தர்ம தேவதையே நாயாக வந்து வழிகாட்டி உள்ளது. ஜிம்மி ஒரு தெய்வ தூதனே என்பதற்கு இன்னும் ஒரு சாட்ச்சியும் கொடுத்துள்ளார்கள்.

நான் புஸ்தகத்தை எழுதி முடித்த பின் ஸ்ரீரெங்கம் சென்று ஸ்ரீ அரங்கனுக்கு பூப்போர்வை சாத்தி அதனைக் களைந்த பின் நம்மாழ்வாருக்குச் சாற்றும் பாக்கியம் பெற்றேன்.

அதே போல் தாயாருக்கும் பூப்போர்வை சாத்தி அதனைக் களைந்து ஸ்ரீரெங்கநாயகித் தாயார் ஸன்னதி முன்பு உள்ள கம்பர் மண்டபம் பக்கம் உள்ள வேதாந்த தேசிகருக்குச் சாத்தினேன். அதனை அப்படியே போட்டோ எடுத்துக் கொண்டதில் ஒரு போட்டோவில் தேசிகர் மைந்தன் உருவமும் மற்றொன்றில் அதே போட்டோவில் சிரஸான தலை நாயின் உருவம் போல் விழுந்துள்ளது. தேசிகர் திருப்பதிப் பெருமாள் கண்டாமணியிலிருந்து பிறந்தவர். தேசிகர் மைந்தனும் திருவஹிந்திபுரம் பெருமாள் ஆவார். இவர்களால் இந்த சாட்ச்சி வைக்கப்பட்டுள்ளதை இப்புஸ்தகத்தில் சேர்த்துள்ளேன்.

இது தவிர கம்பர் இயற்றிய தமிழ் இராமாயணம் இங்கு உள்ள கம்பர் மண்டபத்தில் ரெங்கநாயகித் தாயார் சன்னதி முன்பு அரங்கேற்றம் செய்யப்பட்டு அதை கேட்டு அழகிய சிங்கரான நரஸிம்மப் பெருமாள் ஆமோதித்த இடமாகும்.

அப்பேர்பட்ட இடத்தில் அமைந்துள்ள ஸ்ரீமத் வேதாந்ததேசிகர் சன்னதியில் இந்த அடையாளத்தை வைத்துள்ளது இராமாயண மங்கள காண்டத்தை பூர்த்தி செய்யும் பணிக்காகவே என திடமாகக் கூறியுள்ளதை நாம் உணர வேண்டும்.

இங்கு தேசிகர் மகன் மூலம் இந்த சாட்ச்சியை வைத்திருந்தாலும் பராசரபட்டர் ஒரு நாயாகப் பிறந்தாலும் அரங்கன் பணி செய்வதே என் முக்கிய பணியாக இருக்க வேண்டும் என அவர் ஆசைபட்டதால் இராமாயணத்தின் மங்கள காண்டம் கூறி சர்வ மதங்களின் தத்வத்தையும் உணர்த்தி உலக மக்களை ஒன்று படுத்தி இணைக்கும் இப்பணியில் அவரை நாயாக அவதரிக்கச் செய்து இருப்பது முக்கியமாகும்.

இதனின் சாட்சியாக கொடுக்கப்பட்ட படத்தையும் இப்புஸ்தகத்தில் பிரசுரித்துள்ளேன்.

இறந்த குழந்தை விஜயனின் கண்களில் ஒரு தெய்வீக ஜோதி இருந்ததை என்னால் மறக்கவே முடியவில்லை. இச்ஜோதி என் மனதில் சதா இருந்து கொண்டே இருந்தது.

பகவானும் குழந்தை இறந்த 13ம் வருஷமே ஜிம்மியை எங்களிடம் அனுப்பி வைத்துள்ளார். ஜிம்மி வந்த 13ம் வருஷமே பகவத் விஷயத்தில் என்னை ஈடுபட வைத்துள்ளார்கள்.

அதுவரை நான் ஏதும் அறியாமல் ஒரு குடும்பத்தலைவியாகவே, ஆயர் குலச் சிறுமியாகவே இருந்து வந்தேன்.

1978ம் வருஷம் மார்ச் மாதம் 14ம் தேதி கயா சென்று 16ந் தேதி கயா ஸ்ராத்தம் செய்யும் பொழுது இறந்த குழந்தை விஜயனை நினைத்து பிண்டம் இட்ட பின்பே எனக்கு பகவத் சம்பந்தமான பல விஷயங்கள் புலப்பட ஆரம்பித்தன. கயா சென்று போதிகயாவில் புத்தரின் பல ஆவயங்களுடன் புத்தருக்கு ஞானம் பிறந்த போதிமரத்தையும் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

காசி விஸ்வநாதரை கங்கை நீரால் அபிசேகம் செய்து பின் சனிக்கிழமை அலகாபாத் திருவேணி சங்கமத்தில் நீராடி கங்கை நீரை பலபடகுகள் தாண்டி எடுத்து வந்தேன் சனிக்கிழமை மௌன விரதம் உபவாஸ தினத் தன்று.

1. கயாவில் விஷ்ணு பாததரிசனமும் போதிகயாவில் புத்தரின் ஞானமார்க்க தரிசனமான போதி மரத்தையும் கண்டுவந்தபின் பல விஷயங்கள் எனக்கு புலனாக ஆரம்பித்தன.

   இதன் பின் மனச் சஞ்சலம் ஏற்பட்டால் புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி எனக் கூறி நான் படுக்கச் செல்வது வழக்கம்.

   அன்றும் அப்படிச் சொன்னதும் ஒரு நிமிடத்தில் பிள்ளையார் தோன்றி தன் நீண்ட துதிக்கையால் என்னைச் சுற்றி வளைத்துப் பிடிக்க முயன்றதும் நான் பயந்து ஓட ஆரம்பித்தேன்.

அப்படியும் பிள்ளையார் விடாமல் என்னைத் தன் நீண்ட துதிக்கையால் சுற்றி வளைத்துப் பிடித்து தன் மடியிலும் அமரச் செய்து விட்டார். இது ஒரு நிமிஷம் தான்.

உடன் அக்காட்ச்சி மறைந்து அங்கு லச்சுமீ நரஸிம்மர் தோன்றினர். பின் அவர் தன் திருவாய் மலர்ந்து அருளி நானே வினாயகர், நானே புத்தர் எனக்கூறி பல விஷயங்களை புலப் படுத்தியதே வினாயகர் அனுபவம்.

2. இரவு படுக்கச் சென்ற உடன் தான் பல விஷயங்களைப் புலப்படுத்தி உள்ளார்கள். அது போல அன்று படுக்கச் சென்றதும் பிரம்மாவும், ஸரஸ்வதியும் தோன்றினார்கள்.

   தோன்றிய சிறிது நேரத்திற் கெல்லாம் சரஸ்வதி ஔவையாகத் தோன்றி காட்ச்சி தந்தாள். சில நிமிஷம் சென்று அவளுடைய பக்கத்தில் நாரதர் தோன்றி ஔவை மேரி மாதாவாகத் தோன்றி காட்ச்சிதர நாரதர் ஜீஸஸ் கிரைஸ்டாகத் தோன்றினார். பின் ஜீஸஸ் கிரைஸ்ட் குழந்தையாக மாறி மேரிமாதாவின் கைக்கு வந்தார். பிறகு மேரிமாதா குழந்தை கிரைஸ்டுடன் மறைந்தாள். இக்காட்ச்சியை பல முறை காட்டி என் மனதில் அதனின் தத்வம் புரிந்த பின்பே இக்காட்சியை மறைத்தார்கள்.

3. இதே போல சிவஸ்வருபத்தைக் காட்டி மறையச் செய்து அபயஹஸ்தம், மயில் பீலி, சந்திரப்பிரபை இவைகள் மட்டும் தோன்றச் செய்து அருபியாக சிவனும், பிரம்மனும், கிருஷ்ணனுமே மறைவாக முகமதிய மதத்தில் இருப்பதாகப் புலப்படுத்தினார்கள்.

4. மற்றொரு நாள் இரவு படுக்கச் சென்ற பிறகு இரவு 11 மணி சுமாருக்கு பார்வதியின் ஊழிச் சிரிப்பு போல விடாமல் சிரித்து, சிரித்து சிரிப்பை அடக்க முடியமல் இருந்த நிலையில் என் கணவரை சிவஸ்வருபமாகக் காட்டி பல வண்ணப் பாம்புகளை என் அங்கம், அவர் அங்கத்திலும் நெளியச் செய்து சிவ + பார்வதி ஸ்வருபம் நம் சரீரத்தில் உள்ள தத்வத்தைச் சொன்னார்கள்.

5. முன்பு போலவே அன்று படுக்கச் சென்ற உடன் உலகமே சுற்றுவது போல இருந்தது. பின் என் உடம்பு ஒரேயடியாக கனத்து விட்டது.

   பின் என்னை யாரோ அப்படியே எடுத்து உலுக்குவது போல இருந்தது. பின் என் சரீரத்திலிருந்து ஏக மண்ணும், பல தாதுப் பொருள்களும், நவரத்தினங்களும் உதிர்வது போல இருந்தது. இந்த அனுபவங்களை முடிந்து நான் சாதாரண நிலைக்கு வந்து விட்டேன்.

   இதன் பின் பல உண்மைகள் என் மனதிற்குப் புலனாகின. உதாரணமாக நாம் புழுங்கும் களிமண், செங்கல், சுண்ணாம்பு,

சிமெண்ட், பீங்கான் முதல் தங்கம், வெள்ளி, ஈயம், இரும்பு, பித்தளை, நவரத்தினங்கள், மண்ணெண்ணை, பெட்ரோலியம், பெட்ரோல் முதல் காஸ் வரை பூமியிலிருந்தே கிடைக்கின்றன.

6. நான் கோயமுத்தூர் சென்றிருந்த சமயம் என் பேரன் சுதர்ஷன் ஒரு நாள் விடியற் காலை 3 மணிக்கு என்னிடம் வந்து ஏன் பாட்டி இந்த உலகம் எப்படித் தோன்றியது?

   உலகம் தோன்றிய போதே பசுமை இருந்ததா? எனக் கேட்டதும் எனக்கு மிகவும் ஆச்சர்யமாக இருந்தது. இந்தச் சிறு குழந்தைக்கு இப்படி ஒரு பெரிய விசாரமா? என நினைத்து ஆம் உலகம் பல கோளமாகப் பிரிந்து சப்த உலகங்களாக உள்ளது.

   பூமி தோன்றிய பின்பே பசுமை அதில் உண்டாகியது என்றேன்.

   அத்துடன் அவன் விடவில்லை. இவைகளுக்கும் முன்னால் எப்படி இருந்திருக்கும்? என்றதும் என்னால் அவன் கேள்விக்கு ஒரே ஒரு பதில் தான் கூறமுடிந்தது.

   அதாவது உலகம் தோன்றுவதற்கு முன்பு எங்கும் ஒரே இருளும், ஒளியுமே நிறைந்து இருந்திருக்கும் என்று கூறி சமாதானம் செய்தேன்.

   ஆனல் பின்பு வந்த அனுபவங்கள் மூலம் என்னால் நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. பேரன் சுதர்ஷன் ரூபமாக குருவாயூர் அப்பனே எனக்கு இந்த உபதேசத்தை செய்துள்ளார் என்று.

7. நான் கைவேலைகள் செய்தவைகள் யாவும் பகவத் விஷயமாகவே அமைந்து இருந்தாலும் 13வயதில் சைனீஸ் ஒர்க்கில் புலிப்படம் போட வைத்தது என் வாழ்வில் ஐயப்பனே குழந்தையாக வரப்போகும் முன்னோட்டமாகவே அமைந்து விட்டது.

   நான் புவனேஷ்வர் வந்தபின் மணியால் கீதோபதேச ரதத்துடன் திருப்பதிப் பெருமாள் வேங்கடாசலபதியும், அலர்மேல் மங்கைத்தாயாரும் போட்டேன், இதன் சுற்றுப்புற பார்டராக சூரியன், சந்திரன், நட்சத்திரம், ஓம், ஸ்ரீ, தீபம் கண்டாமணி, பச்சைக்கிளி, தேங்காய், சந்தணப்பேலா, தாம்பூலம், பழத்துடன் வெள்ளையானையும் இருபுறமும் போட்டேன் ஏதும் அறியாமலேயே தாயார், பெருமாளுக்கு சமர்ப்பணமாகவே போட்ட யாவும் பகவத் விஷயமான விளக்கங்கள் அளிப்பதாகவே அமைந்து இருப்பது பெருமாள், தாயார் செயலே.

   இப்படத்தை ப்ரேம் செய்து மாட்டியதும் அன்று பகல் அதன்மேல் ஆந்தை போல வெண்ணிறப் பட்ச்சி கருப்பு அகலக்கண்களுடன் சிறிது நேரம் அமர்ந்து சென்றது.

   ஆந்தையாக இருந்தால் பகலில் கண் தெரியாது என்பது நிச்சயம். எனக்கு இது மிகவும் ஆச்சர்யமாக இருந்தது.

   ஆனால் அன்று இரவு பகவான்வந்து புலப்படுத்திய பின்பே பூரி ஜகன்னாதரே அப்படத்தின் மீது அமர்ந்து ஆசி கூறி உள்ளார்

என்பதையும் இப்படத்தில் உள்ள ஒவ்வொன்றிற்கும் பகவான் சரீரதத்வத்தில் விளக்கம் கூறி உள்ளார் என்பதை யாவருக்கும் தெளிவாகக் கூறவே இந்நிகழ்ச்சி.

8. இவைகள் யாவற்றையும் புலப்படுத்திய பெருமாள் எப்பொழுது நீ திருமலை வையாவூர் பெருமாளை சீதாராமஸ்வாமிகளுடன் தரிசிக்கிறாயோ அப்போது இதன் விளக்கம் பூர்த்தியாகும் என்று புலனாக்கியது போலவே நான் ஏதும் அறியாமல் பாதயாத்திரையாக பக்த-கோடிகளுடன் புரட்டாசி மாதம் 1992ல் கிண்டி அருகில் தரிசித்து பின்பே பல விஷயங்கள் தெளிவுபடப் புலனாகின.

9. 1993 ஐப்பசி திருவோண நாள் எதிர்பாராத வகையில் திருமலை வையாவூருக்கே செல்லும் பாக்கியம் கிடைத்தது. நான் மலை அடிவாரத்திற்கு சென்ற சமயம் சீதாராமஸ்வாமிகள் வராஹக் குளத்திலிருந்து பூர்ண கும்பத்தில் தீர்த்தத்துடன் கோவிந்தநாம ஸங்கீர்த்தனம் செய்து கொண்டு வரும் போது தரிசனம் செய்யும் பாக்கியம் கிடைத்தது. பின் ஆஞ்சனேயர், கருடாழ்வார் யாவர் முன்பும் ஸேவித்துக் கொண்டு திருமஞ்சனம் ஸேவித்து அன்னபடி தீப ஸேவையும் ஸேவித்த பின்பு ஸ்ரவணதீபம் கற்பூரஜோதியாக ஸ்வாமிகள் திருநாவில் அமர்வதையும் ஸேவித்து பகவானின் அருளை வேண்டி நின்றிருந்த சமயம் ஒரு அதிசயம் நடந்தது.

   அங்கு சீதாரமஸ்வாமிகள் என் கண்ணுக்கு தெரியவில்லை. ஸ்ரீ அலர்மேல் மங்கைத் தாயார் ஸமேத ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் பெருமாள் தோன்றியபின் தன் விஸ்வருப தரிசனக் காட்ச்சி தந்து நின்றதுடன் கோவிந்த நாமத்தின் பொருளையே உணர்த்திய புனிதமான ஐப்பசித் திருவோண நாள் 1993ம் வருஷமாகும்.

   திருமலைவையாவூருக்கு செல்வதற்கு முன் முதலில் மதுராந்தகம் ஏரிகாத்த ராமரை முதன் முதலாக ஏதும் அறியாமலேயே தரிசித்து அருள் ஆசி பெற்று பின் திருமலை வையாவூர் வந்தது விசேஷமாகும்.

10. மதறாஸிலிருந்து நான் ஸ்ரீரெங்கம் சென்று கொண்டிருந்த போது எப்போதும் போல 10 பைசா நாணயத்தை கொள்ளிடத்தில் போட்டேன். அன்று அந்த 10 பைசா நாணயம் திடீர் என 10தலை ராவணனாக காட்ச்சி தந்து பின் அரங்கன் பள்ளி கொண்ட கோலத்தில் தரிசனம் அளித்து பின் மறைந்தார்.

   இவைகள் யாவும் 1977 முதல் 1993 வரை எனக்கு ஏற்பட்ட அனுபவமாகும். 1978ல் இன்னொரு முக்கிய அனுபவம் என் பேரன் என் அண்ணா பேத்தி மூன்று மாதக் குழந்தை தொப்புளில் கட்டை விரலை வைத்துக் கொண்டு பின் 4 விரலையும் மேலே தூக்கியபடி என்னைப் பார்த்து சிரித்ததாகும். அப்போது என் பேரன் என் கண்களுக்கு கண்ணனாகவே காட்ச்சி தந்தான்.

இதன் பின்பே பிறப்பின் தத்வங்கள் எனக்குப் புலனாகின. 1979 குழந்தைகள் ஆண்டில் பூர்த்தி செய்த சமயம் தூத்துக்குடிக்கு சிருங்கேரி ஸ்ரீசாரதா பீட ஜகத் குரு மஹாஸன்னிதானம் ஸ்ரீஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த மஹாஸ்வாமிகள் ஸ்ரீஸ்ரீபாரதிதீர்த்த மஹாஸ்வாமிகளுடன் புதுக்குடி கிராமத்தில் தங்கி இருந்தார்கள். அதுசமயம் நான் என் கணவருடன் நேரில் சென்று பெரியவரிடம் ஹரே ராம், ஹரேகிருஷ்ண, ஹரேகோவிந்தா புஸ்தகத்தை சமர்ப்பித்தேன்.

## மஹாஸன்னிதானம்

ஸ்ரீஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் புஸ்தகத்தைக் கடாச்சித்து துஷ்டனும் நாராயணனே சிஷ்டனும் நாராயணனே. அவனே யாவ ரூபத்திலும் இருந்து உலகை ஆட்படுத்துகிறார் என்று கூறியதும் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

காஞ்சி மடம் பெரியபெரியவாள், சின்னப் பெரியவாள், ஆண்டவன் ஆச்சிரமம் கண்ணன் ஸ்வாமிகள், யாவரிடமும் சமர்ப்பித்து ஸ்ரீமுகம் பெற்றேன்.

சமூகஸேவகி ஸரோஜனி வரதப்பனும், உலக கவிஞர் கேஸ்ரீயிடம் வாழ்த்து மடல் வாங்கி உள்ளேன். இதன் பின் இப்புஸ்தகத்தை ஆல்பமாக பல படவிளக்கங்களுடன் எழுதியதை ஹிருதய கமல ஸ்ரீ என்னும் புஸ்தகத்தை எழுதினேன்.

ஐயன் அப்பனே குழந்தை கண்ணனும், முருகனும் ஆக வந்ததை இப்புஸ்தகத்தில் பல விஷயங்கள் புலப்படுத்துகின்றன.

திருமலை வையாவூரில் லட்ச்ச தீபத்தன்று 1996 சித்திரை மாதம் புஸ்தகம் ஸ்வாமி திவ்ய தம்பதிகள் ஆசியுடன் வெளியிடப்பட்டது மிகவும் விசேஷமாகும்.

1996ம் வருஷம் சித்திரை மாதம் திருமலை வையாவூர் பெருமாள் சன்னதியின் முன்பு சீதாராம ஸ்வாமிகளாலும், தாரா அம்மையாரலும் நெய் தீபங்கள் ஏற்றிவைத்த சமயம் நானும் உடன் இருக்கும் பாக்கியம் கிடைத்தது. இதற்கு முதல் நாள் ஸ்ரவணதீபம் ஸேவித்து பின் மதுராந்தகம் சென்று புஸ்தகத்தை சீதாராமர் பாதங்களில் வைத்து சகல மரியாதைகளும் பெற்று மதுராந்தகத்திலிருந்து மறுநாள் காலை தீபத்திற்கு வந்தது விசேஷமாகும். முதல் தரமும் சரி இரண்டாம் தரமும் எதிர் பாராமல் மதுராந்தகம் சென்று சீதா, ராமரிடம் ஆசி பெற்றே திருமலை வையாவூர் வரச் செய்துள்ளது பகவானின் திரு அருளே.

திருமலை வையாவூர் மலை தீபம் நடந்ததும் 13-4-96 என்று 13க்கே மதிப்பளித்து உள்ளதை கவனிக்க வேண்டும். இவ்விதம் தெய்வ அனுக்கிரகம் பூர்த்தி செய்ய மஹாபாரதத்தின் வன வாளமதாகிய 13 வருஷத்தை நினைவு படுத்தி 13னிற்கு மதிப்பளித்து உள்ளது குறிப்பிடத்தக்க சாட்ச்சி ஆகும்.

நெய் தீபம் ஸ்ரீனிவாஸர் சன்னதி முன் ஏற்றியதில் உன்னிடம் நானே வந்து ஹரே ராம், ஹரே கிருஷ்ண, ஹரே கோவிந்தா என்னும் புஸ்தகத்தை எழுதச் செய்து பின் ஹிருதய கமல ஸ்ரீ ஆகிய இப்புஸ்தகத்தையும் எழுத வைத்துள்ளேன் என்று சாட்ச்சியாக என் பக்கம் உள்ள பெரிய தீபம் கை போலவே விழுந்துள்ளதுடன் ஸ்வாமிகளின் திரு நாவில் பெரிய தீபம் நாக ரூபத்தில் வந்து அமர்வது போல விழுந்துள்ளது. ஒரு பெரிய தீபத்தை ஸ்வாமிகள் என் கையில் கொடுத்து சக்ரத்தாழ்வார் ஸன்னதியில் வைக்கச் சொன்னார், சகல மரியாதையுடன் தீபத்தை வைக்கும் பாக்கியம் கிடைத்தது.

என் தாயாரின் இல்லத்தில் 35 வருஷமாக பூஜையில் இருந்த நாகரும், கவசமும் எந்தக் கோயிலிலும் வைத்தாலும் திரும்ப வந்து பின் திருமலை வையாவூர் வினாயகர் ஆலயத்தில் வைத்தபின்பே நிலையாக அமர்ந்துள்ளதையும் பார்க்கும் போது என் மெய் சிலிர்க்கிறது. அப்பேர்பட்ட திருமலை வையாவூர் பெருமாளையும் திருப்பதி ஸ்ரீனிவாஸரையும் வணங்கி ஸ்ரீரெங்க வைபவமான இராமாயண மங்கள காண்டத்தை எழுத எனக்கு முழுத்திறனும் அளிக்கும்படி பகவானைப் பிரார்த்திக்கிறேன். தூத்துக்குடியில் புஸ்தகம் எழுதும் சமயம் 1979ல் புதுக்குடி வினாயகர் ஆலயத்தில் அரச மரப்பட்டை அபயஹஸ்தமாகவே வந்து இஸ்லாமிய தத்வத்தை விளக்கப் போகும் சாட்ச்சியும் வினாயகர் வைத்துள்ளார். இப்புஸ்தகத்தின் மூலம் மதங்களிடம் ஒற்றுமையை உண்டாக்கவே பகவான் இம் முழு முயற்சியும் எடுத்துக் கொண்டுள்ளார். மதங்களை இணைப்பது என்பது மேடு, பள்ளத்தையும் பணத்தால் உயர்வு, தாழ்வு என இருப்பதையும் சமப்படுத்த முடியாதது போல மதங்களை ஒரே மதமாகக் கொண்டுவர முடியாது, இதற்காக கலப்புத் திருமணம் செய்தாலும் இன்னொரு மதம் உருவாகவே வழி செய்யுமே தவிர இணையாது.

அதனால் பகவான் யாவ மதங்களிலும் தாங்களே உள்ள ரூபத்தை வெளிப்படுத்தி ஸர்வ தேவ நமஸ்காரம் கேசவம் பிரதி கச்சதி என்று உள்ளது போலவே சகல மதவழிபாட்டிலும் நாங்கள் இணைந்து இருந்து ஏற்றுக் கொள்வதால் மக்கள் யாவரும் இதை உணர்ந்து ஒற்றுமையுடன் செயல்படவே மக்களுக்கு கூறப்படும் நற்செய்தி ஆகும் - ஸரோஜா கோபாலன்.

## ஸ்வாமியே சரணம் ஐயப்பா

வராஹஸ்வாமியே சரணம்

திருப்பதி திருமலை வையாவூர் ஸ்ரீனிவாஸர்

திருவடியே சரணம்

மதுராந்தகம்:

ஓம் ஸ்ரீ சீதா, ஸ்ரீராம பாதகமலமே சரணம்

ஓம் ஸ்ரீ சீதாராம ஜெயம்

ஸ்ரீ வியாஸ பகவான் திருவடியே சரணம்.

ஸ்ரீ வால்மீகி முனிவர் திருவடியே சரணம்

## ஓம் ஸ்ரீ சீதாராமஜெயம்

## ஓம்: ஸ்ரீ லவ குச சமேத சீதாராம ஜெயம்

## உலகமும், ஜீவ சிருஷ்டியும் தோன்றிய விளக்கம்

கௌசலயா ஸீப்ரஜா ராமா

பூர்வா சந்தியா ப்ரவர்த்ததே!

உத்திஷ்ட நரசார்தூல

கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்!!

கௌசல்யா ஸீப்ரஜாராமா பூர்வா சந்தியா பிரவர்த்ததே! என தினமும் ஸ்ரீனிவாஸர் தன் ராமாவதாரத் தாயை தான் தினமும் வணங்குவதுடன் உலகத்தாரையும் தினம் வணங்கச் செய்கிறார்.

ஆசார்யரான விஸ்வாமித்திரர் மூலமே இந்த ஸ்துதியை அருளச் செய்து ஆசார்யருக்கும் பெரும்புகழ் அளித்து தானும் தினம் வணங்கி, நம்மையும் வணங்கச் செய்கிறார். அலமேலு மங்காள் கமேத ஸ்ரீ ஸ்ரீனிவாஸரின் பூர்ண அனுக்கிரஹம் பெற்று இப்புனித புஸ்தகத்தை பகவான், ஆசாரியாள் பூர்ண கிருபையுடன் உலகச் ஷேமார்த்தமாக எழுதத் தொடங்குகிறேன்.

பிரபஞ்சங்கள் தோன்றுவதற்கு முன் அண்டசராசரங்களும் வெப்பமும், குளுமையும் இரண்டும் கலந்து ஒரு நிலைப்பட்டு இருந்தது. காலக்கிரமத்தில் இவை இரண்டும் பிரிந்தது ஒளியான வெப்பம்

சூரியனாகவும், இருளான குளுமை சந்திரனுமாகத் தோற்றம் கொண்டன.

பல சூரியர்கள், பல சந்திரர்கள் இருப்பதாகக் கூறப்பட்டாலும் பூமிக்கான ஜீவ சிருஷ்டித் தத்வத்திற்கு மட்டுமே இங்கு விளக்கம் கூறப்படுகிறது.

சூரியன் பகல், இரவு என இரு பிரிவாக தன் தினக்கடமையை வைத்துக் கொண்டு இயற்கை தாய், தந்தையான ஒளி, இருள் ஆகிய இருவருக்கும் வணக்கம் தெரிவிக்கிறார் தினமும்.

சந்திரன் அம்மாவாஸை, பௌர்ணமி என இரு ரூபமாக தன் இயற்கைத் தாய், தந்தையை வணங்குகிறார் தினமும்.

இவ்விரண்டையும் நாம் தினமும் கண்கூடாகப் பார்க்கிறோம் அதன் பொருள் அறியாமல்.

இதே போல செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி என்ற கிரஹங்களும் தோன்றின. இந்த கிரஹங்கள் போல பூமியில் சந்திர, சூரிய சேர்க்கையால் புல், செடி, கொடி, மரங்கள் தோன்றின. ஆனால் மற்ற கிரஹங்களில் பூமியைப் போன்று ஜீவனுக்கு தேவையான எதுவும் தோன்றவில்லை.

முதலில் தோன்றியது தர்ப்பைப் புல், மரங்களில் முதலாவதாகத் தோன்றியது தென்னை மரமாகிய கற்பக விருச்சம். இதன் இரண்டு பக்கங்களிலும் தோன்றியது ஈச்சமரமும், காற்றாக பனைமரமும்.

முதல் ஜீவனாக மிகப் பெரிய முட்டை தோன்றியது. இந்த முட்டையிலிருந்து முதலாவதாகத் தோன்றிய ஜீவன் ஆயிரம் தலை கொண்ட ஆதிசேஷனே. இந்த ஆதிசேஷனே பல பிரிவுகளாக பிரிந்து 5 தலை நாகமாக உருவெடுத்தார்.

5 தலை கொண்ட ஆதிசேஷன் முதலில் தோன்றிய தென்னை மரமாகிய கற்பக விருச்சத்தை சுற்றிக் கொள்ள இதன் உடல் பெரும் முதலையாக உருக் கொண்டது. பின் பல்லியாக மாறியது. பின் பெரும் தவளையாக மாறியது. தவளையே பின் தாவும் குரங்காக மாறிய பிறகு இறகுகளுடன் கூடிய மனித உருவாக மாறியதே கருடாழ்வார்.

இவ்விதம் தென்னை மரத்தின் உருவம் நாகரூப துணையுடன் பல ரூபங்கள் காற்றாகிய பனையாலும், ஞானமாகிய ஈச்சையாலும் மாறு உருவம் கொண்ட முதன் முதலாக பகவான் ஸ்ரீமன் நாராயணன் உலகில் முதலில் தோன்றினார்.

இந்த ரூபத்தை தொடர தன் நாபீகமலத்திலிருந்து பிரம்மனைத் தோற்றுவித்தார். பிரம்மனால் உலக சிருஷ்டியை தொடர்ந்து ரட்சிக்க சிவ ரூபமாக மனித உருக் கொண்டு மூவரும் இணைந்து பிரபஞ்சத்தின் சிருஷ்டிப் பணிகளை தொடர ஆரம்பித்தார்கள்.

ஸ்ரீமன் நாராயணர் பிரம்மாவை சிருஷ்டிக்க தானே பெண்ணாக இருந்து பிரம்மனை நாபீகமலத்திலிருந்து தோன்றச் செய்தார்.

பிறகு பிரம்மனை தாயாக உருக்கொள்ளச் செய்து சிருஷ்டிகளை பேணிக் காக்க பலவித மரம், செடி, காய் கனிகளை, தான்யங்களை படைக்கச் செய்தார்.

நரநாராயணராக மனித உருக் கொண்டு பின் சிவஸ்வருபத்தை தரித்து தன்னில் பாதியாக பெண்ணிற்கு உருக் கொடுத்தார்.

ஜீவன் மனித உருக் கொள்ள பால், நீர், மண் இவை மூன்றும் தேவையானவை. இவை மூன்றும் பூமியிலிருந்தே கிடைத்ததால் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவருடன் பாலாக லஷ்மி, நீராக நீளாதேவி, மண்ணாக பூமாதேவி என 6வர் இணைந்ததே இச்சரீரமாக உருப்பெற்றது.

6வர் இணைந்த இச்சரீர தத்வத்தை விளக்கவே மலைமகளான பார்வதி மண் அதாவது புத்து மண்ணை பால், நீர் விட்டுக் கலந்து மகனை உருவாக்க அதன் தலையை சிவன் சீவ பார்வதி மறுபடி அக்குழந்தையை உயிர்ப்பித்துத் தரும்படி சிவனை வேண்டுகிறாள். சிவன் நினைத்திருந்தால் அப்படியே உயிர்ப்பித்திருக்க முடியும். அப்படிச் செய்யாமல் சிவன் தன்கண்ணில் பட்ட யானையின் தலையைக் சீவிக் கொண்டு வந்து தலை சீவப்பட்ட குழந்தையின் உடலில் பொருத்த அந்த உருவமே வினாயகராக உலகில் முதன் முதல் மனித சரீரமும் மிருக முகத்துடன் ஆதி முதல் கடவுளாகத் தோன்றினார்.

இவ்விதம் தோன்றிய வினாயகரை விஷ்ணு என்பதா? சிவன் என்பதா என்ற வினாவையே அவர் பெயரில் வரும்படி வினாயகராக உள்ளார்.

வினாயகர் ஆதியாகவும் அந்தமாக ஆஞ்சனேயரும் கூறுவதின் காரணம் விஷ்ணு ரூபமான தென்னையை ஆதிசேஷன் சுற்றிக் கொண்ட பின்பே நாராயண ரூபம் வந்ததால் சிரஸாக மட்டையுடன் கூடிய தேங்காயே இருப்பதால் விஷ்ணுவாக வந்த யானையின் சிரஸ் மிருக ரூபமாக மனிதரூபமான சிவனின் உடலுடன் பொருத்தப்பட்டதை வினாயகர் ரூபமாக ஆதி என்றும் குழந்தை ரூபம் வருவதற்கு மூன் சரீரதத்வத்தில் குரங்கு ரூபமே வருவதால் இரண்டையும் இணைத்து ஆதி + அந்தப் பிரபுவாக உள்ளபடி கூறப்படுகிறார்கள்.

சிருஷ்டியின் துவக்கத்தையும், முடிவையும் வினாயகர் கையில் ஒப்படைத்து அரசமரத்தடியில் ஆற்றங்கரையில் அதாவது நதிக்கரையில் சிருஷ்டியின் ஆரம்பம் + முடிவின் நடைமுறைகளை கண் காணிக்கும் பணியை ஏற்க வைத்துள்ளார்கள்.

தாங்கள் அறுவரும் இணைந்தே சரீரத்தில் இருந்து இயங்குவதை முருகரூபம் மூலம் உலகிற்கு உணர்த்தவே

சிவன் தன் நெற்றிக் கண்ணின் ஜீவாலை மூலம் தோன்றிய தேஜஸ்ஸை கங்கையில் விட 6 குழந்தைகளாகத் தோன்றி கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட பின் பார்வதியால் ஒன்றாக இணைக்கப்படுவதே ஆறுமுகன்.

இவ்விதம் விஷ்ணு, சிவன், பிரம்மா, லஷ்மி, பார்வதி, ஸரஸ்வதி இவ் அறுவர் இணைந்த ரூபமே நம் பிறப்பு முதல் இறப்பு வரை சரீரத்தை இயக்கும் ரூபம் என்பதை இனிவரும் விஷயங்கள் மூலம் உணர்த்துகிறார்கள்.

## பிறப்பும் அதற்கான முக்கிய ஸ்தலங்களும்

ஜீவ சிருஷ்டிக்கு வேண்டிய முக்கியப் பொருள்களின் முதன்மையானது மண்.

இந்த மண்ணின் ஆரம்ப ஸ்தானம் மலை. மலையிலிருந்து அருவியாக நதிகள் பூமிக்கு இறங்கும் போதே அதனுடன் மலையின் மண் தேய்ந்து பொடிப், பொடியாகி நதிக்கரையில் சேர்ந்து விடுகிறது.

இதை கறையான் கொண்டு வந்து சேர்த்து புத்தாக கட்டுவதில் நாகர் வந்து குடியேறுகிறது. இதைப் போலவே நம் சரீர புத்து மண்ணும் ஸ்தலங்களிலிருந்து அந்த, அந்த ஜீவனின் தகுதிக் கேற்ப உருக் கொடுக்கப்படுகிறது. அதில் ஆத்மா வந்து குடியேறுகிறது.

நாம் முதலில் பார்த்தோம் இருளும், ஒளியுமே உலகில் அண்ட சராசரங்களிலும் நிறைந்து இருந்தது. இந்த இருளும், ஒளியுமான வெப்பமும், குளிர்ச்சியும் கலந்த பாகம் வைகுண்டமாக உலக மத்தியில் அமைந்துள்ளது. மற்ற பாகங்கள் பிரிந்து 7 பாகமாக வைகுண்டத்தைச் சுற்றி எப்படி பூமிக்கு நேராக ஸப்தலோகமாக சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி என அமைந்து உள்ளதோ அதே போல 7 சுற்றிலும் பிரிந்து 7 உலகங்கள் இதே வரிசையில் உள்ளன.

ஆனால் நாம் இங்கு பூமியில் வைகுண்டத்தில் அவர்களுக்கு அமையப்பட்ட உடல் அமைப்புகளையே விவரித்து கூறி உள்ளார்கள்.

வைகுண்டத்தில் உடல் லேசாகவே இருக்கும். ஆனால் பூமியின் உடல் கூறு கனமாகவே இருக்கும். ஆனால் இந்த உடலில் வைகுண்டத்தைச் சேர்ந்த வெப்பமும், குளிர்ச்சியும் கலந்த லேசான பொருளே ஆத்மாவாக நம் உடலில் செயல்படுவதாலேயே உடல் எழுந்து, நடந்து தன் வேலைகளைச் செயய் உயிர் உள்ளவரை முடிகிறது.

இந்த ஆத்மாவே அழிவில்லாமல் இருக்கிறது. இதற்கே பாப, புண்ணியத்தின்படி மறு பிறவியில் உடல் அமைகிறது. சூரியனும், சந்திரனும் பிரிந்து காட்ச்சி தந்தாலும் அம்மாவாஸை அன்று சூரியனுடன் இணைந்து உள்ளார்கள் என்பதை சாஸ்திரமே கூறுகிறது. இந்த ரூபமே மூலம் என்பதை மாதம் தோறும் நடத்திப் புலப்படுத்துகிறார்கள்.

## நம் சரீரத்தின் ஆரம்பம் கன்னியாகுமரியிலிருந்தே ஆரம்பிக்கப்படுகிறது.

சரீரத்திற்கான மூலப் பொருள்கள் ஐந்து மண், நீர், அக்னி, காற்று, ஆகாயம் ஆகிய பொருள்கள். இந்த ஐந்தும் கிடைப்பதற்கான பஞ்சபூத ஸ்தலங்கள் பூமியில் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| திருவாரூர் | - | பிருத்வியான புத்து மண் ஸ்தலம். |
| திருவானைக்கோயில் | - | நீராகிய அப்புஸ்தலம். |
| காளஹஸ்தி | - | வாயுவாகிய தேயுஸ்தலம் |
| திருவண்ணாமலை | - | நெருப்பாகிய அக்னிஸ்தலம் |
| சிதம்பரம் | - | ஈதராகிய ஆகாயஸ்தலம் |

(இது மிதக்கும் தன்மையுடன் ஜீவனின் நித்திரைக்கும் உதவுகிறது)

திருவாரூர் தியாகராஜர் மூல மூர்த்தி புற்றிலிருந்தே உண்டாகி உள்ளார். அதனாலேயே இவருக்கு திருமஞ்சனம் கிடையாது. சகல ஜீவராசிகளும் புற்று மண்ணால் பூமியிலிருந்து கிரகித்து செயல்படுவதை நமக்குப் புலப்படுத்தவே இந்த சம்பவத்தை நிகழ்த்திக் காட்டி உள்ளார்கள்.

இங்கு ஸ்தல புராணம் திருமாலின் தலை சிவனின் வில்லின் நாணால் துண்டிக்கப்பட்டு சிவனாகிய தியாகராஜரால் நாகரின் சிரஸில் பொருத்தப்பட்டு பூமியில் புகுந்ததாக புராணம்.

இச்சம்பவம் பார்வதியால் உலக முதலில் புத்து மண்ணால் குழந்தை பிடிக்கப்பட்டு உயிர் பெற்றதை சிவனால் தலை துண்டிக்கப்பட்டு யானையின் சிரஸ் பொறுத்தப்பட்டு உயிர் வினாயகராக வெளி வந்ததையே கூறுகிறது.

ஜீவனுக்கு வினாயகரின் சிரஸ் விஷ்னு அம்ஸமே என்பதையே இந்த சம்பவம் தெளிவு படுத்துவதுடன் ஜீவ சிருஷ்டியின் மூல தத்வமும் இதில் அடங்கி இருப்பதையே கூறுகிறது.

இதைப் புலப்படுத்திய பின் நாகர் பூமியிலிருந்து வெளிப்படும் போது சிவலிங்கம் உடன் வெளிப்பட்டது என்பதும், சிரஸ் வரை சிவரூபமும், கிரஸ் விஷ்ணு ரூபம் என சிவ + விஷ்ணு ஒன்று இணைந்ததே இச்சரீரம் என்று நமக்குத் தெளிவுபடக் கூறுகிறார்கள்.

திருவாரூரே ஜீவ சிருஷ்டியின் மூலமான புத்துமண். இங்கிருந்தே உலகின் சகலத்திற்கும் மூலமாக இருந்து பிருத்விஸ்தலமாக உள்ளதை உள்ளபடி உணர்த்துகிறார்கள்.

பூமி ஒரு தாமரை மலராகவே ரூபம் கொண்டு உள்ளதால் இங்கு அம்பாள் கமலாம்பாளாக உள்ளாள் லஷ்மி + பார்வதி இணைந்த ரூபத்தை வெளிப்படுத்தவே:

# திருவானைக் கோயில் நீராகிய அப்புஸ்தலம்

திருவானைக் கோயில் ஸ்தலம் ஏற்படுவதற்கு முன் சிவனால் துண்டிக்கப்பட்ட குழந்தையின் தலை சமுத்திரத்தில் விழுந்தது வெள்ளை யானையாக உருக்கொண்டது. விஷ்ணுவாக வந்த கறுப்பு யானையின் உடல் ஸ்ரீரெங்கச் சேத்திரம் ஏற்படுவதற்கு முன்பாக பூலோக வைகுண்டமாக அமையப் போகும் ஸ்தலத்தில் விழுந்து அங்கு யானை வனமாக மாறி யானைகள் கூட்டமாக வஸிக்க ஆரம்பித்தன.

அதனால் திருவானைக் கோயிலில் நீராக ஸப்த நதிகள் இணைந்து சதா இங்கு உள்ள ஜம்புலிங்கேஸ்வரரின் திருவடியிலிருந்து வெளிப்பட வைத்து வெள்ளை யானையை அம்பாள் உச்சிகால வேளையில் பூஜை தினமும் செய்யும் வைபவத்தை வைத்து வெள்ளை யானைக்கு மதிப்பு இந்த ஸ்தலத்தில் தருகிறார்கள்.

பூமியில் நீருக்கு மையமாக திருவானைக் கோயில் உள்ளது.

பூலோக வைகுண்டமாக அமையும் ஸ்ரீரெங்கஷேத்திரத்தில் அரங்கன் வருவதற்கு முன்பாக லஷ்மி நரஸிம்மர் வந்து அமர்ந்து சிவா, வைஷ்ணவ ஒருமைப்பாட்டை உணர்த்துவதுடன் கறுப்பு யானைக்கு கோயில் மரியாதை கிடைக்கும்படி செய்கிறார்.

திருவானைக் கோயிலில் பஞ்சப் பிராகாரமும் ஸ்ரீரெங்கத்தில் ஸப்தப் பிராகாரமும் அமையச் செய்து பூலோகமும், சிவ லோகமும் ஒன்று இணைந்து மக்களுக்குப் புலப்படுத்துகிறார்கள்.

காளஹஸ்தி: வாயுவாகிய காற்றுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. பனை சிவ தத்துவமாக உள்ளதால் இதனின் காய் நீலமாக கறு நீலத்தை தன் மேல் தோலாக அமையச் செய்து சிவன் உலகில் உள்ள விஷத்தன்மையை போக்குவதுடன் உடலில் காற்று உட்புகுந்து சரீரத்தில் ஒவ்வொரு வினாடியும் சேரும் விஷத்தன்மையையும் நீக்குகிறார் என்பதை இந்தஸ்தலம் தெளிவுபடக் கூறுகிறது நமக்கு.

யானை ஓம்மாகிய பிரணவரூபம் வினாயகரிடம் இருப்பதால் இங்கு யானையும் விஷத்தன்மையை பூமியிலிருந்து சதாநீக்கும் எட்டுக்கால் பூச்சி, நாகர், நட்டுவாக்களி யாவும் சிவனை பூஜை செய்து பூமியின் விஷத்தன்மையை சதா கிரஹிக்கும் பலத்தைப் பெருகின்றன. இவ்விதம் இவைகள் கிரஹிக்கா விட்டால் பூமியில் விஷத்தன்மை பெருகி ஜீவன் உண்ணும் யாவற்றிலும் கலந்து, ஜீவிக்க முடியாமல் செய்து விடும் என்பதால் இந்த ஏற்பாடு.

ஹாளஹஸ்த்தி பூமியில் வாயுவின் மைய ஸ்தலமாக உள்ளது. இங்கிருந்து பூமியில் வாயு அழுத்தம் ஏற்படும் போது அதைக் குறைக்க

புயலாகவோ, பூகம்பமாகவோ அமலப்படுத்தி உலகைச் சதா காக்கிறார்கள்.

திருவண்ணாமலை: அக்னிக்கு இங்கு மதிப்பளிக்கப்படுகிறது. அக்னி இல்லையேல் உலகில் ஜீவன் வாழ்வதற்கான எந்தப் பணியும் சரிவர நடக்காது.

அக்னியே தீபச்சுடராக உள்ளது. அக்னியும் சூரியனிடமிருந்தே கிடைக்கிறது. அக்னி உணவைச் சமைக்க, உண்ணும் உணவு சரீரத்தில் ஜெரிக்க, யாகங்கள் யஞ்யங்கள் செய்ய, தீபமாக ஒளி வீச, இறந்தபின் உடலைத் தகனம் செய்ய என எல்லாப் பணிகளையும் செய்யும் அக்னிக்கு சதா மரியாதை அளிக்கும் ஸ்தலமாக உள்ளது திருவண்ணாமலை.

சிதம்பரம்: ஆகாசம் லேசானது. இதைக் கட்டுப் பாட்டில் கொண்டு வராவிட்டால் பூமி ஒரு இடத்தில் நில்லாமல் மிதந்து நகர்ந்து விடும் என்பதால் பகவான் நடனம் முலம் இதைக் கட்டுப்படுத்தினார். இந்த நடன சாஸ்திரம் அழியாமல் இருக்க ஆதிசேஷனே பதஞ்கலியாக வந்து 108 கரணங்களை நாட்டிய சாஸ்திரமாக அமைத்துத் தந்ததுடன் கல்வெட்டிலும் சிற்பக் கலையாக வைத்துத் தந்துள்ளார்கள்.

ஈதராகிய இந்த ஆகாயப் பொருள் ஜீவனின் நித்திரைக்கு உதவுவதுடன் இந்த லேசான பொருளால் சரீரம் எழுந்து நடமாடவும் உதவுகிறது.

வைத்தியருக்கு க்ளோரபாம் வியாதியஸ்தரை மயக்க நிலைக்கு தன் நினைவு இல்லாமல் செயல்படுகிறதோ அதே போல மிதமான அளவு நித்திரைக்கு செயல் படுகிறது.

நம் ஸ்வாஸத்தின் மூலம் சிறிதளவு காற்றுடன் கலந்து உட் சென்று ஜீவன் நடமாடவும் இரவில் உறங்கவும் இரு ரூபத்தில் ஆகாயம் உதவுவதால் சிதம்பரத்தில் இதற்கு மதிப்பளிக்கப் படுகிறது.

## ஜீவனின் பிறப்பு ஸ்தலங்கள் மூலம்

வைகுண்டத்தில் பகவானின் செயல்கள் ஆரம்பம் எப்படி நிகழ்ந்தது எனக் கூறி அதே ரூபங்களை பூலோக வைகுண்டமாக அமையப் போகும் பூமியில் தாங்கள் எவ்விதம் ஜீவனின் ஆரம்பத்தை செயல்பட உருவாக்கினார்கள் என்பது இங்கு கூறப்படுகிறது.

முதலில் ஆதிசேஷ ரூபம் வந்து அதிலிருந்து தான் உலகில் ஜீவனின் ஆரம்பம் என்பதால் நாகருடன் முதலில் புல்லாக தர்ப்பைப் புல்லே வளர்ந்தது.

மரமாக பனை, தென்னை, ஈச்சை என மூன்று மரங்களே ஜீவனின் ஆரம்பமாக வளர்ந்தன. மூன்று மரங்களிலும் மூன்று மூர்த்திகளும் இருந்தாலும் தென்னைக்கு விஷ்னு ரூபம், பனைக்கு சிவஸ்வரூபமும், ஈச்சைக்கு பிரம்மஸ்வரூபமாக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.

பூர்ண கும்பதத்வம் மூலம் பகவான் இதனை தெளிவு படுத்துகிறார். அதாவது கும்பத்தின் ஸிரஸ் விஷ்ணுவாகவும், கண்டம்வரை சிவஸ்ரூபமாகவும் பூஜிக்கப்பட வைத்து நமக்கு சரீர தத்வத்தை அதாவது மண்ணாகிய கலஸம், நீரால் நிரப்பப்பட்டு தேங்காயை, மாவிலையால் 5 தளங்களுடன் வைத்து கும்பத்தை நூலால் சுற்றி இந்த ரூபத்தையேசகல கோயில்களிலும் கோபுர கலஸங்களாக வைத்து கலஸ ரூபத்திற்கு கும்பாபிசேகம் செய்து சரீரதத்வத்தை புலப்படுத்தி ஜீவனை இந்த ரூபத்திலேயே சிருஷ்டித்து ஜீவன் வாழ கோயில்கள் மூலம் சிரஞ்சீவி தத்வம் அளிக்கிறோம் என்கிறார்கள்.

தென்னையில் மட்டையுடன் கூடிய மட்டைத் தேங்காயே ஜீவனின் ஆரம்ப கர்பத்தின் முட்டை ரூபம். அதனாலேயே தென்னையை கற்பக விருச்சமாகக் கூறப்படுகிறது.

தென்னையின் மூன்று பிரிவுகளாக பூவின் மூன்று இதழ்கள், பின் மூன்று மகரந்த வரிசை என மூன்று, மூன்றாகப் பிரிந்து அமைந்து இவை யாவும் நடுவில் இணைந்து அமைந்து பின் கூம்பாக குரும்பையாகிறது.

இவை மூன்று பாகம் நமக்கு கர்ப்பத்தில் சிசு குழந்தையாகும் ரூபத்தை தெளிவாகக் கூறுகிறது.

பூகுரும்பையாவது போல சிசு குழந்தையாக உரு எடுக்கிறது. தென்னையின் அடிப்பாகம் நாக ரூபமாகிறது. தேங்காய் மட்டையின் பசுமையான மேல் பாகம் தோலாகவும், தேங்காயின் ஓட்டின் கண்ணுடன் கூடிய மேல் பாகம் மண்டை ஓடாகவும், கீழ் ஓட்டுப்பாகம் தாடைவரை உள்ள பாகமுமாக இணைந்து செயல்படுகிறது. மட்டை ஈர்க்கும் உடலின் எலும்புக்கூடு, கால், கை எலும்புகளாகவும் மாறுகின்றன. தேங்காயின் வெண்ணிற பாகம் உடலின் மாமிசப்பகுதியாக அமைகிறது. தேங்காயின் நார்கள் நரம்பு மண்டலமாக அமைகிறது. இவ்விதம் தென்னை மரத்தின் சகலபாகமுமே நம் சரீரமாக அமைகிறது.

இது உண்மை என உணர்த்தவே எவ்விதம் தென்னை பூமியில் உள்ள அசுத்தம் நீரையும் சுத்தமாக்கி இளநீராக கொடுக்கிறதோ அது போல இச்சரீரத்தில் பல அசுத்தம் நிறைந்து இருந்தாலும் அதனின் தன்மை சிறிதும் நாவில் இல்லாமல் சுத்தமான உமிழ்நீரை ஒவ்வொரு வினாடியும் நமக்கு அளித்துப் புலனாக்குகிறார்கள்.

தென்னையின் மட்டையுடன் கூடிய தேங்காயின் மட்டையை கொடி போல் பிடித்திருப்பது வினாயக ரூபம்.

பின் 6 வளைவுப் பிடிப்பு பிரம்மா, விஷ்ணு, சிவன், ஸரஸ்வதி, லச்சுமி, பார்வதி 6வரும் சரீரத்தில் இணைந்து செயல்படும் முருகரூபத்தை புலப்படுத்துகின்றன.

பிறக்கும் வரை 6வரும் இணைந்து ஜீவனை ரட்சிக்கிறார்கள், உயிர் வாழும்வரை ஜீவனை ரட்சிக்கிறார்கள். உயிர் பிரியும் போதும் இருவர், இருவராகப் பிரிந்து ஜீவனை கடைத்தேற்றி பிறப்போ, மோட்ச்சமோ அளிக்கிறார்கள்.

உலகமாகிய பூமி தோன்றிய பொழுது உப்புநீரான சமுத்திரமே நிறைந்து இருந்தது. ஆகையால் நதிகள் ரூபத்தில் ஸ்ப்தநதிகள் வானத்திலிருந்தே சப்த லோகத்திலிருந்து பூமிக்கு கொண்டு வரப்பட்டன. நதிகள் பெண்ணாகவும் சமுத்திரம் ஆணாகவும் உருப்பெற்றன.

பூமி பெண், மலை பெண், நதிகள் பெண், பூமியின் நடுவில் உள்ள திருபாற்கடல் பெண், என்றும் ஜீவனின் பழக்க வழக்கங்கள் செயல் படுத்தும் புத்தி பெண் எனவும் நிர்ணயிக்கப்பட்டன.

ஜீவனின் படைப்பை எப்படி செயல் படுத்துகிறோம் என மக்களுக்குப் புலப்படுத்த கும்பகோணச் சேத்திரத்தில் சூரியபகவானின் ரதமாக சக்ரபாணிக் கோயிலில் உத்திராயணம், தட்ச்சிணாயனம் என ரூபம் கொண்டு கோயிலின் மூலஸ்தானத்தில் ஸப்தரிஷிகளும், ஸப்தகன்னிகளும் உள்ளார்கள்.

ஜீவனின் சிருஷ்டி புத்துமண்ணாலேயே உருவப்படுத்தப் படுவதால் சக்ரபாணியால் தன் சக்ரம் மூலம் குயவன் மண்பாண்டம் பொம்மைகளை உருவாக்குவது போல சிருஷ்டிகளை உருவாக்குகிறார்.

இந்த மண் திருவாரூரிலிருந்து கும்பகோணம் மாமாங்கக்குளம் மூலம் சக்ரபாணிக்கு அனுப்பப்பட்டு ஜீவனின் தகுதிக்கேற்ப உருவாக்கப்படுகிறது.

இதற்கு நாகர்கோயிலின் சிகப்பு, கருப்பு நிறத்து மண் கலவை சேர்க்கப்படுகிறது. அதன் பின் சுசீந்திரத்தில் உள்ள பிரம்மா, விஷ்ணு, சிவன், பார்வதி, லஷ்மி, ஸரஸ்வதி ஆகிய 6வரும் இணைந்து சரீரத்தில் வந்து அமர்கிறார்கள். இதன் பின் மண்ரூபத்தில் இருந்த கருவின் சதை தாமரை நிறம் கொண்ட சதையாகவும். அதைத்தாங்கி உருக்கொடுக்கும் எலும்புக்கூடும், பின் நரம்பு மண்டலங்களும் சரீரத்திற்கு ஏற்படுகிறது.

இந்தக் கரு வளரும் சமயம் திருநெல்வேலியில் உள்ள காந்திமதி அம்மன் சரீரத்திற்கான உஷ்ணம், குளிர்ச்சியை சமப்படுத்தி சிசு ஆரோக்கியத்துடன் வளர அருளுகிறாள். கர்ப்பரட்ச்சாம்பிகை கர்ப்பத்தை எந்தவித பின்னமும் ஏற்படாமல் வளர்த்து காக்கிறாள். ஒரு கருவைத் தாங்கும் தாய்க்கு அபாயம் ஏற்படும் போல் இருந்தால் கருமாரி அம்மன் இக் கருவை வேறு தாயின் கருவில் மாற்றி அல்லது கருப்பையில் மாற்றி அமைக்கும் பணியை ஏற்கிறாள்.

இது தேவகியின் ஏழாவது சிசுவான பலராமரை ரோகிணியின் வயிற்றில் மாற்றியது போல செயல் படுத்துகிறார்கள்.

இவ்விதம் பலவிதப் பணிகளும் ஒருசிசுவிற்கு ஒவ்வொரு நிமிஷமும் தேவைப்படுத்தப்படுகிறது.

குழந்தை கருவில் அணுப்பிரமாணமான ஆதிசேஷ ரூபமான ஐந்து தலையுடன் கூடிய நாகமே வளர்ந்து பல்லிரூபம் அடைகிறது. திருவாரூரில் ஆதிசேஷன் சிரஸால் திருமாலின் தலையைப் பொருத்தி நாகரூபம் சரீரத்தில் சிசு வளரும் ரூபத்தையே ஸ்தல புராணம் மூலம் அதுவும் திருவாரூர் சேத்திரமான பிருத்விஸ்தலம் மூலமே ஜீவனுக்கு நடத்திக் காட்டுகிறார்கள். புத்தில் நாகர் குடிபுகும் ரூபத்தையும் காட்டி இது போலவே சரீரமாகிய புத்தில் நாகர் குடியேறி சிசுரூபம் அடைவதைத் தெளிவுபடக் கூறுகிறார்கள். இவ்விதம் நாக ரூபத்திற்குப்பின் பல்லிரூபம் கொண்டு பின் தவளைரூபம். எடுத்தபின் குரங்கு ரூபம் அடைகிறது. அதன் பின் கருடரூபம் வந்து சிறகு கைகளுடன் இணைந்து மனித உருக்கொள்கிறது.

இதனை நமக்குத் தெளிவாக்கவே குழந்தை முதலில் நீஞ்சி நாக ரூபத்திற்கு மதிப்பளிக்கிறார்கள். இதில் பல்லிக்கும் இணைந்து மதிப்புதரப்படுகிறது.

பின் முன்புறம் உயர்ந்து, பின் புறம் தாழ்ந்து தவழும் நிலையில் தவளைக்கு மதிப்பளிக்கப்படுகிறது. பின் குழந்தைகள் தாங்கொண்ணா சேஷ்டைகள் செய்யும் போது குரங்கிற்கு மதிப்பளிக்கப்படுகிறது. இந்த ஜீவ சிருஷ்டியின் தத்வத்தை காஞ்சீபுரத்தில் வரதராஜர் ஆலயத்தில் வைத்து புலப்படுத்துகிறார்கள்.

6வரும் இணைந்து சரீரத்தின் பணிகளை செயல்படும் போது வினாயகராக சிவ + விஷ்ணு ரூபத்தை உருக்கொடுத்து ஜீவனின், பிறப்பையும் இறப்பையும் ஏற்கும் பணியை ஒப்படைக்கிறார்கள். இதற்காக அரசமரத்தை நதிக்கரையில் உண்டாக்கி பிரம்மா, விஷ்ணு, சிவரூபம் அடங்கி உள்ள இம் மரத்தின் அடியில் வினாயகரை அமர்த்தி கண் காணிக்க வைப்பதுடன் நாகருக்கும் பூஜைகள் நடக்க வழிசெய்கிறார்கள்.

முருகனில் 6வரும் சேர்ந்து உலகப்பணியை ஏற்க வைக்கிறார்கள்.

வினாயகரிடம் ஆத்மாவை ஒப்படைக்கவே முருகன் பிரம்மமாகிய மயிலில் ஏறி உலகைச் சுற்றிவர வினாயகர் அம்மை, அப்பனை சுற்றி வலம் வந்து மாம்பழத்தைப் பெறும் நிகழ்ச்சி.

இவ்விதம் பூமியைப் படைத்த உடனேயே இந்த நியதிகளை நிகழ்த்திவிட்டார்கள்.

பிரம்மா: படைப்புத் தொழிலை ஏற்று தான் படைக்கும் ஜீவன்களுக்கு அம்மாவாக இருந்து ஜீவன் உண்டு வளர பலவித தான்யங்கள், பூ, காய், கனி வகைகளைப் படைத்தார்.

ஆனால் முதலில் பிரம்மனால் படைக்கப்பட்ட ஜீவன்கள் அழகற்றவர்களாகவும் நெறி, முறைகள் அறியாத காட்டு மிராண்டிகளாகவே கிடைத்த காய், கனி, கிழங்குகளுடன் வேட்டையாடி மிருகங்கள் பட்ச்சிகளையும் உணவாக உண்டு சுற்றித்திரிந்தார்கள். இந்தக்காலம் கிருதயுமாக இருந்தது.

சிவன்: பிரம்மனால் படைக்கப்பட்ட ஜீவன்களை அதன் நடைமுறைகளை கண்காணித்து இறந்தபின் நெருப்பில் எரித்து சாம்பலாக்கும் பணியை ஏற்றார்.

வினாயகர் ஜீவனின் ஆத்மா உட்புகுந்து வாழ்ந்து வெளியேறும் வரை காத்து வெளியேறிய பின் தன்னில் சுமந்து முருகனிடம் ஒப்படைக்கிறார். வினாயகரால் ஒப்படைக்கப்பட்ட ஆத்மாவை தோணியில் ஏற்றிச் சென்று திருவேணி சங்கமத்தின் வாயிலில் சேர்க்கிறார். சங்கமவாயில் மூலம் உட்புகுந்து பாதாளம் சென்றடைந்த ஆத்மா அங்கு திருபாற்கடலில் பள்ளி கொண்ட திருமால் லச்சுமி மூலம் ஜனன மோட்சத்தின் தீர்ப்பை அளித்து பின் மகாவிஷ்ணுவிடம் மற்றபணிகளை ஒப்படைக்கிறார்கள்.

பூலோகத்தில் விஷ்ணுவும் + லச்சுமியும் பூலோக மையமான திருபாற்கடலிலும், பார்வதி பரமசிவன் கைலாயத்திலும், பிரம்மனும் ஸரஸ்வதியும் ஆகாயஸ்தலத்தை பிரம்ம பதமாகவும் பூமிக்கான நியதிகளை செயல்படுத்துகிறார்கள்.

சிவனின் வாஸஸ்தலமான கைலயங்கிரியில் பனியான குளுமைக்கு முதலிடம் தந்து சரீரத்திற்கு வேண்டிய குளுமையை சதா அளிக்கிறார். இம்மலை தொடர்பு கொண்டதே உலகில் உள்ள சகல பனி மலைகளும்.

விஷ்ணுவும் + மகாலட்ச்சுமியும்

தந்தையும் + தாயுமாகவும்

சிவனும் + பார்வதியும்

அம்மை + அப்பனாக

பிரம்மாவும் + ஸரஸ்வதியும்

அப்பாவும் + அம்மாவுமாக

இணைந்து செயல் படுவதே உலகமும் நம் சரீர தத்வமும் ஆகும்.

பிரம்மன் நம்மைப் படைத்ததுடன் நில்லாமல் நமக்கு தேவையான உணவுப் பொருள்களுடன் மருத்துவ தத்வம் நிறைந்த மூலிகைப் பொருள்களையும் படைத்துத்தந்துள்ளார். ஒரு நல்லது இருந்தால் ஒரு கெடுதலும் இருக்கும். நல்ல பொருள்களுடன் நச்சுப் பொருள்களும்

உண்டாவதை விஷமூலிகை மூலம் பூமியிலிருந்து நீக்கி பூமிக்கும், ஜீவனுக்கும் நன்மைகளைச் செய்கிறார்.

ஸரஸ்வதி புத்தியாக நம் சரீரம் செயல்பட உதவுகிறாள். ஸரஸ்வதியை நாம் அம்மாவாக பெயரிட்டு அழைக்காமல் பிரம்மனே இங்கு அம்மாவாக உள்ளார்.

பிரம்மா, பிரம்மா என்று சொல்லும் பொழுது இந்த அம்மா என்ற துவனியே வெளிப்படுவதை உணரலாம்.

அம்மை, அப்பனாக சிவனும், பார்வதியும் ஜீவனின் கல்யாண நலன்களை சதா கண்காணிக்கிறார்கள். நிருத்திய கலைக்கு முக்கியம் அளித்து ஜீவன் உலகில் உள்ளவரை சம சீருடன் வாழ வழிவகுக்கிறார்கள்.

உலகில் தோன்றிய ஜீவன்கள் பகுத்தறிவு அற்றவர்களாக செயல் படுவதை நீக்க மனுஸ்முருதி என்ற சாஸ்திரநூல் இயற்றினார்கள்.

பின் 4 வேதங்களைப் படைத்து வேதங்கள் அழியாமல் காக்கும் வழிவகைகளையும் இயற்றித் தந்தார்கள்.

மக்கள் நெல், கோதுமை, தான்யங்கள், காய்கறி, பழங்களை பயிரிட்டு வாழும் வகைகளை இதனால் ஜீவன் பயன்படுத்த ஆரம்பித்தன.

இவ்விதம் வாழும் மக்கள் 10 வித நற்பண்புகளுடன் 10 வித தீய செயல்களை நீக்கி வாழ வைக்கும் பணியை பகவான் ஏற்றார்.

வினாயகரூபம் மூலம் மனித, மிருகரூபத்தை அமைத்துக் கொண்ட விஷ்ணு, சிவ ரூபத்தை,மூலமாகக் கொண்டு தசாவதார அவதாரங்களை செயல்படுத்தினார்கள்.

1. 4 வேதங்களைப் படைத்த கடவுள் இதை ஜீவன் உலகம் உள்ளவரை பேணிக் காக்கும் வழியை மச்சாவதாரம் மூலம் நிலையாக்கி உள்ளார்கள்.

அதாவது சரீரம் ஒரு மீனைப்போல் பவ சாகரக்கடலில் நீந்தவேண்டி வரும். இதற்கு வேதங்களே துணை.

இதனை அழிக்க முற்படுபவர்கள் கொடிய ராட்ச்சசர்கள் ஆவார்கள். எப்பொழுது வேதங்களை மங்கச் செய்யும் அரக்கர்கள் தோன்றுகிறார்களோ அப்போது அத்தீயவர்களை அழித்து அவர்களிடமிருந்து நான் காப்பேன் என்று மச்சாவதாரம் எடுத்து 4 வேதங்ளை அசுரனிடமிருந்து காத்து ரட்சிக்கும் அவதாரமாக காட்டி உள்ளார்கள். ஜீவனைக் காக்கவும் உலகம் வாழவும் வேதங்களைக் காப்பாற்றி வேதம் ஓதும் பணியை வேதவித்பன்னர்களிடம் ஒப்படைத்து ரட்ச்சிக்கிறார்கள்.

வேதங்களை அழிப்பவர்கள் அசுரர்களாகவும் காப்பவர்கள் நற்பண்பு உள்ளவர்களாவும் மதிக்கப்படுகிறார்கள்.

2. வராஹாவதாரம்: வராஹாவதாரம் மூலம் பூமியை நற்பண்புகளால் சதா காக்கவகை செய்து தருகிறார்.

வராஹாவதாரம் மூலம் பூமிப்பிராட்டிக்கும் பகவானுக்கும் பிறந்தபிள்ளை நரகாசுரன். இவன் பல தீய செயல்களுக்கு ஆளாகிறான் என்றால் சாதாரண ஜீவன் இதற்கு ஆட்பட்டே ஆவார்கள் என்பதை இதன் மூலம் காட்டி அந்த பாபங்களை செய்யாமல் வழிவகைகள் வகுத்து பக்குவப்படும் வழியை காட்டுகிறார்கள்.

பூமியில் வாழ்க்கை பலவித துன்பங்களால் நிறைந்தே இருக்கும். துன்பமாகிய அசுத்தத்தை நற்பண்பால் நீக்கிக்கொள்ள பழகிக் கொள்ள வேண்டும். சரீர அசுத்தம் போல பூமியிலும் அசுத்தம் நிரம்பியே உள்ளது. சரீர அசுத்தத்தை வடிகட்டி வெளியேற்றுவது போல பூமியின் அசுத்தம் இயற்கையின் காரணமாக ஏற்படுவதை நாங்களே நீக்கி பூமியை பரிசுத்தமாக்கி விடுகிறோம். ஆனால் ஜீவனால் ஏற்படுத்தப்படும் பாபமாகிய அசுத்தச் சுமையை ஜீவனே ஏற்கவேண்டும். அசுத்தமான பாபச் சுமையை செய்பவர்கள் அரக்கராகிறார்கள். பூமியை புண்யச் சுமையை செயலால் காப்பவர்கள் பூமியாகிய தானய சமநிலையில் வைத்துக் காப்பவர்களாகிறார்கள். இதனையே வராஹவதாரத்தில் வைத்து அரக்கனை அழித்து பூமியைத் தூக்கி சமநிலைப்படுத்து வதாகக் காட்டி உலகிற்கு நற்பண்பை போதிக்கிறார்கள்.

ஸ்ரீகூர்மாவதாரம்: கூர்மாவதாரம் மூலம் பகவான் சரீரதத்வத்தையும், அதன் மூலம் ஜீவனுக்குச் சகிப்புத்தன்மையையும் போதிக்கிறார்.

சரீரதத்வம் என்பது மலை, நாகம், பால் என சரீரத்திற்கான மூலம் பொருள்கள் என ஜீவனுக்குத் தெரிவிக்கிறார். மலையைக் கடையக், கடைய அதனின் மென்மையான மண் பாலுடன் கலக்கிறது. பால் என்றால் அதனில் நீரும் கலந்தே இருக்கிறது.

திருபாற்கடலைக் கடைய தேவர்கள், அசுரர்கள் என இரு பிரிவினைச் சேர்ந்தவர்கள் கடைகிறார்கள். அதாவது சரீரப் பணி நல்லது, கெட்டது என இருவகையால் இழுக்கப் படுகிறது இதுவே அமிர்தம், விஷம் என மூலமாகத் திருப்பாற்கடலிலிருந்து வருகிறது. முதலில் கடைந்த வேகத்தில் விஷமே முன் வருகிறது. அது போல நல்ல விஷயங்கள் உலகிற்கு கிடைக்க வேண்டும் என்றால் அதற்கு தடையாக பலதீமைகளே முன் நிற்கும்.

சிவன் எப்படி ஆலகால விஷத்தைத் தன் கண்டத்தில் அடக்கி உலகைக் காப்பாற்றினாரோ அது போல ஜீவன் தீமைகளை அடக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

அமிர்தத்தைக் கடைந்து எடுக்க மந்திர மலையை ஆமையாக கூர்மமாக விஷ்ணு வந்து தாங்குகிறார். முதுகின் மேல் பாறாங்கல்லாகிய

பெரியமலை. அதை வாஸிகி என்ற நாகம் கயிறாக இருந்து அசுரராலும், தேவராலும் இருபுறமும் இழுக்கப்படுகிறது. அவ்விதம் மலையை இழுக்கும் பொழுது பகவானின் முதுகின் மீது உருண்டு, உருண்டு அழுத்தும் போது எப்பேர்பட்ட வலி பகவானுக்கு ஏற்பட்டு இருக்கும் என யோஜித்துப் பார்த்தால் அந்த வலியை நம்மால் தாங்கிக் கொள்ளவே முடியாது. அப்பேர்பட்ட பாரத்தை பகவான் ஜீவனுக்காக தாங்கிக் கொள்கிறார்.

அப்படித் தாங்கிக் கொண்டதால் அமிர்த மதனத்தின் மூலம் கற்பகவிருச்சம், ஐராவதம், சந்திரன், காமதேனு முதலியவர்களுடன் மகாலட்ச்சுமியும் வந்தாள். இங்கு ஒன்று கவனிக்க வேண்டும். கற்பகவிருச்சம் முதல் ஐராவதம், சந்திரன், காமதேனு வரை ஜீவனின் அடங்கி உள்ள இருந்த தத்வத்தையே இதன் மூலம் காட்டுகிறார் என்பதையே உணர வேண்டும்.

மோகனாவதாரம் மூலம் ஆணும் நானே, பெண்ணும் நானே எனப் புலப்படுத்துகிறார். பின் லட்ச்சுமி யார்? என்றால் பகவானின் ரூபமே லட்ச்சுமி. சிருஷ்டியின் காரணமாக இருபிரிவாக இருந்து சிருஷ்டியைத் தொடர்கிறார்.

பகவான் ஆணும், பெண்ணுமாக இணைந்து இருந்தே பிரம்மனை சிருஷ்டிக்கிறார். பிரம்மன் மூலமே சிருஷ்டிப்பணி தொடர்கிறது. இதையே சிவஸ்ஸவருபத்தில் அர்த்தநாரியாக இருந்து வெளிப்பட காட்டுகிறார் சரீர தத்வத்தை.

இது போல ராகு, கேது அமிர்தத்தைத் திருட்டுத்தனமாக உண்டதால் ராகுவின் தலை துண்டிக்கப்பட்டதாக இருந்தாலும் ராகுவும், கேதுவும் சரீர தத்வத்தில் இருப்பதால் நவக்கிரஹ அந்தஸ்துப் பெறுகிறார்கள்.

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனியுடன் ராகுவும், கேதுவும் ஜீவனில் அடங்கி இருப்பதால் நவக்கிரஹ அந்தஸ்துப் பெறுகிறார்கள். சூரியன் நடுவிலும் அவரைச் சுற்றி மற்ற கிரஹங்களும் வரும் படி அமைத்துக் காட்டுகிறார்கள்.

சூரிய வெப்பமும் சந்திரனாகிய குளுமையும் சேர்ந்ததே நாகருபமாக முதல் வடிவெடுத்ததால் அவர்களால் சுயமாக தங்களிடம் ஏற்படும் விஷத்தன்மையை நீக்கிக் கொள்ள முடியாதென்பதாலேயே சூரிய சந்திர கிரகணம் மூலம் நாகருபமாகிய ராகுவும் கேதுவும் அவர்களிடம் ஏற்படும் விஷத் தன்னமையை நீக்குகிறார்கள். கிரஹண காலத்தில் உணவு உண்ணக் கூடாது என்பது காற்றில் அதன் விஷத் தன்மை பரவும் என்பதாலேயே. உணவுப் பண்டங்களில் தர்ப்பத்தைக் கிள்ளிப் போட்டு காப்பாற்றுவதும், பின் வீட்டைக் கழுவி, குளித்து பகவானின் விஷத்தன்மை நீங்கி புனிதமடைந்ததை கொண்டாட மந்திர உச்சாடனம் மூலம் தர்ப்பித்து ஜெபம் செய்வது என்று பழக்கம் ஏற்படுத்தப்பட்டது. பிற தேசங்களில்

பிரமதத்தவர் இதை செய்ய வேண்டியது இல்லை. ஏன் என்றால் இதற்கென்று அமைக்கப்பட்ட வேத வித்பன்ன சமுதாயம் செய்தாலே உலகம் பூரா உள்ள மனிதகுலம் ஷேமநலம் ஏற்பட்டு விடுகிறது. இதில் இவ்விதம் பலதத்வங்கள் அடங்கி உள்ளன.

## நவக்கிரஹ விளக்கம்

1. சூரியன் - வெப்பம் - ஆத்மாமூலம் - நாராயணன்
2. சந்திரன் - பனி - ஆத்மாவின் இணைப்பு - சிவன்
3. செவ்வாய் - ரத்தமாக உடலில் - அங்காரகன் - அம்பாள் ஜீவநாடியாக
4. புதன் - புத்தி - கல்விக்கும் அறிவு செயல்பட உதவுபவர் - ஸரஸ்வதி + பிரம்மா கபாலம் முதல் எலும்புக்கூடாக
5. வியாழன் - குரு - ஜீவனின் கல்யாண நலன்களைத் காத்து கல்யாணத்திற்கு அதிபதியாக இருந்து உடலின் பிணிகளைப் போக்கும் சிறந்த பணிகளை ஏற்கிறார்.
6. வெள்ளி - சுக்கிரன் - ஐஸ்வர்யத்தின் அதிபதியாக லட்ச்சுமியின் ஆட்ச்சி
7. சனி - சனீஸ்வரன் - சனிபகவானே ஜீவனின் ரட்ச்சகன். ஜீவனின் புண்யத்தை ஏற்று பாபத்தை துடைப்பவர்.

8,9. ராகு + கேது - ராகு + கேது சிரஸ்வரை நாகவடிவத்திற்கு பின் சிரஸ் முதல் சரீர நரம்பு மண்டலங்ளாக அமைந்து ரத்தத்தை அதன் தன் பாகத்திற்கு எடுத்துச் சென்று இச்சரீரத்தில் ரத்த ஓட்டம் சீராக செயல்பட வழிவகுப்பவர்கள்.

இவ்விதம் ஜீவனின் பிறப்பு ரகஸ்ஸியம் பூராவும் திருபாற்கடல் கடைந்த நிகழ்ச்சி மூலம் தெளிவுபடக் கூறி நவக்கிரஹங்களின் செயல்களையும் பூராவும் கூறி உள்ளார்கள்.

கூர்மாவதாரம் மூலம் சகிப்புத்தன்மை, பொறுமை, இவைகள் மூலம் ஜீவனுக்கு ஏற்படும் நன்மைகளைக் கூறியபின் சரீரத்தின் ஒவ்வொரு அங்கத்தின் விபரங்களைக் கூறுகிறார்.

தென்னையாகிய கற்பகவிருச்சமே சரீர அமைப்பு எப்படி என்பதைக் கூறுகிறார்.

தென்னையின் மட்டைத் தேங்காய் முகமாக அமைந்து உள்ளது.

சரீரத்தின் கழுத்துப்பாகம் வரை ஆதிசேஷனாகிய ஐந்து தலை நாகம் பஞ்சபூதங்களைப் பிரித்துக் கொடுக்கும் பாகமாக இருப்பதுடன் ஹிருதயத்தில் இருக்கும் பகவானைத் தாங்கி சதா குடை பிடித்து வணங்கிய வண்ணம் இருக்கிறார்.

ஸ்ரீமன் நாராயணின் நாபிகமலத்திலிருந்து தாமரைக் கொடியில் பிரம்மன் இருந்து ஜீவனின் சிருஷ்டியைத் துவங்கும் அதேருபம் குழந்தை பிறப்பில் மட்டைத் தேங்காயின் ரூபமே கருப்பையாக இருந்து முன்பு கூறியது போல மூன்று, மூன்று, மூன்றாக இருந்து கரு உருவாகி வெளியேறும் போது தொப்புலுடன் ஒட்டிய கொடியுடன் அதே பிரம்ம ரூபத்துடன் பிறக்கிறது. அம்மா, அம்மா எனபடைத்த பிரம்மனை கூவி அழைத்தபடியே பிறக்கிறது.

காமதேனுவை பசுவாகப் படைத்து ஜீவனுக்கு தேவையான பாலை பிறப்பு முதல் வாழும் காலம் வரை கொடுத்து உதவும் பாலை சிசுவைத் தாங்கி கருவில் வளர்த்த தாயிடம் அளித்துப் பேணுகிறார்.

வயிறு முதல் முழங்கால் வரை சிவ தத்வம் உள்ளது. முழங்கால் முதல் பாதம் வரை விஷ்ணு ரூபம் உள்ளது. எனவே சரீரம் எழுந்து நடமாடும் பலத்தை விஷ்ணுவின் பாதம் நலுங்காமல் பாதுகாக்கிறது.

இதன் பின் பூர்ண கும்பதத்வமாக சரீரம் உள்ளதை நமக்குப் புலப்படுத்துகிறார்.

தேங்காயின் மூன்று கண்கள் முகத்தில் இரு கண்களாக இருக்கும் ரூபத்தில் கண்ணின் வெள்ளை முழி பௌர்ணமியாகவும், கருப்பு முழி அம்மாவாஸையாக இருந்து சந்திரனாகிய சிவரூபமாகவும், அதில் சூரிய ஒளி படும் போது பார்வையை அளிக்கும் சூரிய நாராயணனான விஷ்ணு ரூபமாக அமைந்து முகத்தின் விழியும், பார்வையும் சூரிய, சந்திரனாகிய சிவ + விஷ்ணு ரூபமாக இருந்து பகவானால் உலகைக் காண முடிகிறது எனப் புலப் படுத்துகிறார்கள்.

நெற்றியின் மேல் கண்ணாக தேங்காயின் ரூபம் பிரம்ம வாஸலாக ஆத்மா உட்புகவும், வெளியேறவும் வழியாக அமைத்து தந்துள்ளார்கள்.

பூர்ண கும்ப கலஸம் முகம் விஷ்ணு ரூபமாகவும், கண்டம் ருத்ரரூபமாகவும், மத்யம் பிரம்ம ரூபமாக இதையே கூறுகிறது. தேங்காயின் நார் நரம்பு பாகமாக அமைந்து மண் கலஸத்தில் நீர் உள்ளது போல சரீரத்தில் ரத்தம் நிரம்பி, வெண்மைப்பாகம் சதையாக இருந்து ஜீவன் உருவாகும் தத்வத்தை கூறுகிறார்கள். கலஸத்தின் மேல் ஐந்து தள மாவிலையை வைத்து தேங்காயை பூர்ணமாக்குவது மாவாயிக ஆத்ம ஸ்வரூபத்தை பூர்ணமாக்குவது மாவாயிக ஆத்ம ஸ்வரூபத்தை மாவிலை முலம் காட்டுகிறார்கள்.

பிரளயம் முடிந்து பிரம்மாவால் அமிர்தகலஸம் கும்பகோணத்தில் விழச்செய்து மகாமகம் குளம் மூலமே சக்ரபாணியால் ஜீவ சிருஷ்டியின் விதை தொடங்கப் படுகிறது என்பதையே கலஸ ரூபமாக புலப்படுத்துகிறார்கள்.

முகத்தில் நாஸித்துவாரம் ஓம் என்ற பிரணவரூபம் தலைகீழாக அமைந்து ஜீவன் ஸ்வாஸிப்பது பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இணைந்த ரூபமாக வைத்துள்ளார்கள். ஜீவன் உள்ள வரை வாழவைக்கும் ஸ்வாஸவாஸலாக மூவரும் இருந்து காக்கிறார்கள்.

ஓம் என்ற பிரணவரூபம் மூலம் ஔன்று உட்புகும் காற்று விஷ்ணு ரூபமாகவும் ம்என்று வெளியேறும் காற்றின் மூலம் சரீர விஷத்தை ஒவ்வொரு வினாடியும் சுத்திகரித்து வெளியேற்றும் பணியை சிவன் நடத்தி சிவரூபத்தையும் விஷக்காற்றை சுத்திகரித்து தரும் பணியை விருச்சமாக இருந்து பிரம்மன் நடத்துவதால் பிரம்ம ரூபமுமாக மூவரும் இருந்து செயல்படுத்துவதே பிரணவமாக ஓம் என்பதாகும்.

காதில் சங்கு, சக்ரத்துடன் நடுப்பாகம் வினாயகர் காது போலவும் அமைந்து உள்ளதைக் காணலாம். காது நடுப்பாகத்திலும் முழங்கால் முதல் பாதம் வரையும் வினாயகர் ரூபம் இருப்பதாலேயே காதைப் பிடித்துக் கொண்டு காலை மடக்கி தோப்புக்கரணம் போடும் வழக்கத்தை ஏற்படுத்தி புலப்படுத்துகிறார்கள்.

இவ்விதம் அமைந்த முகத்தில் வாய் வில்லின் ரூபமாக அமைந்து மேல் உதடு விஷ்ணுவாகவும், கிழ்உதடு சிவமாகவும் இருந்து நாகரூபமாகவே நாவு அமைந்து பேசும் திறனை அளிக்கிறார்கள். பேச்சு இன் சொல், கடுஞ்சொல் என இருவகையாக இருக்கும் போது இன் சொல்லை புஷ்பபாணமாகவும், கடுஞ்சொல்லை ஹிருதயத்தைத் தாக்கும் முட்பாணமாகவுமம் சொல் புலனாக்குகிறார்கள்.

சரீரத்தின் நவத்துவாரங்களை எலியே சரியாக அமைத்துத்தருகிறது.

இப்பேர்பட்ட சரீரத்தின் வயிறு முதல் முழங்கால் வரை சிவ ஸ்வரூபமாக இருந்து ஜீவன் உண்ணும் உணவை ஜெரிக்கச் செய்யும் அக்னியாகச் செயல்படுகிறார்.

ஹிருதயத்தில் ஹிருதய கமல ஜோதியாக தாமரை மேல் அகல் தீப ஜோதியாக இருக்கும் தீபத்தில் ஆத்ம ஜோதியாக முத்தேவியரும் ஸ்ரீ ரூபத்தில் அமர்ந்து சரீரப் பணிகளை செயல் படுத்துகிறார்கள்.

இந்த ஆத்மஜோதியையே ஆதிசேஷன் குடை பிடித்து சதா சரீர ஸேவையை பஞ்ச பூத வாசலாக இருந்து செயல் படுத்துகிறார்.

கைகள் இரண்டும் கருடனின் ரூப இறக்கைகளே கைகளாக அமைந்ததுடன் 5 விரலும் 5 தத்வத்தைப் புலப்படுத்துகின்றன. வலக்கையின் நடுவிரல் விஷ்ணுவாகவம், ஆள்காட்டி விரல் சிவனாகவும், மோதிர விரல் பிரம்மமாகவும் இருந்து சுண்டுவிரல் முருக ரூபமாகவும், கட்டை விரல் வினாயக ரூபமாகவும் இருந்து செயல்படுகிறார்கள் இடக்கையின் நடுவிரல் லட்ச்சுமியாகவும், ஆள்காட்டிவிரல் பார்வதியாகவும், மோதிரவிரல் ஸரஸ்வதியாகவும் இருப்பதுடன் சுண்டு விரல் வள்ளி + தேவயானை இணைப்பாகவும், கட்டைவிரல் சித்தி + புத்தி இணைப்பாகவும் இருந்து சரீர வலப் பாகத்தை ஆணாகவும், இடப்பாகத்தை பெண்ணாகவும் இருந்து சகல பணிகளையும் செயல் படுத்துவதுடன் ஜீவன் செய்யும் பாவ, புண்ணிய கணக்குகளை சரிவர எடுத்து ஜீவன் உறங்கும் போது தீர்மானிக்கிறார்கள்.

இவ்விதம் சரீரம் முழுவதும் 6 வரும் இணைந்த ரூபத்தைக் காட்டியபின் இச் ஜீவன் உலகில் ஜீவிக்க வழி செய்கிறார்கள்.

ஜீவனின் பிறப்பின் தத்வத்தைக் காஞ்சீபுரம் வரதாஜப் பெருமாள் சன்னதி சுற்றுப் பிரகாரத்தில் சந்திர + சூரிய ரூபத்தை ஒன்று இணைந்த ரூபத்தை வைத்து அதன் நடுவில் பல்லி ரூபத்தை எந்தக் கோணத்தில் பார்த்தாலும் இந்த ரூபத்தில் இணைப்பு உள்ளதைக் காட்டி ஜீவ சிருஷ்டித் தத்வத்தைக் காட்டுகிறார்கள்.

காஞ்சீபுரம் பூமிசுழலும் தன்மைக்கு நடு நாயகமான ப்ருத்திவி ஸ்தலமாக உள்ளது. இங்கு அன்னை காமாட்ச்சி அம்மன் தன்னுடைய ஸ்ரீசக்கரம் மூலம் பூமியை சுழலச் செய்யும் பணியை ஏற்கிறாள். சக்கரம் சுழல ராடுதேவை என்பதால் மகாமேறுவாக மாங்காட்டு அம்மன் இருந்து செயல்படுகிறாள். இவ்விதம் இருவரும் இணைந்து செயல் பட்டாலும் இணைந்து செயல்பட மின்சாரம் தேவை என்பதால் திருவானைக் கோயிலில் அகிலாண்டேஸ்வரி தன் பாடகம் மூலம் ஜம்புலிங்கேஸ்வரி திருவடியிலிருந்து ஸப்தநதிகள் மூலம் வெளியேறும் நீரிலிருந்து மின்சாரத்தை எடுத்து மகாமேருவுடன் கூடிய ஸ்ரீசக்ரத்தில் பாய்ச்ச ஸ்ரீசக்ரம் சதா ஒரு நிலையில் பூமி ஒரே பக்கமாக சுழலக் செய்ய பூமியாகிய உலகம் சதா சுழன்று கொண்டே இருக்கிறது. இதன் மூலம் பூமி சுழலச் சுழல ஜீவனுக்கு தேவையான சகல பொருள்களும் உற்பத்தி ஆகிக் கொண்டே இருக்கின்றன.

திருபாற்கடல் அமுதமதனம் மூலம் சிருஷ்டித் தத்வத்தை காட்டி பூமி சுழற்சியின் மூலம் ஜீவனுக்கு தேவையான சகல பொருள்கள் கிடைக்க வழி செய்வதைச் ஜீவனுக்கு காட்டுகிறார்கள்.

திருபாற்கடல் மதனச் சுழற்ச்சி இருபுறம் தயிரை மத்தால் கடைவதைப் போலவும்

பூமிச்சுழற்சி ஒரே புறமாகவும் சுழலும் வித்யாஸத்தை இதன் மூலம் காட்டுகிறார்கள்.

திருவாரூர் பிருத்விஸ்தலம் ஜீவ சிருஷ்டிக்கும், காஞ்சீபுர பிருத்விஸ்தலம் சைவ + வைஷ்ணவ ஒருமைப்பாட்டுடன் ஜீவ சிருஷ்டியின் மூலத்தைக் காட்டி பூமி சுழலும் முறையையும் காட்டி உள்ளார்கள்.

காஞ்சியில் ஏகாம்பரேஸ்வரர் ஆலயத்தில் மாமரத்தை அமைத்து இதில் ஜீவனின் கல்யாணத்தை நடத்தச் செய்து மாவாகிய ஆத்மாவின் கல்யாணத்தை நிர்ணயித்து பிரம்மா அத்தி மரத்தில் அத்திவரதானாக இருக்கிறார். இவ்விதம் காஞ்சியில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இணைத்து ஜீவனின் பிறப்பைக் கண்காணிக்கிறார்கள்.

காஞ்சியில் 4 வேதங்களும் அழியாமல் காக்கும் பணியும் ஏற்கிறார்கள்.

இவ்விதம் பூமியைக் காக்கும் வேதத்தை மச்ச அவதாரம் மூலமும், வராஹவதாரம் மூலம் பூமியைக்காக்க புலனாக்கிய பின் வராஹாவதார மூலப் பெருமாளாக ஸ்ரீ முஷ்ணத்தில் அமர்ந்து காப்பாற்றுகிறார் லச்சுமி வராஹப் பெருமாள். கூர்மாவதாரம் மூலம் ஜீவனின் பிறப்பையும் அதனைக்காக்க தாங்கள் ஏற்கும் பணிகளையும் கூறுகிறார்கள். கூர்மாவதாரம் மூலம் ஜீவனின் சகல சரீரதத்வத்தை கூறுகிறார்கள்.

இதற்கு வேண்டிய நல்ல குணங்களை தேவகுணமாகவும், தீய குணங்களை ராட்ச்சஸ குணமாக கூற தாங்களே அசுர அவதாரங்களும் எடுக்கிறார்கள். ஜெய, விஜயன் இருவரும் பகவானின் வாயில் காப்போனாக இருந்தவர்களே. சாபத்தினால் ஹிரண்யன், ஹிரண்யாஷன், இராவணன், கும்பகர்ணன், கம்ஸன், சிசுபாலன் என ரூபம் கொண்டு தீய குணங்களே தனதாக்கிப் பிறக்கிறார்கள்.

இந்த அசுரர்கள் பிறப்பும் ஜீவனுக்கு நல்லது எது கெட்டது எது என பகவானால் அழுத்தமாக புராணமாக என்றும் அழியாமல் வைத்துள்ள காவியமே.

ஜெய, விஜயன் என்பவர்கள் தீயவர்கள் அல்ல. ஆனால் அவர்கள் மூலம் ஜீவனுக்கு நல்லதைச் சொல்லவே என நாம் நன்றாகப் புரிந்து கொள்ளவே பகவானால் நடத்தப்பட்ட நாடகம்.

சாபம் கிடைத்தபின் ஜெய, விஜயன் தாங்கள் இதிலிருந்து விமோசனம் எப்படி அடைவது என மார்க்கம் கேட்க்க பகவான் நீங்கள் நல்லவர்களாக 100 பிறவி எடுத்து எங்களை அடைகிறீர்களா? அல்லது தீயவர்களாக மூன்று பிறவி மூலம் எங்களை அடைகிறீர்களா? எனக் கேட்க்க இருவரும் மூன்று பிறவி தீயவர்களாக எடுத்து சாப விமோசனம் எனக் கூறியதே மேற் சொன்ன மூன்று பிறவிகளும்.

இவர்கள் மூலம் தசாவதாரம் எடுத்து இவர்களால் ஜீவனுக்கு 10 வித நற்பண்புகளைப் போதிக்கிறார்.

ஜீவன் இவர்கள் சாப விமோசனத்தை தவறாகப் புரிந்து கொண்டு தாங்கள் தீய வழியில் சென்றால் பகவானை சீக்கிரம் அடைந்து விடலாம் எனத் தப்பாக புரிந்து கொண்டு செயல் படுகிறார்கள்.

ஹிரண்யாட்ச்சன் மூலம் பூமியைக் காக்க என வராஹவதாரம் எடுத்து அதன் உட்கருத்தை பகவான் கூறி இருக்கிறார்.

4. இனி நரஸிம்மாவதாரம் மூலம் நமக்குக் கூறும் நற்சேதிகளைப் பார்ப்போம். ஹிரண்யன் தனக்கு மிருகத்தாலோ, பகலிலோ, இரவிலோ மரணம் ஏற்படக்கூடாது என வரன் வாங்கி அதன் மூலம் தனக்கு மரணமே சம்பவிக்காது என துணிவுடன் பலவித அக்ரமங்களைச் செய்ததுடன் பலவித ரூபத்திலும் தானே கடவுள் தன்னையே யாவரும் "ஹிரண்யாட்ச்சாய நம" எனக் கூறி தெய்வமாக வணங்க வேண்டும் என்றும் அப்படிக் கூறி வணங்கா தவர்களை பலவித துன்பங்களுக்கு ஆளாக்கி வந்தான்.

இந்த நிலையில் அவன் மகன் ஸ்ரீமன் நாராயணனே மூலம் அவரையே தெய்வமாக வணங்க வேண்டும் எனக்கூறி தன் தந்தை தனக்கு எவ்வளவு துன்பங்கள் அளித்த போதும் தெய்வ பலத்தால் மீண்டு துன்பங்களிலிருந்து விடுபடும் எதிர்ப்பு சக்தியை அடைந்து நின்றான்.

கடைசியாக ஒரு நாள் மாலை நேரம் பிரஹ்லாதனிடம் தெய்வம், தெய்வம் என்கிறாயே? அந்த நாராயணன் இந்தத் தூணில் உள்ளானா? எனக் கேட்டு அதனைத் தட்டி உடைக்க பகவான் சிம்ம முகத்துடன், மனித உடலுடன் நரஸிம்மனாக நிலைவாஸல் படியில் ஸந்தியா காலத்தில் தன் துடைமீது அமர்த்தி அவன் குடலைக்கிழித்து மாலையாக அணிந்து ஹிரண்யன் கேட்காத வரன்கள் யாவற்றையும் இணைத்து ஹிரண்யனை வதம் செய்தார்.

இதன் மூலம் அவர் உலக மக்களுக்கு புலப்படுத்துவது கடவுள் இல்லை என்று பகவத் பக்தியை யார் புறக்கணித்து தானே எல்லாம் என அஹந்தை கொள்கிறார்களோ அவர்களை நான் கட்டாயம் அழிப்பேன் எனக் கூறுவதுடன்

வினாயகர் அதாவது விஷ்ணுவான யானையின் தலையை பார்வதியால் உருவாக்கப்பட்ட புத்து மண்ணால் ஆன குழந்தையின் தலை சிவனால் சீவப்பட்டதும் பொருத்தப் பட்டு குழந்தையாக உருவான குழந்தையை யார் எனக் கூறுவது? சிவனா அல்லது விஷ்ணுவா? இந்தப் பிள்ளை யார்? என வினாக்குறியான வினாயகரை நரஸிம்மரூபத்தில் உலகிற்கு புலப்படுத்தவே சரபேஸ்வர யுத்தவிளக்கம்.

இதன் மூலம் இருவரும் இணைந்தே உலகப் பணிகளை ஏற்கிறோம் எனப் புலப்படுத்துகிறார்கள்.

பூலோக வைகுண்டமாக அமையப் போகும் யானை வனத்தில் அதாவது விஷ்ணு யானைரூபத்தில் வந்து தலை சீவப்பட்டு வினாயகராக உருப்பெற்ற பின் அந்த யானையின் சரீரம் விழுந்த இடமே யானைகள் நிறைந்த வனமாக மாறிய இடத்தில் திருவானைக் கோயில் அருகில் சிங்கப் பெருமாள் கோயிலை அமைத்துக் கொண்டு இராமாவதார காலத்தை நோக்கி ஹிரண்யவதம் முடிந்த பின் வந்து அமர்ந்து விடுகிறார் பக்தர்களை ரட்ச்சிக்க.

கடவுள் இல்லை என்பவரும் நன்றாகவே இருக்கிறார்களே என்றால் அவர்கள் இயற்கையின் ஏதாவது ஒரு ரூபத்தை பக்தியுடன் வணங்கி வழிபடுவதாலேயே சுகமாக உள்ளார்கள்.

5. வாமனாவதாரம்: வாமனாவதாரம் நமக்கு போதிக்கும் நீதி கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும். நல்ல முறையில் நிதி திரட்டுவது தவறில்லை. பேராசை கொண்டு சேர்க்க வேண்டும் என அனியாய வழியில் செல்லும் போது பலிச்சக்ரவர்த்திக்கு ஏற்பட்ட கதியே ஏற்படும்.

பலிச்சக்ரவர்த்தி பக்திக்கே எடுத்துக் காட்டான பிரஹ்லாதனின் பேரன். அப்படி இருந்தும் ஆளக்கிடைத்த அரசுடன் திருப்தி அடையாமல் மூன்று உலகத்தையே தனதாக்கிக் கொள்ள ஆசைப்பட்டான். அவன் பேராசையை அழிக்கவே வாமனனாக பகவான் அவதாரம் எடுத்தார்.

தானம் செய்யும் போது செய்பவரை தடுப்பவரை பகவான் சுக்ராச்சாரியாருக்கு அளித்த தண்டனை போலவே அளிப்பார். நாம் தான, தர்மம் செய்யாவிட்டாலும் செய்பவரை தடுக்கக் கூடாது என்பதே இதன் மூலம் நமக்குக் கிடைக்கும் நீதி.

பலிச்சக்ரவர்த்தி அனியாயமான எண்ணம் கொண்டிருந்தாலும் தானம் கேட்ட மூன்று அடி மண்ணை மனம் உவந்து அளிக்க ஒப்புக் கொண்டதால் அவனுக்கு அழிவைக் கொடுக்காமல் பாதாள லோகத்தில் நிலையாக வாழ வழி வகுத்துத்தருகிறார்.

பகவான் மூன்று அடியாக பாதாளலோகம், பூலோகம், பிரம்மலோகம் மூன்றையும் அளக்கும் போது வானுலகிற்கு வந்த திருவடியை பிரம்மன் நீரால் திருமஞ்கனம் செய்ததே பூமிக்கு கங்கைநீராக இறங்கி சிவனால் சிரஸில் தாங்கப் பட்டு ஹிமயமலையில் கோமுகம் மூலம் பூமியில் பிரவேஸிக்கச் செய்கிறார்.

இவ்விதம் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இணைந்து செய்த இப்பணி மூலம் கேரள தேசத்தில் பத்மநாபஸ்வாமியாக ஸ்ரீமன் நாராயணன் பள்ளி கொண்டு மூன்று வாஸல்கள் அமைத்துக் கொண்டு தரிசனம் தருகிறார். மூன்று வாஸலாக பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆக மூன்று ரூபத்தில் வணங்கப்பட்டாலும் மூலம் ஒன்றே என நிரூபித்துக்காட்டுகிறார்கள். வாமனாவதாரம் முடிந்து பகவான் மூன்று வாஸலுடன் கூடிய திருவனந்தபுரத்தில் அனந்தபத்மநாபஸ்வாமியாக சதா குடியேறுகிறார்.

இவ்விதம் மூன்று லோகத்தையும் மூன்று அடியாக அளந்த வாமனர் உலகளந்த பெருமாளாக திருவண்ணாமலை அருகில் உள்ள திருக்கோயிலூரில் மக்களுக்கு நின்ற கோலத்தில் ஸேவை அளிக்க அமர்ந்துள்ளார்.

6. பரசுராமாவதாரம்: தாய், தந்தையரை மதித்து அவர்கள் இட்ட கட்டளைகளை தலைமேல் தாங்கி நடத்திச் சென்ற அவதாரம்.

தந்தை தாயின் சிரஸை துண்டிக்கச் சொன்னதும் அதை நிறைவேற்றும் பணியை ஏற்கிறார் பரசுராமர்.

தந்தையின் சொல்லைக் கேட்டாலும் தாயின் மேல் உள்ள பாசத்தால் தாயை திரும்ப உயிர் பெற்று எழுப்பித் தரும் வரனையும் உடன் கேட்டு வாங்கி தாயை உயிர் பெறச் செய்கிறார்.

இவ்விதம் தாய், தந்தையர் பால் உள்ள பக்திக்கு பரசுராமர் எடுத்துக்காட்டாக உள்ளார்.

இதில் வெற்றி பெற்றாலும் தந்தை ஒரு ஷத்திரிய அரசனால் கொல்லப்பட்டதும் ஷத்திரிய குலத்தையே வேரோடு அழிப்பேன் என்ற சபதத்தையும் ஏற்கிறார். இது தந்தைக்கு ஏற்பட்ட அவமானத்தை துடைக்கவே என்றாலும் ராமாவதாரத்துடன் இணைந்த சம்பந்தம் உடைய அவதாரமாதலால் அதற்குண்டான சபதமாகவும் இணைந்து விடுகிறது. இந்த சபதத்தை எப்படி பூர்த்தி செய்கிறார் என்பது ராமாவதாரத்தின் மூலம் உலகிற்கு சைவ + வைஷ்ணவ இணைப்புப் பாலமாக தெளிவாக விளக்கப்படுகிறது.

7. ராமாவதாரம்: இராமாவதாரம் ஜீவனுக்கு சகல தர்மங்களையும் ஒருங்கிணைந்து கூறும் காவியம் இராமாயணம்.

வால்மீகி முனிவரின் பூர்வம் ஒரு வேடன். நாரத முனிவரின் அருளால் உபதேசம் பெறுகிறார். வால்மீகி முனிவரின் அவதாரஸ்தலம் தமிழ் நாட்டைச் சேர்ந்த திருச்சிராப்பள்ளி ஸ்ரீரெங்கத்திலிருந்து 18 மைல் தூரத்தில் உள்ள கிராமம் ஆகும். இராமர் காலத்திலேயே விபீஷணரால் அமையச் செய்து அரங்கன் பள்ளி கொண்ட பூலோக வைகுண்டத்திற்கு அருகில் அமைந்த கிராமம் அம்பில்.

தமிழ் நாட்டைச் சேர்ந்த இவர் சமஸ்கிரதத்திலேயே இராமாயண காவ்யத்தை எழுதி உள்ளார் என்றால் அப்போதைய காலத்தில் சமஸ்கிரத மொழியே உலகம் பூரா பேசப்பட்டு வந்திருக்கிறது என்பதை தீர்மானமாகக் கூறலாம்.

வால்மீகி முனிவருக்கு பூர்வாஸ்ரமம் வேடுவ குலமாக இருந்ததால் கிரௌஞ்சபட்ச்சி மூலம் கூறப்பட்டதையே அவருக்கு ஞயானம் ஏற்படும் வாய்ப்பை அளித்ததுடன் மரா, மரா என்று மந்திரமாக நாரதரால் உபதேசிக்கப்படுகிறது. இந்த மந்திரம் பஞ்சாட்சரமாகிய நமசிவாய என சிவ மந்திரமம் அஷ்டாச்சரமாகிய நாராயண மந்திரமும் இணைந்து சிவ + வைஷ்ணவ இணைப்பு மந்திரத்தையே நாரதரால் கூறப்பட்டுள்ளது.

இந்த மரா, மரா என்ற மந்திர உச்சாடனம் ஜெபித்துக் கொண்டே வால்மீகி முனிவர் பலவருடம் ஒரே இடத்தில் நிலையாக அமர்ந்து விடுவதால் அன்ன, ஆகாரமில்லாமல் நிலையாக ஒன்றின் மீதே கவனமாக இருந்த அவர் சரீரத்தின் மீது புத்துமண் மூடப்பட்ட ரூபத்தைப் பார்த்து ஜனங்கள் புத்துக்கு பால் விடும் வழக்கப்படி வால்மீகி முனிவர் இருந்த புத்துக்கும் பாலைவிட, பாலும், நீரும் பட்டபின் புத்துமண் கரைந்து வால்மீகி முனிவர் வெளிப்படுகிறார். இந்தக் காலம் இவருக்கு இராமாயண காவ்யத்தை எழுதும் ஞானம் வந்து விட்டதால் இவர் நாவிலிருந்து வந்த மந்திரம் ராமா, ராமா என வெளிப்படுகிறது.

இந்தச் சம்பவம் மூலம் ஜீவனுக்கு தெளிவுபட சரீரம் புத்துமண்ணால் உண்டாகி கரையான் புத்தில் நாகர் குடிபுகுவது போலவே ஜீவனின் சரீரத்தில் ஆதிசேஷன் குடி புகுந்து சரீரம் உருவாகி இயங்குகிறது என்பதை தெளிவுபட கூறி உள்ளார்கள். இவ்விதம் இராமாயணம் எழுத வால்மீகி முனிவரை தயார் செய்த பின்பே இராமாவதாரம் ஏற்படுகிறது.

# பால காண்டம்

அயோத்திய மன்னன் தசரதர் புத்திரகா மேஷ்ஷயாகம் செய்ய ரிஷ்யசிங்கரை அழைத்து வந்து செய்தபோது அக்னி குண்டத்திலிருந்து அக்னி பகவான் தோன்றி பாயஸ கலஸத்தை தசரதரிடம் சமர்ப்பிக்க அதை தசரதர் தன் மூன்று பத்னியான கௌஸல்யைக்கு பாதியும், கைகேயிக்கு அதில் மூன்றில் ஒரு பாகமும், பாக்கி இரண்டு பாகத்தை இரண்டு தரமாக சுமத்திரைக்கும் கொடுத்ததில் 10 மாதம் ஆனபின் கௌசல்யைக்கு சித்திரை மாதம் புனர்வசு நட்சத்திரத்தில் ஸ்ரீராமரும், ஆயில்ய நட்சத்திரத்தில் லட்சுமணன் சுமித்திரைக்கும், கைகேயிக்கு பரதன் புஷ்ய நட்சத்திரத்திலும், சுமத்திரைக்கு சுமத்திரன் மகம் நட்சத்திரத்திலும் பிறக்கிறார்கள்.

ஸ்ரீராமர், குழந்தையாக இருக்கும்போது வானத்தில் உள்ள நிலவை கைக்கு கொண்டு வா எனப்பிடிவாதம் பிடிக்க தாய், தந்தையர் நிலக்கண்ணுடியில் நிலாவின் பிம்பத்தைக் காட்டி அவரை சமாதானம் செய்கிறார்கள்.

இதன் மூலம் சூரிய வம்ஸமாக இருந்தாலும் சந்திரவம்ஸமும் இணைந்ததே என் ரூபம் என ஜீவனுக்கு அழுத்தமாக புலனாக்குகிறார். இதனாலேயே ராமர் பெயர் ராமசந்திர மூர்த்தியாக உள்ளபடி கூறப்படுகிறார்.

லட்சுமணன் ஆதிசேஷன், பரதன் சங்கு, சத்ருக்கணன் சக்ரம், இவ்விதம் தன்னுடன் அவதரிக்க செய்த மூவரும் ஜீவனின் சரீர தத்வத்தில் முக்கிய அங்கம் வகிப்பவர்கள் என தெளிவாக கூறுகிறார்.

சரீர தத்வத்தில் உஷ்ணத்துடன் குளுமையும் கலந்து இருப்பதால் மனிதனாக அவதாரம் செய்ததால் இத்தத்துவம் உள்ளது என்கிறார்.

முன் அவதாரங்களில் இருவர் இணைப்பும் இருந்தாலும் உடன் எடுத்து உடன் முடிந்து விடுவதால் இதற்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. ஆனால் ராமாவதாரம் மனிதனாகப் பிறக்க கற்பவாஸம் இருந்து பிறந்தால் இதற்கு சிவ - விஷ்ணு தத்வம் பூர்ணமான இணைப்புத் தத்வம் உள்ளதை வெளிக்கொண்டு வரப்படுகிறது.

வாமனாவதாரத்தில் கர்ப்பவாஸம் இருந்தாலும் ரிஷி, ரிஷி பத்தினியிடம் வந்து பிறந்ததால் அவர்கள் தேவ அம்ஸமாகி விடுகிறார்கள்.

ஆனால் ராமாவதாரத்தில் மனித ரூபத்தில் உள்ளவர்களிடம் வந்து கர்ப்பவாஸம் செய்து பிறந்ததால் இந்த ரூபத்திற்கு சிவ - வைஷ்ணவ இணைப்பு ரூபத்தை வெளிப்பட கொண்டு வந்ததை தெளிவாகக் கூறுகிறார்கள்.

உபநயனம் ஆனதும் குருகுலவாஸம் என பாலபர்வத்தில் ஜீவனுக்கு உள்ள கடமையான கல்வியும் சத்திரிய தர்மப்படி வாள், வில் வித்தை, குதிரை, யானை ஏற்றம் முதலிய சகலவித்தைகளையும் கற்று அறிகிறார்கள் மனித தர்மப்படி.

பின் விஸ்வாமித்திரருடன் யாகத்தை கற்க உடன் செல்லும் போது தாடகாவதம் பெண் என்றாலும் துஷ்ட குணம் படைத்த பெண்கள் அரக்கியாக பாவிக்கப்படும் தத்வத்தை ஜீவனுக்குப் புகட்டி தாடகாவதம் செய்கிறார்.

யாகவேள்வியைக் காத்து வெற்றியுடன் திரும்பும் சமயம் அகல்யா சாப விமோசனமாக கல்லைப் பெண்ணாக்கும் சம்பவம் மூலம் பூமிப்பிராட்டியான பெண் மூலமே சரீரம் கல்கரைந்து மண்ணாகி உருப்பெருகிறது என்னும் பொருளும் கூறப்படுகிறது.

அகல்யா சாப விமோசனம் ஆனபின் விஸ்வாமித்திரருடன் ஸ்ரீராமரும், லட்சுமணரும் வருகிறார்கள். மிதலைக்கு சீதா ஸ்வயம்வரத்திற்கு.

மிதிலையில் ஜானகியான சீதா ஜனக மன்னரால் பூமியை தங்கக் கலப்பையால் உழும் பொழுது தங்கப் பெட்டியில் இடப்பட்ட குழந்தையாகக் கிடைக்கிறாள்

சீதையின் ஜனனம் இலங்கை மன்னனான இராவணனுக்கு மண்டோதரியிடம் மகளாகப் பிறக்கிறாள்.

சீதையின் ஜனனத்தின் காரணமாக இராவணன் இலங்கையுடன் அழிவான் என பிரம்மதேவன் அவளின் ஜாதகக் குறிப்பின் மூலம் கூறுவதால் இராவணன் அவளை தங்கப் பெட்டியில் வைத்து சமுத்திரத்தில் விட்டு விடுகிறான்.

அவள் தெய்வக் குழந்தையாதலால் கரையில் ஒதுங்கி ஜனகபுரம் சேருகிறாள். ஜனகன் கண்டெடுத்து அவரால் வளர்க்கப்படுகிறாள்.

சீதையின் ஜனனம் ராவண குலமாகிய இராட்ஸச குலமானலும் அவள் பிறந்த மூலம் யாருக்கும் தெரியாததால் மிதிலாபுரி ஜனக மன்னன் குமாரியாகவே வளர்க்கப்பட்டதால் ஜனக குமாரியாகிறாள்.

இவள் குழந்தையாக இருக்கும் போது சிவதனுஸை அனயாசமாக நகர்த்தி அதனடியில் சிக்கிய பந்தை எடுத்ததால் அந்த வில்லை யார் எடுத்து நாணேற்றி முறிக்கிறார்களோ அவருக்கே சீதை மணமுடிக்கப்படுவாள் என ஜனகர் பிரகடனப் படுத்தியதால் அதனைக் கேள்விப்பட்டு விஸ்வாமித்திரர் இராம, லட்ச்சுமணரை மிதிலைக்கு அழைத்து வருகிறார்.

இராஜ சபையில் அனேக மன்னர் கூடி இருந்தும் யாராலும் முறிக்க முடியாத அசைக்கவே முடியாதவில்லை இராமர் முறித்து, சீதையை மணக்கிறார். அதே பந்தலில் பரதன் மாண்டவியையும், லட்சுமணன் ஊர்மிலையையும், சத்ருக்கனன் சுப கீர்த்தியையும் மணக்கிறார்கள்.

ஸ்ரீரமரின் ஜனனத்தில் சிவ + விஷ்ணு அடங்கி உள்ளது போல சீதையின் ஜனனத்திலும் சிவ + விஷ்ணு தத்வம் அடங்கி உள்ளது.

சீதை மகாலட்சுமி ஆனாலும் அவள் மானிட சரீரம் தரித்ததால் மண்மகள், மலைமகள், நீர்மகள், கலைமகள், திருமகள், என ஐந்தும் கலந்த ரூபமாகிறாள். பூ உலகத்தில் பிறப்பதாலும் கர்ப்பவாஸம் இருந்து பிறப்பதாலும் இந்த தத்வத்திற்கு உட்பட்டே ஆகவேண்டும்.

சீதையும், ராமரும் பூ உலகில் அவதரித்ததே தீமைகளை அகற்றுவதுடன் பஞ்சதத்வதங்களுக்கும், பஞ்சபூதங்களுக்கும் அவர்கள் செய்யும் பணிகளுக்கும் மதிப்பளிக்கவே ஆகும்.

திருமணம் முடிந்ததும் பரசுராமன் விஷ்ணு தனுசை ஏந்திவந்து ஸ்ரீராமரை நீ ஒடித்தது சிவதனுஸி, அதை ஒடித்தது போல இந்த விஷ்ணு தனுஸை ஒடி பார்ப்போம். அப்படிச் செய்யவில்லை என்றால் எந்த சத்திரிய அரசரால் என் தந்தை கொல்லப்பட்டாரோ அந்த சத்திரிய வம்சத்தையே அழிப்பதாக சபதம் கொண்ட நான் உன்னையும் உன் குலத்தையும் வேரோடு அழிப்பேன் எனச் சொன்னதும் தசரதர் முதல் ஜனகர் வரை யாவரும் மூர்ச்சித்து விழுகிறார்கள்.

ஸ்ரீராமர் புன்னகையுடன் விஷ்ணு தனுசை கையில் வாங்கி முறிக்கிறார். பரசுராமர் தன் கர்வம் அழிந்து கேரளா சென்று அங்கு வாமனாவதாரம் மூலம் பிரம்மா, சிவன், விஷ்ணுவாக வெளியே தெரிந்தாலும் உள்ளே மூவரும் ஒன்றே என மூன்று வாசல் மூலம் உலகிற்கு தெரியப்படுத்தும் பத்மநாபர் ஆலயம் உள்ள சேத்திரத்தில் குடிபுகுகிறார்.

இச் சம்பவம் ஜீவனுக்கு ஸ்ரீராமரால் தெள்ளத் தெளிவாக மற்றொரு விஷயத்தையும் தெளிவுபடக் கூறவே அமைந்துள்ளது.

முதலில் வளைத்து ஒடித்தது சிவதனுசு பரசுராமரால் அளிக்கப்பட்டு ஒடித்த தனுசு விஷ்ணுவுடையது.

ஜீவனின் முகத்தில் அமைந்துள்ள வாய் வில் போலவே அமைந்துத்தரப் பட்டுள்ளது. மேல் உதடு விஷ்ணுவாகவும், கீழ் உதடு சிவனாகவும் ஒவ்வொரு வினாடி ஜீவன் பேசும் செயலை கண்காணிக்கிறார்கள். வில்லிலிருந்து புறப்படும் அம்புபோல நாவிலிருந்து புறப்படும் சொல் நல்ல சொல் இதமாகவும், தீய சொல் கடுமையாகவும் உள்ளதையே இதற்கு உபமானமாக அமைத்துக் காட்டி உள்ளார்கள்.

இவ்விதம் இச்சம்பவத்தினால் உலகச் சேமார்த்தமாக ஜீவனுக்கு கூறிய பின் ஸ்ரீராமர், சீதா மற்றும் தாய், தந்தை, தம்பி, தம்பி மனைவிகளுடன் சேமமாக அயோத்தியை வந்தடைந்து சிலகாலம் சௌகரியமாக சந்தோஷத்தை அனுபவிக்கிறார்கள்.

# அயோத்யா காண்டம்

தசரதர் தனக்கு வயோதிகம் வந்துவிட்டதால் மூத்தமகனான ஸ்ரீராமருக்கு முடிசூட்ட மந்திரி பிரதானிகளின் அனுமதியுடன் முடி சூட்ட வசிஷ்டரால் சுப முகூர்த்தம் நிர்ணயித்துத் தரப்படுகிறது.

ஸ்ரீராமரை தசரதர் அழைத்து இதனைத் தெரிவிக்கிறார். முறைப்படி ராஜ முடி சூட்டிக்கொள்ள அனுசரிக்க வேண்டிய நியமங்களை அன்று சீதையும், ஸ்ரீராமரும் ஏற்கிறார்கள். இச்செய்திகேட்டு அயோத்தி மாநகரே குதூகலத்தில் நகரத்தையே பலவித பூ, தீப அலங்காரங்கள் செய்து ஆடிப் பாடி மகிழ்கிறார்கள்.

இது சமயம் கூனி கைகேயின் தாதி இதனைக்கேட்டு மனம் கொதிக்கிறாள். இதன் காரணம் கூனியை ஸ்ரீராமர் பாலபருவத்தில் அவள் கூனி நடப்பதால் கேலி செய்ததுடன் அவள் முதுகில் அம்பால் ஏவப்பட்ட புஷ்பத்தால் அடிக்கிறார். அவர் பாலபருவத்தில் விளையாட்டாகச் செய்த இக்குரும்புத்தனம் அவருடைய வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை கொடுக்கும் சம்பவமாக அமைந்து விடுகிறது.

அவர் பாலரூபத்தில் யாரையும் துன்பப்படுத்தாமலும் மிக மரியாதையுடனும் நடந்து கொண்டிருந்தாலும் இச்சிறு சம்பவம் அவர் வாழ்க்கையின் பெரும் சோதனை நாளாகிவிடுகிறது.

இதன் மூலம் ஜீவனுக்கு பகவானால் உபதேசிக்கப்படும் பொன்மொழி யாரையும் எக்காரணம் கொண்டும் கேலி செய்தோ, பழித்தோ பேசக்கூடாது எனும் பெரும் போதனை அளிக்கிறார்.

பரதன் அவன் தாய் மாமன் வீட்டிற்கு சென்றிருந்த சமயம் பார்த்து தசரதர் ஸ்ரீராமர் பட்டாபிசேஷகத்தை நிச்சயம் செய்ததை வியாஜமாக காட்டி கூனி கைகேயின் மனதை பல விதமான துர்போதனைகள் செய்து மாற்றுகிறாள். ஸ்ரீராமரின் பட்டாபிசேஷகத்தை நிறுத்தி அவள் மகன் பரதனுக்கு முடிசூட்டும்படி தசரதரிடம் கேட்கும் படி தூண்டுகிறாள்.

கைகேயி ஸ்ரீராமரிடம் மிகவும் பாசம் கொண்டவள். அப்பேர்பட்ட கைகேயின் மனதை மாற்றி அவள் சம்பகாசுரவதத்தின் போது தசரதருக்கு ரதசாரத்தியம் செய்து உதவியதால் மகிழ்ந்து கைகேயிக்கு இரண்டு வரம் கொடுத்ததை இப்போது கேட்க்கும்படி தூண்டுகிறாள்.

தசரதர் இரவு ஸ்ரீராமருக்கு முடிசூட்டும் செய்தியை கூறவரும் போது கைகேயி தன் கோபக்கிரஹத்தில் ஆபரணங்கள் ஏதும் அணியாமல் கருப்பு வஸ்திரம் அணிந்து துக்கமுடனும், கோபத்துடனும் இருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைகிறார்.

அதன் காரணத்தை கேட்ட பின் அவளுடைய கொடூரத்தை உணர்கிறார். வரன்கள் மூலம் ஸ்ரீராமர் காட்டிற்கு 14 வருஷம் செல்ல

வேண்டும் என்றும் பரதன் நாட்டை ஆள மன்னனாக முடி சூட்டிக் கொள்ள வேண்டும் என கேட்டதும் தசரதர் மூர்ச்சித்து தரையில் விழ்கிறார்.

உடன் கேகேயி தசரதர் அழைப்பதாக கூறி ஸ்ரீராமரை வரவழைத்து இச்செய்தியை அதாவது ஸ்ரீராமர் முடிதுரந்து காட்டிற்கு 14 வருஷம் செல்ல வேண்டும் என்றும் அவள் மகன் பரதன் அயோத்தி மன்னராக முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்று தசரதர் கூறுவதாகக் கூறியதும் ஸ்ரீராமர் சிறிதும் முகம் சுளிக்கவில்லை. அதற்கு பதில் அன்றலர்ந்த தாமரை போல முகம் மலர்ந்தது. இதன் மூலம் ஜீவனுக்கு அவர் அளித்த பாடம் சுகம் வந்தாலும், அதே அளவில் துக்கம் வந்தாலும் சமநோக்குடன் ஏற்று நடக்க வேண்டும் என்பதே. ஒரே இரவில் ராஜமகுடம் தரிக்கும் பாக்கியமும், அதே இரவில் முடி துரந்து ஜடாமுடி தரிக்கும் பாக்கியமும் கிடைப்பதை சாதாரண ஜீவனால் ஸ்ரீராமர் போல் அவ்வளவு எளிதாக ஏற்கமுடியாது.

ஸ்ரீராமர் போல் இன்பத்தையும், துன்பத்தையும் சமமாக ஒரே தராசில் வைத்துப் பார்த்தும் அதனை ஏற்று முகமலர்ச்சி காட்டும் மனப்பான்மை ஜீவனுக்கு எப்பொழுது ஏற்படுகிறதோ அப்போது தான் சம்சாரமாகிய பவ சாகரத்தை கடக்க முடிவதுடன் பகவத் பக்தியின் வாசலையும் மிதிக்க முடியும் என்ற பாடத்தை அளிக்கிறார்.

ஸ்ரீராமருடன் சீதையும் உடன் வருகிறேன் என்கிறாள். பெண்ணான சீதை ஏற்பதையே நாம் ஸ்ரீராமரின் மனப்பக்குவத்தை விட சிறந்ததாக ஏற்க வேண்டும்.

கைகேயி சீதையை விட வயதில் மூத்தவள். ஒரு பிள்ளைக்குத் தாய், ஆனால் அவள் கூனியின் போதனையால் மனம் மாறி பேராசை கொண்டு தன் மகன் அரசன் ஆனால் தான் ராஜமாதா என்னும் பட்டம் பெற்று பெருமிதத்துடன் வாழலாம் என்ற பேராசைக்கு அடிமை ஆகிறாள். தான் தற்போது பட்டமகிஷியாக இருப்பதுடன் போதாமல் ராஜமாதா பதவிக்கும் ஆசைக்குவசமாகிறாள்.

கைகேயியை விட பல வயது சிறியவள் தன் கணவர் ராஜமகுடத்தை துறந்து வனம் அதுவும் 14 வருஷம் போகப் போகும் கணவருடன் தானும் உடன் செல்கிறேன் என்கிறாள். இதற்கு அவள் கூறும் பதில் ராமன் இருக்கும் இடமே தனக்கு அயோத்தி என்று கூறுகிறாள். இந்தப் பக்குவம் பிறவியிலேயே அவளுக்கு வந்துள்ளது. அவ்வளையும் பலரும் மனம் மாற்றி அரண்மனையிலேயே சகல சௌகரியங்களுடன் தங்க புத்திமதி கூறினாலும் சீதையின் மனம் மாறவில்லை.

கைகேயியோ நல்ல குணம் படைத்து உள்ளவளாக இருந்தும் கூனியின் துர்போதனைக்கு ஆளாகி விடுகிறாள். இவ்விதம் துர்போதனைக்கு ஆளாகாமல் நல்லது கெட்டதை ஆராய்ந்து அதன்படி நடக்க வேண்டும் என்ற போதனை இந்தச் சம்பவம் மூலம் ஜீவனுக்கு அளிக்கப்படுகிறது.

ஸ்ரீராமர், சீதா, லட்சுமணருடன் கானகம் நோக்கி பயணம் ஆகிறார். அயோத்தி மக்கள் ஸ்ரீராமருடன் உடன் தாங்களும் காட்டுக்கு வருகிறோம் என பிடிவாதத்துடன் பின் தொடர்கின்றனர். அவர்களுடன் கானகம் சென்றல் அயோத்தியை விட்டு வந்ததின் பிரயோஜனம் நிறைவேறாது எனக் கருதிய ராமர் இரவு அவர்கள் தூங்கும் சமயம் அவர்களை விட்டுப் பிரிந்து கானகம் செல்கிறார்.

சிருங்கிபேர புரத்தில் குகனைச் சந்தித்து அவன் தரும் பழம், பாலை உண்டு அங்கு ஆலம் பாலைக் கொண்டு ஜடாமுடி தரித்துக் கொள்கிறார்.

ஜடா முடி மூலம் தன்னிடம் சிவதத்வம் உள்ளதையும் ஜீவனுக்கு புலனாக்குகிறார்.

குகன் ஓடத்தில் கங்கையைக் கடக்கும் போது கங்கைக்கு சீதாராமஸ் பரிஸம் கிடைத்து புனிதமாகிறாள். கங்கை ஆற்றைக் கடந்து ஆரண்ய காண்டமாகத் தொடங்கும் வன வாஸத்தில் பிரவேஸிக்கிறார்கள்.

குகன் ஓடத்தில் கங்கையைக் கடக்கும் சம்பவம் மூலம் பவசாகரமாகிய ஆற்றைக் கடக்க மனமாகிய ஓடத்தை கட்டுப்பாட்டுடன் நடத்திச் செல்லும் போதனையுடன் ஜீவனை பவசாகரத்தில் இருந்து கடக்க 6வராக இணைந்து சரவணபவ குகனாக உள்ளோம் என்பதையும் குகனே ஆத்மாவை மோட்ச்ச சாம்ராஜ்யத்திற்கு அழைத்துச் செல்லும் பணியை பிறப்பு முதல் இறப்பு வரை ஏற்கிறான் என்பதை புலனாக்கி குகனை அணைத்து ஐவரானேம் என்கிறார்.

ஜீவ சிருஷ்டிக்கு முக்கியமான நீரை ஸப்தநதிகளுக்கும் மூத்தவளான கங்கா நதியை வணங்கி அவளுக்கு மதிப்பளிக்கிறார்கள். நீர் இல்லை என்றால் ஜீவனுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் எதுவும் கிடைக்காமல் போய்விடும். நீரினால் தான் வனம் செழிப்படைகிறது. வனத்தினால் நீர் ஆவியாகி திரும்ப வானத்திலிருந்து மழையாகப் பொழிந்து நீர் வீழ்ச்சி மூலம் ஜீவ சிருஷ்டிக்கான சகலமும் கிடைக்கிறது.

பிரம்மன் சிருஷ்டியைச் செய்வதுடன் மரமாக இருந்து ஜீவனுக்குத் தேவையான பூ, காய், பழம், தான்யம் என சகலவித உணவுப் பொருளுடன், ஜீவனுக்கு சரீர ஆரோக்கியத்திற்கும் தேவையான மூலிகைப் பொருள்களையும் படைத்துத் தருகிறார்.

ஸ்ரீராமர் வனவாஸம் மூலம் நீரையும் வனத்தையும் மதித்து ஜீவ சிருஷ்டிக்கான மூலமாக வனமாக இருக்கும் பிரும்மனையும் மதிக்கிறார்.

ரிஷிகள் தபஸ் செய்யும் வனத்தில் தானும் வந்து தங்கி அவர்கள் செய்யும் யாகங்கள், வேதபாராயணங்கள், மந்திர மூலம் உலகம் செழிப்பதால் அவர்களுக்கு இடைஞ்சல் செய்யும் ஜீவனை இராட்ச்சசர்களாக மதித்து அவர்களை அழிக்கும் பணிக்காகவும் வனம் வருகிறார்.

இவ்விதம் சீதா, ராமர், லட்சுமணர் வனம் வந்ததில் உட்பொருள் பொதிந்து உள் அடங்கி உள்ளது.

வனமாக மரமாக உள்ள பிரம்மனை மதித்தால் தான் ஜீவன் ஸ்வாஸிக்கும் காற்று சுத்தப்படுவதுடன் ஜீவன் வாழ அக்னியும் கிடைக்கும்.

அயோத்தியில் பரதன் மாமன் வீட்டிலிருந்து வரும் சமயம் மன்னன் தசரதர் மரணம் நேர்ந்து விடுகிறது.

பரதன் தாயின் கொடுமையான இரு வரன்களைக் கேட்டு கொதிப்படைக்கிறான். சாதாரண உள்ளம் படைத்தவனாக இருந்தால் தாயின் வரனை மதித்து அரசை ஏற்றிருப்பான் அவன் உள்ளம் புடம்போட்ட தங்கமாக இருப்பதால் இதனை ஏற்காததுடன் தானும் மர உரி தரித்து ஸ்ரீராமனை அயோத்திக்கு அழைத்துவர மந்திரி வஸிஷ்டர் புடை சூழ மூன்று தாயாருடன் வனம் வருகிறான். குகன் முதல் லட்ச்சுமனர் வரை பரதனை தவறாகவே நினைக்கிறார்கள். அதாவது ஸ்ரீராமரை இத்துடன் விடாமல் இன்னும் ஏதோ கொடுமையான எண்ணத்துடன் வருகிறான் என்றே நினைக்கிறார்கள்.

பரதன் தன் தாய் மார்கள் மூவருடன் வனம் வந்து ஸ்ரீராமரிடம் மன்னிப்புக் கேட்டுத் திரும்ப அயோத்திக்கு வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டிக் கேட்கும்போது யாவரும் மனம் நெகிழ்கிறார்கள்.

ஸ்ரீராமர் தந்தையின் பித்ருகர்மாவை முடித்துப் பின் பரதனிடம் அப்பா நான் தந்தை சொல்லை மீறமாட்டேன். அது வரை நீயே என் சார்பாக அயோத்தி மன்னனாக இருந்து மக்களுக்கு உண்டான கடமைகளைச் செய்வாய் என்ற போது பரதன் மறுத்து விட்டதுடன் ஸ்ரீராமரின் பாதுகைகளை அளித்து கௌரவிக்க வேண்டும் எனக் கேட்கிறார்.

ஸ்ரீராமரின் மரப்பாதுகைகளை தன் தலையில் சுமந்து அயோத்தியின் எல்லையில் நந்திக்கிராமத்தில் ஆசிரமம் அமைத்து சுமத்திரனுடன் அயோத்தியை ஸ்ரீராமரின் சார்பாக ஆள்கிறான்.

இங்கு 4 வருடன் பிரவாத பாதுகைக்கு மதிப்பளித்து பிரம்மனை கௌரவிப்பதுடன் நந்திக்கிரமம் என்ற பெயரின் மூலம் சிவனையும் கௌரவிக்கிறார்.

13 வருஷ வனவாஸத்தின் போது சீதா, ராமர், லட்சுமணருடன் சந்தோஷமாகவே இருந்து வந்தனர்.

காகாஸுரன் இதன் நடுவில் சீதையின் மடியில் ஸ்ரீராமர் தலைவைத்து அயர்ந்து நித்திரை செய்த சமயம் சீதையை துன்புறுத்தி அவள் ஸ்தனங்களைக் கொத்திவிட ரத்தம் கசிந்து வெளிப்படும் போதும் அத்துன்பத்தை பொறுமையுடன் சகித்துக் கொள்கிறாள் ஸ்ரீராமரின் நித்திரைக்கு பங்கம் ஏற்பட்டுவிடும் என்று.

ஆனால் ஸ்ரீராமரின் நித்திரை -சீதாதேவியின் ரத்தத்துளிகள் மேலே சிந்தக் கலைகிறது. நடந்த சம்பவத்தை அறிந்து காகாஸீரனை தண்டிக்க அருகில் இருந்த தர்ப்பையை எடுத்து அம்பாக பாவித்து ஏவுகிறார். அதனின் தாபம் தாங்காமல் பல உலகங்களுக்குச் சென்றும் பயன் இல்லாமல் ஸ்ரீராமரின் திருவடியை சரண் அடைகிறான். ஸ்ரீராமரும் அவனை மன்னித்து அவனின் ஒரு கண்ணை பறித்து அபயமளிக்கிறார்.

இச்சம்பவம் சீதையின் முடிவு இறப்பு, தகனம், கர்மா என இருக்காததால் அவளின் பிண்டமாக மாமிஸம் ஆஹூதி செய்யப்படுகிறது. பித்ரு கர்மாவிற்கு அளிக்கப்படும் பிண்டம் காகத்தாலேயே ஏற்றுக்கொள்ளப்படுவதால்.

மனிதப்பிறவிக்கான சடங்கு சீதைக்கு இச்சம்பவம் மூலம் அளிக்கப்பட்டுவிடுகிறது.

காகாஸீரனை அழிக்க ஏவப்பட்ட ஆயுதம் தர்ப்பம். இதனை ஜீவனுக்கு உணர்த்தவே.

அமைதியாக இருந்த வாழ்க்கையில் சூர்ப்பனகை புகுகிறாள். இதன் பின் சீதா, ராமர் வாழ்க்கையில் பெரும் திருப்பம் ஏற்பட பல சம்பவங்கள் நிகழ்ந்தன.

ராமாவதாரமே ஜீவனுக்குண்டான அசுரகுணங்களை அழித்து நற்பண்போடு வாழவழி செய்ய வேண்டும் என்ற சமநோக்கத்துடன் அவதரித்த அவதாரமாகும். அதற்கு முதல் படியாக பால பருவத்தில் தாடகை, சுபாகு முதலான முக்கிய பெண், ஆணுக்கான அசுரகுணத்தை அழித்து ரிஷிகள் மூலம் ஜீவனுக்கு செய்யப்படும் நற்பண்பை ரட்ச்சித்தார்.

இரண்டாம் படியாக வனவாஸம் இதிலும் பல அசுரர்கள் வேள்விகளுக்கு தீங்கு செய்பவரை அழித்து வந்தாலும் சூர்ப்பனகை மூலம் அவர்கள் எடுத்த அவதாரத்திற்கான செயல் பூர்த்தி அடைய காலம் தொடங்குகிறது.

கூனி மூலம் கைகேயி மனம் மாறி ஸ்ரீராமரை வனவாஸம் அனுப்பியதின் பலன் ஏற்படும் காலம் சூர்ப்பனகை மூலம் முடிவடைகிறது. இதனால் தான் போலும் ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே என்ற தத்வம் கூறப்படுகிறது போலும்.

சூர்ப்பனகை அழகான ரூபத்தை எடுத்துக் கொண்டு ஸ்ரீராமரை தன் அழகின் மூலம் அவரை மயக்க பலவழி முறைகளை கையாண்டும் ஸ்ரீராமர் மனம் கலங்கவில்லை.

ஆனால் லட்ச்சுமணனோ இன்னும் ஒரு படி மேலே போய்விட்டார். மனைவியை விட்டுப் பிரிந்து தன் தமையனையும், அவர் மனைவியையும் தன் தாய், தந்தையாகப் பாவித்து, பணிவிடை செய்து வரும் லட்ச்சுமணன் சூர்பணகையின் மாய ரூபத்தில் மயங்காததுடன் அவள் மூக்கையும் அறுத்து அனுப்புகிறார். இவ் இருவரும் இதன் மூலம் ஜீவனுக்கு ஏகபத்தினி விரத மகிமையை போதிக்கிறார்கள்.

கர்வ பங்கப்படுத்தப்பட்ட சூர்ப்பணகை தன் சகோதரர்களான கர, தூஷணர்களிடம் சென்று முறையிட அவர்கள் ஸ்ரீராம, லட்சுமணருடன் யுத்தம் செய்தும் பலன் இல்லாமல், வீழ்ச்சி அடைய சூர்பணகை தன் சகோதரனான இராவணேஸ்வரிடம் சென்று நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி சீதாவின் அழகை வர்ணித்து அவள் இராவணனின் அந்தப்புரத்தில் இருக்க வேண்டிய சுந்தரமான பெண் எனக் கூற இராவணன் அவள் பேச்சில் மயங்கி மாரீச்சனிடம் சென்று அவளை உதவிக்கு அழைக்கிறார்.

மாரீச்சன் ஏற்கனவே ஸ்ரீராமரிடம் யுத்தம் செய்து அவர் பலத்தை நன்றாகத் தெரிந்தவன் இருந்தாலும் இராவணன் கையால் மடிவதைவிட ராமர் கையால் மரணம் அடைவதே மேல் எனக்கூறி உதவ ஒப்புக்கொள்கிறான்.

சீதாதேவிக்கு கானகத்தில் பசு, பட்ச்சி, மிருகங்களிடம் மிகவும் ஈடுபாடு எனத் தெரிந்து கொண்ட மாரீச்சன் தங்க நிறம் கொண்ட மாயமானாக ரூபம் கொண்டு சீதையின் குடில்பக்கம் சென்று உலாவிவிர சீதை அதன் அழகில் மயங்கி அதனைப் பிடித்துத்தர ஸ்ரீராமரை வேண்டுகிறாள்.

எதற்கும் ஆசைப் படாமல் தன் வேலையே கண் என தனக்குஸேவை செய்வதே பாக்கியம் என பெரியதாகக் கருதிவந்த சீதாதேவியின் இந்த ஆசையை நிறைவேற்ற ஸ்ரீராமர் ஒப்புக்கொள்கிறார்.

ஆனால் லட்ச்சுமணன் இதைத் தடுத்து இது மாயமான் என எடுத்துக் கூறியும் அதை சீதை ஏற்காததால் ஸ்ரீராமர் லட்ச்சுமணரை சீதைக்கு காவல் வைத்துவிட்டுச் செல்கிறார்.

மாய மாரீசன் வெகுதூரம் கானகத்தில் மறைந்து, மறைந்து ஸ்ரீராமரை அழைத்துச் சென்று கடைசியில் ஸ்ரீராமபாணத்திற்கு இறை ஆகிறான். இறக்கும் சமயம் சீதா, லட்ச்சுமணா என ராமர் குரல் போல் இறைந்து கூற அதைக் கேட்ட சீதா ஸ்ரீராமருக்குத்தான் ஆபத்து எனக்கூறி லட்ச்சுமணரை ஸ்ரீராமருக்கு உதவ உடனே செல்லும்படி கூறுகிறாள்.

லட்ச்சுமணன் ராமருக்கு எந்தவித ஆபத்தும் ஏற்பட்டிருக்காது. இது மாய அசுரர்களின் வேலை என எவ்வளவு எடுத்து கூறியும் அதை ஏற்காததுடன் லட்ச்சுமணனின் எண்ணத்திலும் சந்தேகப்படுகிறாள். இதைத் தாங்காத லட்ச்சுமணன் சீதாதேவிக்கு எல்லைக்கோடிட்டு அதைத் தாண்டி வெளியே வர வேண்டாம் என்றும் எச்சரித்துச் செல்கிறார்.

சீதையின் தனிமையைப் பயன் படுத்தி இராவணன் கபட சன்யாசிவேடம் கொண்டு சீதையின் ஆஸ்ரமத்திற்கு வருகிறான்.

சீதையிடம் பிட்ச்சை வேண்ட அவளும் சன்யாசி என அவனை மதித்து பழம் முதலியவைகளை தட்டில் கொண்டு வந்து சேர்க்க வரும் போது லட்ச்சுமணனால் போடப்பட்ட கோட்டை தாண்டி வந்து பிட்ச்சை அளிக்கும் படி ராவணனான கபடஸன்யாசி வேண்ட சீதையும் சன்யாஸிதானே என லட்ச்சுமணன் போட்ட கோட்டைத் தாண்டி பிட்ச்சை அளிக்கவர சன்யாசியாக இருந்த ராவணன் தன் சுய ருபத்தை எடுத்ததுடன் சீதையை அவள் நின்ற இடத்து மண்ணுடன் பெயர்த்து தன் விமானத்தில் ஏற்றிக் கொண்டு இலங்கையை நோக்கி பயணப்படுகிறான்.

இதில் ஒன்றைக் கவனிக்க வேண்டும். இராவணன் இஷ்டப்படாத பெண்ணைத் தீண்டினால் அவன் எரிந்து சாம்பலாவான் என்ற சாபம் இருப்பதால் அவன் சீதையை அவள் நின்ற பூமியுடனேயே பெயர்த்துச் செல்கிறான்.

வழியில் ஜடாயுவால் தடுத்துச் சண்டையிட்டு சீதையை அவனிடமிருந்து மீட்க பிரயத்தனப்பட்டும் முடியாமல் இராவணனால் சிறகுகள் வெட்டப்பட்டு பூமியில் வீழ்கிறார். இராவணன் சீதையை இலங்கை நோக்கி எடுத்துச் செல்லுகிறான்.

கிஷ்கிந்தா மூல பர்வதத்தின் மேல் விமானம் பறக்கும் போது சீதை தன் ஆபரணங்களை கழற்றி வஸ்திரத்தை கிழித்து அதில் முடிந்து கீழே போடுகிறாள்.

இச்சம்பவங்கள் மூலம் ஜீவனுக்கு அவர்கள் கொடுக்கும் உபதேசம். சிறியவராக இருந்தாலும் நல்லதைச் சொல்லும் போது பெரியவர்கள் அதை ஏற்று நடக்க வேண்டும். லட்சுமணன் எவ்வளவு எடுத்துக் கூறியும் அதைக் கேளாமல் சீதை வாதாடியது அதற்கும் மேலாக அவரை அவதூராகப் பேசியும் விடுகிறாள்.

இதைப் பின்னால் அசோகவனத்தில் சிறையிடப்பட்டபோது ஒவ்வொரு வினாடியும் மனம் நொந்து தன் செயலுக்கு வருந்துகிறாள். தான் லட்சுமணனை மதிக்காததுடன் அவனை நிந்தித்துப் பேசியதின் பலனே இந்தச் சம்பவமும் ஸ்ரீராமரைப் பிரிந்து வாழவும் வைத்துள்ளது என மனம் நோகிறாள்.

சீதையின் வனவாஸத்தில் இன்னும் ஒரு நீதியும் மறைந்துள்ளது. ஸ்ரீராமரும், சீதையும் வனம்வந்ததே பஞ்சபூதங்களை மதித்து ஜீவன் சகலவித சேமங்களுடன் வாழ வழி வகுத்துத் தரவே ஆகும்.

வனத்தில் வஸிக்கும் போது நீரையும், மரங்களையும் மதித்துப் போற்றியவர்கள் ஜீவன் எதை, எதை தவிர்த்து எப்படி, எப்படி வாழவேண்டும் என்றும் போதிக்கிறார்கள்.

வேண்டாதவற்றுக்கு ஆசைப்படக்கூடாது என்பதுடன் சிறியவர்கள் இட்ட கட்டளைகளையும் மீறக்கூடாது அதில் நன்மை இருக்கும் போது என்கிறார்கள்.

சீதை சிறை இருப்பது அசோக வனத்தில் இருந்தது 10 மாத காலம். குழந்தை ஒரு தாயின் கர்ப்பத்தில் இருப்பது 10 மாத காலம். அசோக மரத்தடியில் சீதை ராட்ஷசிகளால் சூழப்பட்டு பலவித ஹிம்சைகளுக்கு ஆளாகிறாள். இது போலவே ஜீவன் உலகில் பிறந்து பலவித கஷ்டங்களுக்கு ஆளாகவே நேரிடும்.

அதைப் பொருட்படுத்தாமல் மனதை ஒரு நிலைப்படுத்தி கஷ்டத்தையும் சுகமாகப் பாவித்து அனுபவிக்க1ப் பழகிக் கொண்டால் ஜீவன் சோகம் நீங்கி சுகத்தைக் கடைசியில் கட்டாயம் அனுபவிப்பார்கள் என்பதையே சீதை தானே அனுபவித்துக் காட்டுவதுடன் அசோக மரத்தின் கிழ் அமர்ந்து ஜீவன் எப்போதும் கவலைகள் நீங்கி சுகம் அனுபவிக்க வேண்டும் எனப் பிரார்த்திக்கிறாள்.

மற்றும் ஒன்று எவ்விதம் ஸ்ரீராமர் ஏக பத்தினி விரதராக இருக்கிறரோ அதே போல் ஆண்கள் இருக்க வேண்டும். பெண்ணும் எந்தவித சலனத்திற்கும் ஆளாகாமல் கணவரையே தெய்வம் என எண்ணி வாழ வேண்டும் என்ற போதனையை தாங்கள் வாழ்ந்து காட்டுகிறார்கள்.

பிரம்மனால் படைக்கப்பட்ட ஜீவன்கள் பலவித துன்பங்கள் ஏற்பட்டாலும் அந்தப் பிறவிப் பிணிக்கடலிலிருந்து மனத் தெளிவுடன் கடக்க வேண்டும் என்று அசோக மரத்தடியில் அமர்ந்து பிரம்மனைப் போற்றி ஜீவனுக்காக 10 மாத காலம் தவம் இருக்கிறாள்.

சித்ர கூடத்தில் சீதையைக் காணாமல் ராமரும், லட்ச்சுமணரும் மனம் பதரித்தவித்து அவளைத் தேடிக் கொண்டே வரும் வழியில் ஜடாயுவின் மூலம் சீதை இராவணன் கவர்ந்து சென்ற செய்தியைக் கேட்க்கிறார்கள்.

ஜடாயு சீதையை இராவணன் கடத்திச் சென்ற செய்தியை கூறியதும் தன் உயிரை விட்டுவிட்டார்.

ஸ்ரீராமர் ஜடாயுவிற்கு பட்ச்சி இனமாக இருந்தாலும் அவருக்கு ஈமக்கிரியை செய்கிறார்.

நல்லது என்று ஒன்று இருந்தால் தியது அதனுடன் இருப்பது போல் ஜிவரூபத்தில் கருட ரூபம் உள்ளது. அசுரகுணம் படைத்தவரிடம் கழுகு ரூபம் உள்ளது. இங்கு கழுகு ரூபத்தின் உருவாக ஜடாயு இருந்தாலும் தீய குணம் நீங்கி நல்ல குணவானாக ஒரு நல்லதைச் செய்ததால் ஸ்ரீராமர் ஜடாயுவான கழுகு இவமான பட்ச்சிக்கு தகனம் செய்து தர்ப்பணம் செய்து மரியாதை அளிக்கிறார். இதன் மூலம் ஜீவனுக்கு அளிக்கும் போதனை தீய குணங்கள் படைத்தவம்ஸத்தில் பிறந்தாலும் அவன் செயல் நல்லதாக இருந்தால் நல்லதே கிடைக்கும் என்பதே.

கபந்தவதம் மூலம் அவனுக்கு சாபவிமோசனம் அளித்து சபரியை சந்திக்கிறார்கள். அவள் சுவைத்து ருசிபார்த்துத் தந்த எச்சில் பழங்களை அவள் பக்தியின் அன்பைப் போற்றி உண்டு அவளுக்கு மோட்ச்சம் அளிக்கிறார்கள்.

சபரி மூலம் கிஷ்கிந்தாப்ர்வ மூலம் அறிந்து அங்கு செல்கிறார்கள். அங்கு ஆஞ்சனேயரைச் சந்திக்கும் பெரியவாய்ப்பு கிடைக்கிறது. சீதை வஸ்திரத்தில் முடிந்து போட்ட நகைகளை ஆஞ்சனேயர் அவருக்குக் காட்டுகிறார். அதைக் கண்டு ராம, லட்ச்சுமணர் மனம் நெகிழ்கிறார்கள். இதன் மூலம் தெய்வ அவதாரம் ஆனாலும் மானிட அவதாரத்திற்கான சுபாவங்களையே அனுபவித்துக் காட்டுகிறார்கள்.

## சுந்தரகாண்டம்

குகன், மான் ஜடை, வாயு புத்திரனான ஹனுமான் இவர்கள் மூலம் சிவ அம்ஸதத்வத்தை ஜீவனுக்குப் புலப்படுத்துகிறார்கள்.

வாலியை வதம் செய்ய ஸ்ரீராமர் மறைவாக இருந்து அவனுக்கும் தெரியாமல் அவனை வதம் செய்கிறார். இராமாயண கதாநாயகனான ஸ்ரீராமர் செய்த ஒரே தவறு இதுதான்.

வாலி வதத்திற்கு பின் 6 மாதகாலம் மழைகாலம் முடிந்து சீதையைத் தேட ஜாம்பவானாகிய கரடி, வாலி புத்திரனான அங்கதன் இன்னும் பல்லாயிரக் கணங்கான வானரர்களுடன் தென்திசையை நோக்கி ஸ்ரீராமர் அளித்த கணையாழியுடன் ஹனுமன் பயணப்படுகிறார். அங்கு ஒரு குகையில் ஜடாயுவின் தம்பியான சம்பாதி மூலம் இலங்கயில் சீதை சிறை வைக்கப்பட்டிருக்கும் செய்தியை அறிகிறார்கள்.

இலங்கயை அடைய சமுத்திரத்தைத் தாண்டி செல்லக் கூடிய வலிமை வாயுபுத்திரனுக்கே உள்ளது என்று அவரை பலவாரு புகழ்ந்து இப்பணியை அவரிடம் யாவரும் ஒப்படைக்கிறார்கள்.

பல துன்பங்களைக் கடந்து சமுத்திரத்தைத் தாண்டி இலங்கையை அடைக்கிறார் ஹனுமன்.

சுந்தரகாண்ட நாயகரான ஆஞ்சனேயர் லங்கிணியை வென்று கோட்டை வாஸலை அடையும் போது தன் இடது காலை முதலில் வைத்துப் புகுகிறார்.

ஜீவனின் சரீரத்தில் வலது பாகத்திற்கு முதல் ஸ்தானமும் இடது பாகத்திற்கு இரண்டாம் ஸ்தானமுமே அளிக்கப்படுகிறது. சரீர தத்வத்தில் வலப்பாகம் ஆணாகவும், இடப்பாகம் பெண்ணாகவும் அமையப்பட்டுள்ளது. பெண்ணான இடது கை சரீரத்திற்கான சகல பணிகளையும் தயக்கம் இன்றி செய்கிறது தாயாக. தாயை மதிக்கும் ஜீவன் சரீரத்தின் இடப்பாகத்தை அவமதிக்கிறது. இடது கை இல்லையேல் வலது கையால் மட்டும் தனித்து எந்த வேலையைச் செய்ய முடியும்?

இதனை உணர்த்தவே ஆஞ்சனேயர் முதலில் இடது காலை வைக்கிறார். இதன் தத்வம் ஆஞ்சனேயர் சீதையான லஷ்மியை தேடப் போகிறார். அதனால் இடப்பாகமான லட்சுமியை தன் பணிக்கு ஆசீர்வதிக்கும்படி வேண்டி இடப்பாகத்தை முதலில் வைக்கிறார்.

இராவணவதம் ஆன பின்பும் விபீஷணரான இராவணன் தம்பி இலங்கையை ஆளப்போவதால் இலங்கை லட்சுமி கடாச்சம் நிறைந்து இருக்க வேண்டியே இடக் காலை முதலில் வைக்கிறார். ஆக ஜீவனின் வலது, இடது இரு பாகத்திற்கும் சம அந்தஸ்த்து உள்ளதை ஆஞ்சனேயர் ஜீவனுக்கு புலப்படுத்துகிறார்.

இரவு பூராவும் இலங்கையைச் சுற்றியும் இராவண அந்தப்புரத்திலும் சீதையைக் காணாமல் ஆஞ்சனேயர் கடைசியில் அசோக வனத்தில் இராட்ச்சஸிகள் புடைசூழ அசோகமரத்தடியில் அழுக்கடைந்த ஏக வஸ்திரத்துடன் சோகமே உருவாக அமர்ந்திருக்கும் சீதையைக் காண்கிறார்.

அதன் நடுவில் விபீஷணழ்வார் புதல்வி பல இராட்ச்சஸிகளால் துன்புறுத்தப்படும் சீதாதேவிக்கு ஆறுதலாக தான் கண்ட சுப சொப்பனத்தைக் கூற சீதை சிறிது ஆறுதல் அடைக்கிறாள்.

அது சமயம் யாவ அரக்கியரும் நித்திரையில் ஆழ்ந்திருந்தனர். இதை பயன்படுத்தி ஆஞ்சனேயர் இராம சரிதத்தை கூற ஆரம்பிக்கிறார். இதன் மூலம் தூதாக அனுப்பப்பட்டவனின் கடைமைகளையும் நீதியை பக்குவமாகக் கூறுகிறார் அனுமான்.

சீதைக்கு தன்னிடம் நம்பிக்கை ஏற்பட்டபின் ஸ்ரீராமரால் அளிக்கப்பட்ட கணையாழியை ஆஞ்சனேயர் அளிக்க சீதை அதைப்பார்த்து தங்கள் கடந்தகால சம்பவங்களை நினைவுப்படுத்தி கண்ணீர் வடிக்கிறாள்.

பின் ஆஞ்சனேயரால் ஆறுதல் அளிக்கப்பட்டு தன் நிலைக்கு வருகிறாள் இதன் பின் தன்னிடம் இருந்த சூடாமணியை ஆஞ்சனேயரிடம் கொடுத்து ஸ்ரீராமரிடம் தரும்படி பிரார்த்திக்கிறாள். இதனைக் கண்டவுடன் ஸ்ரீராமர் உன்னிடம் மிகவும் நம்பிக்கையும் ப்ரீதியும் காட்டுவார் என ஆஞ்சனேயருக்கு ஆசி கூறி விடைகொடுத்தாள்.

ஆஞ்சனேயர் அசோக வனத்தை அழித்து இராவணனுக்கு கோபம் வரச் செய்து அவனால் அனுப்பட்ட அஷ்ஷய குமாரர் முதல் பல இராவண சைன்யத்தையும் அழித்தபின் இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரத்திற்கு கட்டுப்பட்டு இராவணைக் காண அஸ்திரத்திலிருந்து விடுபட்டும் விடுபடாதவர் போல காட்டிக் கொண்டு சபைக்கு வருகிறார்.

இராவணனுக்கு கீதோபதேசம் எவ்வளவு செய்தும் பலன் கிட்டாமல் போகிறது. விபீஷணர் இராவணனுக்கு தூதுவனை கொல்லக் கூடாது. ஏதாவது தண்டனை கொடுத்து அனுப்பலாம் என எடுத்துக் கூறியதின் பேரில் ஆஞ்சனேயர் வாலில் நெருப்பு வைத்து அனுப்புகிறான்.

ஆஞ்சனேயர் வாலில் வைக்கப்பட்ட தீ அவருக்கு சுடாது இருக்கும்படி சீதை பிரார்த்தித்த காரணத்தால் அனுமனுக்கு தீ குளிர்ந்தே இருக்கிறது. இந்த அனுபவம் சீதையாலேயே என்று உணர்ந்த ஹனுமன் வாலில் இட்ட தீ மூலம் இலங்கையையே கொளுத்துகிறார்.

அசோகவனம் தவிர மற்ற இடங்கள் தீக்கு இரையாகின. ஆஞ்சனேயர் பின் சீதையிடம் விடைபெற்று ஸ்ரீராமரிடம் கண்டேன் சீதையை எனச் சொல்லி சூடாமணியை ஸ்ரீராமரிடம் பவ்யமாக அளிக்கிறார்.

இவ்விதம் ஆஞ்சனேயர் தூதுவனின் சகல கடமைகளையும் சிறப்புற நடத்தி ஜீவனுக்கு சாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு உபாயங்களையும் பிரயோகித்து அதில் எவ்விதம் வெற்றி அடைய வேண்டும் என்ற மார்க்கத்தைக் தானே நடத்திக் காட்டுகிறார்.

ஸ்ரீராமர் சூடாமணியைக் கண்டு அதன் மூலம் சீதையின் கடந்தகால நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து மகிழ்ச்சியும், துக்கமும் அடைக்கிறார்.

## யுத்தகாண்டம்

ஸ்ரீராமர் சீதையை தேடும் பணியை ஏற்று அதன் மூலம் வடக்கிலிருந்து, தெற்குவரை பாரதத்தை பாதயாத்திரையாகவே நடந்து தன் பாத தூளிகளைப் பதித்துள்ளார்.

அது மட்டும் அல்லாது ஸேது பந்தனம் மூலம் இந்தியாவிலிருந்து பிரிந்துள்ள இலங்கையை இணைத்துள்ளார்.

ஸேதுவில் அணைக்கட்ட அணில் உதவியதால் அதன் முதுகைத் தடவி அன்புடன் தன் மூன்று விரல்களைப் பதித்துள்ளார் பிரம்மா, விஷ்ணு, சிவனாக நாங்கள் மூவரும் இணைந்தே உலகில் உள்ள சகல பணிகளையும் செய்கிறோம் என ஜீவனுக்கு உணர்த்துகிறார்.

பின் இலங்கை சென்று இராவண சம்காரம் செய்து சீதையை மீட்கிறார். யுத்தத்தின் போது இராவணின் தலையை வெட்ட வெட்ட திரும்ப முளைத்துக் கொண்டே இருப்பதின் மூலம் தீய செயல்களை களையக் களைய முளைத்துக் கொண்டே இருக்கும் ஜீவன் தன் விடா முயற்சியின் மூலமே இதனை வெற்றிகாண வேண்டும் என்ற நீதியை புகட்டுகிறார்.

சீதையை மீட்டபின் அவளை அக்னிப்பிரவேசம் செய்ய வைத்து அவளில் பொதிந்துள்ள கங்கையையும், அக்னி மூலம் சிவதத்வத்தையும் உலகிற்கு புலனாக்குவதுடன் சீதை புடம் போட்ட தங்கம் என்று இன்றும் தங்கத்தைப் புடம் போட்டு நிருபிக்கிறார்கள்.

சீதை தீக்குளித்தபின் அவளைச் சர்வ அலங்காரங்களுடன் விபீஷனாழ்வார் ஆட்சி செய்யப் போகும் இலங்கையில் இராஜ சபைக்கு அழைத்து சென்று அங்கு விபீஷனாழ்வாருக்கு முடிசூட்டி வைக்கிறார் இராமர்.

இதன் பின் புஷ்பகவிமானம் மூலம் ஸேது பந்தனம் செய்யத் துடங்கும் முன் சிவ லிங்கத்தை ஸ்ரீராமர் தன் கையால் மண்ணெடுத்து பிடித்து வைத்து பூஜை செய்தார். அந்த லிங்கத்தை திரும்ப வரும் போது விமானத்துடன் அங்கு இறங்கி சீதையுடன் லட்சுமணர், ஜாம்பவான், சுக்ரீவன், அங்கதன் ஆஞ்சனேயர், விபீஷணர்யாவருடன் கூடி சிரத்தையாகப் பூஜை செய்கிறார்.

இவ்விதம் இராமேஸ்வரத்தில் சிவ லிங்கத்தைப் பிரதிஷ்டை ஸ்ரீராமர் தன்கையால் செய்வித்ததுடன் காசியில் விஸ்வநாதருடன் இணைக்கும் பாலமாக அமைத்துத் தருகிறார். ஜீவனின் சிருஷ்டித்தத்வத்துடன் மோட்ச மார்கமும் கூடிய சம்பவத்தை புலனாக்க. இணைக்கும் பாலமாக அமைத்து தருகிறார்.

பின் பரத்வாஜர் ஆஸ்ரமத்தில் இறங்கி குரு வந்தனம் செய்யும் சமயம் ஆஞ்சனேயரை நந்திக்கிராமத்திற்கு அனுப்பி 14 வருஷம் முடிந்ததும் ஸ்ரீராமர் வராவிட்டால் தீக்குளிப்பேன் என்று சொல்லியிருந்த பரதனை தடுத்து நிறுத்துகிறார்.

நந்திக் கிராமத்தில் பரதரும், சத்ருக்கணரும் 14 வருஷம் பாதுகையை பூஜித்து வந்தது பிரம்மனையும் அவர் சிருஷ்டிக்கும் ஜீவன் சகலவித நன்மைகளுடன் பிறப்பதுடன் செவிச் செல்வமும், பேசும் அறிவும் நிறைந்து பிறக்க வேண்டும் எனப் மூவரும் கூடிப் பிராத்திக்கிறார்கள். அதாவது பரதராகிய சங்கும், சத்ருக்கணனாகிய சக்ரமும், மரப் பாதுகையான பிரம்மனைப் பிரார்திக்கிறார்கள்.

ஸ்ரீராமரும், சீதையும், பிரம்மனை மரருபமாக கானகத்திலும், அசோகவனத்திலும் வணங்கிப் பிரார்திப்பது வனம் மூலமே மழையும் அதனால் உலகில் நீரும் நிரம்பி இருக்கும். அதனால் ஜீவன் சகலவித உணவுப் பொருள்களும் நிறைந்து சுபிட்சமாக வாழ வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் 10 வித நற்பண்புகளுடன் வாழ வேண்டும் என்ற உயர்ந்த நோக்கமே ஆகும். இதற்காக தங்களையே வருத்திக் கொண்டு ஜீவனை ரட்சிக்கும் மார்க்கத்தைக் காட்டுகிறார்கள்.

இது மட்டும் அல்லாமல் பரத, சத்ருக்னர் மூலம் நந்திக்கிராமத்தில் பாதுகையாக பிரம்மனை வைத்து பூஜித்து ஜீவ சிருஷ்டியின் நன்மைகளை வேண்டுகிறார்கள். பரதன் மூலம் கானகத்தில் ஸ்ரீராமர் இருந்தாலும் அயோத்தியை நீதியுடன் ஆண்டு மக்களின் சுபிட்சத்தையும் காக்கிறார்கள்.

ஓம் என்ற பிரணவாகர ரூபத்தில் மரமாக இருந்து ஜீவன் ஸ்வாஸிக்கும் காற்றை சுத்திகரிக்கும் பணியையும் பிரம்மன் ஏற்பதால் சீதா, ராமர்,

பிரம்மனை பலவித ரூபங்களிலும் மதித்துப் பாராட்டி ஜீவனை ரட்ச்சிக்கிறார்கள்.

நந்திக்கிராமத்திலிருந்து அயோத்தி வந்தடைந்த சீதா, ராம, லட்சுமண, பரத, சத்ருக்கனை அயோத்தியா வாஸிகள் மிக மகிழ்வோடு வரவேற்கிறார்கள்.

வசிஷ்டர் முதலான ஸப்தரிஷிகளும் ஸப்தநதிகளிலிருந்து நீரைக் கொண்டு வந்து சீதா, ராமரை பூர்ண கும்ப மரியாதையுடன் மஞ்சன நீராட்டுவதும் ஜீவனின் சிருஷ்டிதத்வத்தை மதித்து போற்றவே ஆகும். இவ்விதம் மஞ்சன நீராட்டி மங்கள வாத்ய கோஷங்களுடன் சகல தேவதைகளும், வானரர்களும் விபிஷனாழ்வார் முதல் சகல இலங்கை மக்களுடன் கூடி சீதா, ராமரின் பட்டாபிஷேக கல்யாணம் கோலாகலமாக மகிழ்ச்சி நிறம்பி நடந்தேறியது.

ஸ்ரீராமரும், சீதாதேவியும் வந்திருந்த யாவருக்கும் சகலவிதமான பரிசுகளையும் வழங்கியதுடன் ஆஞ்சனேயர் சகல விதத்திலும் பிரதிபலன் பாராமல் உதவியவருக்கு முத்து மாலையை பரிசளித்தார்கள். ஸ்ரீ ஆஞ்சனேயர் கண்களில் ஆனந்தம் கூத்தாட மகிழ்வுடனும், மரியாதையுடனும் முத்து மாலையை பெற்றுக்கொண்டார்.

பட்டாபிசேகம் முடிந்து பரிசுகள் வழங்கப்பட்ட பின் யாவரும் விருந்து உண்டு அவரவர்கள் ஊருக்குப் புறப்படுகிறார்கள்.

விபீஷனாழ்வார் இலங்கைக்குப் புறப்படும் சமயம் ஸ்ரீராமர் தங்கள் குலதனமான பிரணவாகார விமானம் கொண்ட இஷ்வாகு குலதனமான சூரியவம்ஸத்தவராலும், சந்திரவம்ஸத்வராலும் பூஜிக்கப்பட்ட ஸ்ரீரெங்கநாதரை அன்பளிப்பாக அளிக்கிறார்.

விபீஷனாழ்வார் இஷ்வாகு குலதனத்தை பக்தியுடன் இலங்கைக்கு எடுத்துச் செல்கிறார். செல்வதற்கு முன் அவருக்கு ஒரு நிபந்தனை ஸ்ரீராமரால் அளிக்கப் படுகிறது. அதாவது ஸ்ரீரெங்கநாதருடன் கூடிய விமானத்தை நடுவில் எங்கும் கீழே வைக்கக்கூடாது என்று.

ஓம்கார பிரணவாகார ஸ்ரீரெங்க விமானத்தை விபீஷனாழ்வார் தூக்கிவரும் சமயம் மாலை நேரம் வந்து விட்டது. சந்தியாகால பூஜை செய்ய வேண்டிய நேரம் ஆதலால் விபீஷனாழ்வார் சுற்று முற்றும் நோக்கிய சமயம் ஆடுமேய்க்கும் சிறுவனைப் பார்க்கிறார். பையனிடம் ஸ்ரீரெங்க விமானத்தை கீழே வைக்காமல் கையில் வைத்துக் கொள். நான் சந்தியா கால பூஜை முடித்து வரும் வரை கீழே வைத்து விடாதே என்றதும் சிறுவன் நான் ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணுவேன், மூன்று எண்ணியதும் வராவிட்டால் விமானத்தை கீழே வைத்தூ விடுவேன் என்று கூறியதும். விபீஷனாழ்வாரும் நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டு சென்றார்.

இந்த இடம் ஏற்கனவே யானைவனமாக இருந்து அங்கு சிங்கப் பெருமாள் கோயிலில் லட்சுமி நரஸிம்மராக நரஸிம்மாவதாரம்

முடிந்ததும் அமர்ந்த ஸ்தலமாகும். இதனைச் சுற்றிலும் அகஸ்தியர் கமண்டலத்தில் அடைத்து வைத்திருந்த காவேரியை காக்கை ரூபத்தில் வந்து வினாயகரே கமண்டலத்தின் மூக்கைக் கொத்தி வெளியே கொண்டு வந்து குடகு மலையிலிருந்து ஸ்ரீரெங்கம் வரை பாய்ந்துவந்து மூன்று புறமும் நதியாக சூழவைத்து ஒரு தீபமாக அமையச் செய்து பூலோக வைகுண்டமாக ஜீவனின் மோட்ச்ச வாஸலாக அமையப்போகும் இடத்தில் அரங்கன் வந்து அமர முன்னேற்பாடாக ஏற்பாடுகள் செய்த இடமாகும்.

ஆகையால் வினயாகரே இடையனாக வந்து ரெங்கவிமானத்தை விபீஷனாழ்வாரிடம் இருந்து பெற்றுக் கொண்டு மூன்று எண்ணியவுடன் வரமுடியாமல் தடுத்து ஸ்ரீரெங்க விமானத்தை மூன்று புறமும் காவேரி சூழ்ந்த ஸ்தலத்தில் வைத்து விடுகிறார்.

விபீஷனாழ்வார் திரும்ப வந்து ரெங்கவிமானத்தை தூக்கப் பார்த்து அதனை அசைக்கவும் முடியாமல் போகவே ஏமாற்றம் அடைகிறார். அப்போது இடைய ரூபத்தில் இருந்த வினயாகர் தன் சுயரூபத்தை எடுத்துக் கொண்டு விபீஷனாழ்வாரிடம் அரங்கன் இந்த சேத்திரத்தில் இருந்து கொண்டு ஜீவனின் முக்திப்பணிகளை ஏற்கப் போவதால் தென்திசை இலங்கை நோக்கி உனக்கு எப்போதும் காட்சி கொடுப்பார் என வாழ்த்தி தானும் ஜனன, மரணப் பணிகளை ஏற்க காவேரியின் மறுகரையில் மலைமேல் உச்சிப்பிள்ளையாராக அமர்ந்து ஜீவனின் ஜனன, மரணப் பணிகளை அரங்கனின் ஆசியுடனும் திருவானைக் கோயில் ஜம்புகேஸ்வரர், அகிலாண்டீஸ்வரி ஆசியுடனும் ஏற்கிறார். லட்சுமி நரஸிம்மர் ஜீவனின் பக்தியின் எடுத்துக் காட்டாக அமர்ந்து பரிபாலிக்கிறார்.

இராமேஸ்வரத்திலும், ஸ்ரீரெங்கத்திலும் ஜீவனுக்குண்டான சேஷமப் பணிகளை ஸ்ரீராமர் தன் அவதாரத்தின் போதே நடத்தி வைக்கிறார்.

இராமாயண காலத்தில் ஸ்ரீராமர் ஜீவ சிருஷ்டிக்கு 6வரும் கலந்த ரூபமாக ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமிக்கு மதிப்பளிக்கிறார்.

ஜடாயுவின் தம்பியான சம்பாதி பித்ருகர்மம் செய்யாத பாபத்திற்கு பிராயச்சித்தம் என்ன என்று ஸ்ரீராமரைக் கேட்க ஸ்ரீராமர் கழுகு மலையில் ஆம்பல் நதியில் நீராடிய பின்பு ஸ்ரீசுப்ரமண்யரைப் பூஜித்தால் பாபம் நீங்கி முக்தி அடைவாய் என சுப்ரமண்யஸ்வாமியின் மகிமையை எடுத்துரைக்கிறார்.

இவ்விதம் சிவன், வினயாகர், சுப்ரமண்யர் ஆக யாவரும் ஜீவ சிருஷ்டிக்கு தங்கள் பணிகளை செய்வதை ஜீவனுக்குப் புலப்படுத்தி மதிப்பளிக்கிறார்.

சிவன் மூலம் பஞ்சபூத தத்வத்தையும் வினயாகர் மூலம் சிவ - வைஷ்ணவம் இணைந்த ரூபத்தையும், ஆறுமுருகன் மூலம் 6வரும் இணைந்த ரூபத்தையும், ஸப்தரிஷி, ஸப்தநதிகள் மூலம் ஜீவ சிருஷ்டி

தத்வத்தையும், அஷ்டாச்சர மந்திரம் மூலம் தானே ஸர்வத்திலும் இணைந்து செயல் படுவதையும் இராமாயணம் மூலம் ஸ்ரீராமர் ஜீவனுக்கு சகலத்தையும் புலப்படுத்திவிடுகிறார்.

இதன் மூலம் இராமாயணம் ஜீவன் ஸர்வத்தையும் உணர்ந்து 10 வித நற்பண்புகளுடன் வழி நடக்கும் ஸர்வ உபதேசமும் அளித்துவிடுகிறது.

அயோத்தியில் ஸ்ரீராமர் ஆட்சி காலத்தில் நியாயம், தர்மம் இருந்ததால் ஜீவன் யாவ சுகமும் பெற்று சுபிட்ச்சமாக சந்தோஷத்துடன் வாழ்கிறார்கள்.

ஸ்ரீராமர் சீதையுடன் காசி முதல் இராமேஸ்வரம் வரை தங்களால் ஏற்படுத்தப்பட்ட கோயில்களுக்கு சென்று தங்கள் கையாலேயே பூஜையும் செய்தார்கள். இதில் அயோத்தியில் அமைந்த ரெங்கநாதர் கோயில் மிகவும் முக்கியம் வாய்ந்தது ஏன் என்றால் அவர்கள் தினமும் சென்று வழிபட்ட முகூர்த்தம் ஆகும்.

தெற்கே அமைந்த ரெங்கநாதரையும் ஸ்ரீரெங்கநாயகியையும் அவர்கள் கையாலேயே பூஜித்துள்ளார்கள். சிதம்பரம் நடராஜர் ஆலயத்தில் நேரிடச் சென்று அவர்கள் கையாலேயே பூஜைகள் செய்துள்ளார்கள்.

சோளிங்கபுரம் சென்று நரஸிம்மரை தரிசித்துள்ளார்கள். கேரளத்தில் உள்ள பத்மநாபரை மும்மததும் இணைந்த ரூபமாக தரிசித்துப் பின் சபரிமலையாக அமையப்போகும் மலைக்குச் சென்று பம்பா நதியிலும் நீராடி வழிபட்டுள்ளார்கள். இவ்விதம் ராமர் ஆட்சி காலத்திலேயே பின் யுகங்களுக்குத் தேவையான சகல காரியங்களையும் மிகுந்த கண்ணும் கருத்துமாக நடத்தி வைக்கிறார். இவ்விதம் வடக்கிலிருந்து தெற்குவரை வனவாஸத்தின் போதும் சரி, ராஜ்ய பரிபாலத்தின் போதும் சரி, தங்கள் பாதத்தூளிகளை பதித்துள்ளார்கள்.

இவ்விதம் ஸ்ரீராமர், சீதாதேவியுடன் லட்சுமண, பரத, சத்ருகனருடன் ராஜ்யபரிபாலனம் சிறப்புற நடத்திவந்தார்கள்.

## உத்ரகாண்டம்

சந்தோஷமாக இருந்த சீதா, ராமர் வாழ்க்கையில் மற்றுமொரு மகிழ்ச்சிகரமான விஷயம் நடந்தது, சீதாதேவி கருவுற்ற சமாசாரம் 7 மாத காலம் அமைதியாகவே சென்றது. வளைகாப்பு பூச்சூட்டல், ஸ்ரீமந்தம் என யாவரும் கூடி மகிழ்ந்து கொண்டாடினார்கள்.

இதன் பின்தான் ஸ்ரீராமர் சீதாதேவியே எதிர் பாராத திருப்பம் அவர்கள் வாழ்க்கையில் ஏற்பட்டது. ஸ்ரீராமர் மாறுவேஷம் பூண்டு நகரை இரவு நேரம் சுற்றி வந்த சமயம் ஒரு வண்ணான் குல தம்பதிகளின் இடையே ஏற்பட்ட வாக்குவாதத்தை கேட்க நேர்ந்தது.

வண்ணானின் மனைவி பிறந்த வீட்டிற்கு சென்றவள் குறிப்பிட்ட நேரத்தில் வீடு திரும்பாததை வண்ணான் குத்தலாக நான் என்ன ஸ்ரீராமரா? பிறர் வீடு சென்று குறிப்பிட்ட நேரத்தில் வீடு திரும்பாத மனைவியை ஏற்றுக்கொள்ள? என்ற சொல்லைக் கேட்டதும் ஸ்ரீராமரின் மனம் செம்மட்டியால் அடிபட்டது போல துடித்தது.

அரண்மனை திரும்பியதும் முதலாவதாக லட்சுமணனை அழைத்து அன்று இரவே எக்காரணமும் கூறாமல் சீதாதேவியை காட்டில் கொண்டு விடச் சொல்லிவிட்டார்.

சீதையிடம் சொன்ன காரணம் நீ வனவாஸத்தை மிகவும் விரும்பியதால் கர்ப்பவதியான உன் ஆசையை நிறைவேற்றவே வனம் அனுப்புகிறேன் என்று கூறிவிட்டார்.

சீதாதேவியும் ஸ்ரீராமரின் கட்டளையை சிரமேல் கொண்டு வனத்தில் வால்மீகி முனிவர் ஆசரமத்தில் தங்கி அங்குவரும் பசு, பட்ச்சி, மான் முதலியவைகளின் மனம் செலுத்தி சந்தோஷமாகவே இருக்கிறாள். லவன், குசன் பிறக்கிறார்கள் அதன் பின்பும் ஸ்ரீராமர் வனம் வந்து தன்னையும், குழந்தைகளையும் பார்க்காத போதுதான் அவளுக்கு விபரம் தெரிகிறது. மனதைத் திடப்படுத்தி வாழ்ந்து வருகிறாள்.

சீதாதேவி பிறப்பில் இராச்சஸ ராஜாவான இலங்கேஸ்வரனுக்கு மகளாகப் பிறக்கிறாள். அரசகுமாரியான சீதை மிதிலா நகர அரசரான ஜனகரால் வளர்க்கப்பட்டு அயோத்தியின் இளவரசரான ஸ்ரீராமருக்கு மனைவி ஆகிறாள். இவ்விதம் அரச பரம்பரையில் சகலவித சுகபோகங்களிலும் திளைத்து வளர்ந்த அவள் பலவித கஷ்டங்களையும் எவ்விதமான வேதனையும் காட்டாமல் சுகத்தையும், துக்கத்தையும் ஒன்றாகவே பாவிக்கிறாள்.

இந்த மனப் பக்குவம் ஸ்ரீராமர் முடிதுறந்து வனம் செல்லும் போது ஏற்பட்டதை விட பல மடங்கு மேலானதாகும்.

இதே போல் பன்மடங்கு மேலானது இரு குழந்தைகளையும் எந்தவித மனக்கிலேசத்திற்கும் ஆளாகாமல் ஸ்ரீராமரால் நிராகரிக்கப்பட்டு வனத்தில் வால்மீகி முனிவரின் ஆஸ்ரமத்தில் தங்கி வளர்த்தது.

சாதாரணமாக ஸ்ரீராமர் கூறிய காரணப்படி வனவாஸத்தில் அவள் இனிமை கண்டதால் கர்பவதியான அவளை கானகம் அனுப்பியது, பின்பு வண்ணார் குல வதந்தி மூலம் ஸ்ரீராமர் உலக அபவாதந்திலிருந்து மீள்வதற்காகத் தான் அனுப்பப்பட்டாள் என்பதைத் தெரிந்தபின்பும் அவள் இரு குழந்தைகளுடன் கானகத்திலேயே பொறுமையுடன் தங்கியது, அவள் நினைத்திருந்தால் தன் தந்தையான ஜனகர் இல்லத்திற்கு சென்றிருக்க முடியும். அப்படிச் செல்லாமல் வால்மீகி முனிவர் ஆஸ்ரமத்தையே தன் அரண்மனையாகவும் ரிஷி குமாரிகளையே தன் அன்புச் சகோதரிகளாக எண்ணி ஸ்ரீராமரை மதித்து அரச

குலதர்மங்களை இலவ, குசருக்கு போதித்து வில், வாள், வித்தை, குதிரை ஏற்றம், யானை ஏற்றம் வரை முனிவர் மூலம் கற்பிக்கிறாள். அவள் நினைத்திருந்தால் அரசகுல வாடையே தன் மக்களுக்கு வேண்டாம் என தடுத்திருக்கலாம். இவை எல்லாம் சீதாதேவி இராமாயண காவியத்தில் ஸ்ரீராமரைவிட ஒருபடி உயர்ந்தவள் ஆகிறாள்.

ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் செய்கிறார் அயோத்தியில். ஸ்ரீராமர் யாகத்தை ஏற்கும்போது மனைவியுடன் இருக்க வேண்டும். இதை ஸ்ரீராமர் சீதாதேவியின் உருவத்தை தங்கச் சிலையாக வடித்து யாகசாலையில் தன் அருகில் மனைவி ஸ்தானத்தில் வைக்கிறார். இது ஸ்ரீராமரின் ஏகபத்னி விரதத்தின் உயர்வைக் காட்டுவதுடன் பின்பு சீதையின் சிலை காசி சேஷத்திரத்தில் அன்ன பூரணியாக அமரச் செய்யப் போகும் சாட்ச்சியாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

வால்மீகி முனிவர் லவ, குசரை அயோத்தியில் நடக்கும் அஸ்வமேத யாகசாலையை தரிசிக்க அழைத்து வருகிறார். வால்மீகி முனிவர் இராமாயண காவியத்தை கானமாக பாட லவ, குசருக்கு சொல்லி வைத்திருந்ததால் அவர்கள் ராம கதையை சீதா, ராமபட்டா பிசேஷகம் வரை கானமாகப் பாடுகிறார்கள், கானத்தைக் கேட்டு ஸ்ரீராமர் தன்னையே மறக்கிறார். சீதையுடன் தான் வாழ்ந்த காலத்திற்கே செல்கிறார். லவ, குசரை தன் மகன் என்று அறியாமலேயே ஆலிங்கனம் செய்து கொள்கிறார்.

லவனுக்கும், குசனுக்கும் அங்கு சீதையை காணாமல் சீதைக்கு பதில் சுவர்ண விக்ரகம் இருப்பது ஆச்சர்யமாக இருக்கிறது.

வால்மீகி முனிவர் ஆஸ்ரமத்திற்கு திரும்பிய பின் அவர்கள் நடந்ததைச் சொல்ல சீதையும் மெய்மறந்து குழந்தைகளை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிகிறாள். இவ்விதம் பதி, பத்னியின் ஐக்கிய பாவமும் ஆழ்ந்த அன்பும் ஜீவனுக்கு புலப்படுத்தப்படுகிறது.

லவனும், குசனும் அஸ்வமேதக் குதிரையை ஆஸ்ரமத்தின் அருகில் கட்டிப்போட அதனை மீட்க வந்த ராம, லட்சுமணருடன் இருவரும் மிகவும் வீரத்துடன் போராடுகிறார்கள். இவர்கள் வீரத்தைக் கண்டு ஸ்ரீராமரும், லட்சுமணரும் மிகவும் ஆச்சர்யப் படுகிறார்கள்.

இது சமயம் சீதாதேவி அங்குவர ஸ்ரீராமர் மிகவும் சந்தோஷப்படுகிறார். பின் சீதையின் மூலம் லவனும், குசனும் அவர்கள் மகன்கள் எனக் கண்டு சந்தோஷக் கடலில் திளைக்கிறார். சீதாதேவியை குழந்தைகளுடன் அரண்மனைக்கு மீண்டும் வரப் பிரார்திக்கிறார்.

ஆனால் சீதை முடிவாக வர மறுத்ததுடன் தான் அரண்மனைக்கு வந்தால் மீண்டும் மக்களின் அபவாதத்திற்கு ஸ்ரீராமர் ஆளாக வேண்டும் எனக்கூறி இருமகன்களையும் சந்தோஷத்துடன் ஸ்ரீராமரிடம் ஒப்படைக்கிறாள். பின் பூமித்தாயை பிரார்திக்க அவள் வாய் திறக்க அதனில் கங்கையாக பிரவேஸித்துவிடுகிறாள், உலக மக்களையும் ஜீவராசிகளையும் வாழ்விக்க.

சீதா, ராமர் பிரிவும் ஜீவனுக்கு உண்டான நீதிகளை புகட்டவும், வால்மீகி முனிவர் ஆஸ்ரமத்தில் இரு குழந்தைகளை வளரச் செய்து வால்மீகி முனிவர் மூலம் இராம காவியம் கானமாக உலகம் உள்ள வரை வாழ்விக்கவும் நடத்தப்பட்ட ஒரு சம்பவம்.

சீதையின் சரீரம் தங்கச் சிலையாக ஸ்வர்ண அன்ன பூரணியாக அமர்ந்து விடுவதால் சீதை பூமியில் கங்கையாகப் பிரவேஸித்து உணவுப்பண்டம் நிறைந்து கிடைக்கவே ஆகும். இவ்விதம் சீதையின் சரீரத்திற்கான புத்து மண்ணும், நீரும் இரு ரூபத்தில் இராமாயண காலத்திலேயே மதிப்பளிக்கப்படுகின்றன சிவதத்வரூபத்தில்.

ஸ்ரீராமர் லவன், குசனுடன் பலகாலம் அயோத்தியை நேர்மையுடன் ஆண்டு பின் தேசத்தை லவ, குசரிடம் ஒப்படைத்து ஸரயூநதியில் பிரவேஸிக்கிறார். பிரவேஸித்து மறையும் சமயம் தன் வலக்கையை உயர்த்தி மக்கள் யாவரையும் ஆசிர்வதிக்கிறார். ஸ்ரீராமருடன் லட்சுமண, பரத, சத்ருக்கனரும் ஸரயூவில் பிரவேஸித்து பின் புஷ்பகவிமான மூலம் வைகுண்டம் சேர்கிறார்கள்.

லவனும், குசனும் அயோத்தியை ஆளும் சமயம் பல ஸ்தலங்களுக்கும் சென்று தரிசிப்பதுடன் ஸ்ரீரெங்கம், ஸ்ரீ முஷ்ணம், சிதம்பரம் முதலிய ஸ்தலங்களையும் நேரில் வந்து தரிசிக்கிறார்கள். பல இடங்களிலும் வால்மீகி முனிவரால் இயற்றிய இராமாயண காவியத்தை கானமாகவும் பாடி சீதா, ராமர் புகழ் எங்கும் பரவச் செய்கிறார்கள்.

ஆஞ்சனேயர் எங்கெல்லாம் ஸ்ரீசீதா, ராம கதை கூறப்படுகிறதோ அங்கெல்லாம் சென்று ஆனந்தத்துடன் கேட்டு மகிழ்கிறார்.

ஸ்ரீசீதா, ராம லவ, குச சமேத
சரணம், சரணம்

## திரேதாயுகம் முடிந்து துவாபரயுக ஆரம்பம்

ஸ்ரீராமர் திரேதாயுக முடிவில் தான்மட்டும் சகோதரர்களான ஆதிசேஷன், சங்கு, சக்ரத்துடன் புஷ்பகவிமானத்தில் வைகுண்டம் அடைகிறார்.

ஸ்ரீராமாவதரத்திற்கான முக்கியபாத்திரமான லஷ்மி சீதாதேவியாக பூமியிலேயே தங்குகிறாள். ராமவதாரத்தில் சீதையைப் பிரிந்தவர் பிரிந்ததாகவே தன் கையால் பிரதிஷ்டை செய்த ஸ்ரீரெங்க ஷேத்திரத்தில் அரங்கன் சன்னதி தனியாகவும், தாயாரின் சன்னதி தனியாகவும், வைத்து படிதாண்டாப் பத்தினியாக ரெங்கநாயகித்தாயார் இருக்க பெருமானே

அவள் சன்னதி சென்று ஜீவனின் பிறப்பு, இறப்பு, மோட்ச்ச தீர்ப்பை வழங்குகிறார்.

பூமியைக் காக்க வராஹாவதாரம் எடுத்த பெருமாள் ஸ்ரீ முஷ்ணத்தை தன்ஸ்வயம்பூ ஸ்தலமாக வைத்து அங்குள்ள குளக்கரையில் அரசமரத்தை பிரம்மா, விஷ்ணு, சிவனுடன் கூடிய ஸ்தலவிருச்சமாக வைத்து அந்த ஸ்தலத்தை தரிசிப்பவர்களுக்கு குழந்தைச் செல்வம் ஏற்படும் வாய்ப்பை அளித்து ஜீவனை அனுதினமும் பரிபாலிக்கிறார்கள். வராஹாவதாரம் நடத்தி பூமியை மதித்துக் காக்காமல் அதற்கு தீங்கு செய்பவரை அழிப்பேன் என்ற நீதியை ஜீவனுக்கு போதிக்கிறார்கள்.

ஹிரண்யன் என்ற அசுரனை லட்சுமி நரஸிம்மராக அவதாரம் செய்து அழித்து பகவானை பக்தி செய்யாமல் தானே கடவுள் என அஹம்பாவம் கொள்ளும் ஜீவனை அழிப்பேன் என நீதி அளிக்கிறார்.

லட்சுமி நரஸிம்மவதாரம் எடுத்தபின் ஸ்ரீரெங்கஷேத்திரத்தில் பூலோக வைகுண்டமாக அமையப் போகும் ஷேத்திரத்தை உலகம் தோன்றியதும் யானைவனமாக இருந்த இடத்தை தேர்ந்தெடுத்து, வெள்ளையானைக்கு நித்திய பூஜை அளிக்கும் ஜம்புகேஸ்வரர், அகிலாண்டேஸ்வரி ஆலயத்தின் அருகில் அமர்கிறார். ஜம்புகேஸ்வரர் ஸப்தநதிக்கும் மதிப்பளித்து நீரை ஸதா வெளிக்கொண்டு வரும் பணியை ஏற்று நீரின் ஸ்தலமாக அமர்ந்து உள்ளவர். அதிலிருந்து மின்சாரத்தை வெளிக்கொண்டு வந்து உலகை சுற்றச் செய்யும் அகிலாண்டேஸ்வரி அம்பாளை சதா பூஜிக்கிறார். அம்பாளும் நீர் நிலை உயர்ந்து ஜீவன் ஷேமமாக இருக்க வெள்ளை யானையையும் நீரையும் உச்சிகால வேலையில் தினம் பூஜிப்பதுடன் கோமாதாவையும் பூஜிக்கிறான். இவ்விதம் பரஸ்பரம் இருவரும் இணைந்து உலகச் சேமத்தைக் கருதும் இடத்தின் அருகில் லட்சுமி நரஸிம்மரும் வந்து அமர்கிறார்.

இந்த ஸ்தலம் யானைவனமான கருப்பு யானை விநாயக ருபத்திற்கு விஷ்ணு ருபமாக வந்து தன் சிரஸை விநாயக ருபத்திற்கு கொடுத்த பின் கருப்புயானையின் உடல் இந்த ஸ்தலத்தில் விழுந்து யானை வனமானது.

அதேபோல் அம்பாளால் பிடிக்கப்பட்டு குழந்தை உருவம் சிவனால் சிரஸ் துண்டிக்கப்பட்டு அந்த உடலில் கருப்பு யானையின் சிரஸ் பொருத்தப்பட்டது. குழந்தையின் சிரஸ் சமுத்திரத்தில் விழுந்து திருப்பாற்கடல் கடைந்த பொழுது வெள்ளையானையான ஐராவதமாகி இந்திரனுக்கு பரிசாக அளிக்கப்பட்ட வெள்ளையானைக்கே அகிலாண்டேஸ்வரி திருஆணைக்கோயிலில் தினம் உச்சிகால பூஜை செய்து மரியாதை அளிக்கிறார்.

இவ்விதம் இருவராலும் அமையப்பட்ட ஸ்தலத்தில் விநாயகராலேயே ஸ்ரீவைகுண்ட நாதரான அரங்கன் கோயில் அகஸ்திய முனிவர் கமண்டத்திலிருந்து வெளிப்பட்டு காவேரியாக மூன்றுபுரம் சூழப்பட்ட இடத்தில் அரங்கனை விமானத்துடன் பிரதிஷ்டை செய்கிறார்.

ஹிரண்யன், ஹிரண்யாட்சன்வதம் ஆனதுமே ஜீவனின் ஜனன, மரணப் பணியை ஏற்கப் போகும் சகல பணிகளையும் திறம்பட செய்து அந்த அந்த சேத்திரத்தில் அமர்கிறார்கள். இவ்விதம் இராமாயண காலத்தில் ராமர் ஆரம்பத்தில் கூறியபடி எல்லாம் செய்தபின்பே வைகுண்டம் செல்கிறார்.

ஸ்ரீராமர் அவதார காலத்தில் அவரால் ஜீவனுக்கு வேண்டிய ஜனன, மரண மோட்ச ஏற்பாடுகள் சரிவர கவனித்து வைக்கப்பட்டள்ளன.

ஆனால் சீதாதேவியின் அவதாரகாலத்தில் உள்ள ரகஸ்யத்தை வெளிப்படையாக கூறப்படவில்லை. அவள் அசுரகுல மன்னனான இராவணன் புத்திரி என்பது சீதையை வளர்த்த ஜனகனுக்கும் தெரியாது, அவளை மணந்த ராமருக்கும் தெரியாது. அவளை காதலித்த இராவணனுக்கும் தெரியாது அவள் தன் பெண் என்று. இவ்விதம் இராமாயண காலத்தில் ரகஸ்யம் பின்னால் ஜீவனுக்கு அதன் காரணம் புலப்படுத்தவே ஆகும். சொல்லப் போனால் சீதையிடமே அவள் உண்மைத் தாய், தந்தையார் எனத் தெரியாதபடி மறைத்து வைக்கப்பட்டுள்ளது ஜீவனின் நலத்திற்காக.

ஜய, விஜயனே பகவானின் சாபத்தால் மூன்று ஜன்மமாக ஹிரண்யன், ஹிரண்யாட்சான் இராவண, கும்பகர்ணன், கம்ஸன், சிசுபாலன் என மூன்று பிறவி எடுத்து பகவானால் மோட்சம் அடைய மார்க்கம் தேடிக் கொண்டவர்கள் என்பவை நாம் அறிவோம். அதில் இரண்டு ஜென்மம் முடிந்துவிட்டது.

மூன்றவதாக கம்ஸனும், சிசுபாலனும் தோன்ற அவர்களை அழிக்க தேவகி, வசுதேவர் வயிற்றில் பகவான் அவதரிக்கிறார்.

தேவகி, வசுதேவரின் 8வது மகனாக இரவு 12 மணிக்கு காராஹிரகமாகிய ஜெயிலில் அவதரிக்கிறார். இவ்விதம் அவர் ஜெயிலில் அவதரிக்கும் காரணம் அசுரகுலவதம் காரணமாக பல உயிர்களை கொல்ல நேருவதால் தனக்குத்தானே இந்தத் தண்டனையை ஏற்கிறார். அவர் ஜெயிலில் இருந்த நேரம் சில நிமிஷங்களே, ஆனாலும் அதற்குள் அவர் பெரும் தண்டனையை அனுபவித்து விடுகிறார்.

இதன் மூலம் ஜீவனுக்கு கடவுளே ஆனாலும் தவறு செய்தால் அதன்பலனை அனுபவிக்கவே வேண்டும் என்று, இராமாவதாரத்தில் கர்பவாஸம் செய்து மனிதராகவே வாழ்ந்து காட்டுபவர் கிருஷ்ணவதாரத்தில் கர்பவாஸம் செய்து பிறந்தாலும் தான் கடவுள் என்பதை பல இடங்களிலும் புலப்படுத்திக் காட்டுகிறார். இராமாவதாரம் ஜீவனுக்கு ஜன்மகால நீதிகளையும் நற்பண்புகளுடன், கஷ்டகாலத்திலும் வாழும் மார்க்கத்தை காட்டும் அவதாரம்.

கிருஷ்ணவதாரம் ஜீவனின் சரீர தத்வத்தை அளிப்பதற்கான அவதாரமாதலால் கடவுளாகவே வாழ்ந்து காட்டுகிறார்.

வசுதேவர் மூலம் யமுனையைக் கடந்து பிருந்தாவனத்தில் இரவுக் இரவே பிரவேஸித்து விடுகிறார். தன்னுடைய ஸ்தானத்தில் பெண்

குழந்தை யசோதைக்குப் பிறந்ததை மாற்றி அமைக்கிறார். கம்ஸனால் தேவகியின் குழந்தை என வெட்டப்பட்ட பெண் குழந்தை துர்க்கையாக மாரி கம்ஸனிடம் நீ கொல்ல நினைக்கும் குழந்தை கோகுலத்தில் இருக்கிறான் என்று சொல்லி மறைந்து விடுகிறாள்.

கம்ஸன் துணுக்குறுகிறான். அன்று இரவு 12 மணிக்கு பிறந்த குழந்தை யாவற்றையும் இறக்கமில்லாமல் கொல்ல உத்திரவிடுகிறான். எந்த பிரயத்தனத்தினாலும் கோகுல கிருஷ்ணனை கொல்ல முடியாமல் தவிக்கிறான்.

இது இவ்விதம் இருக்க ஸ்ரீராமாவதாரத்தின் முடிவில் ரிஷிகளுக்கு வாக்களித்தபடி கிருஷ்ணவதார பால பருவத்தில் கோபஸ்திரீகளாக பிறந்துள்ள ரிஷிகளுக்கு ஜீவாத்மா, பரமாத்மா ஐக்கிய பாவ அனுபவம் அளிக்கிறார் கிருஷ்ணன்.

ஒவ்வொரு கோபஸ்திரீகளுடனும் ஒவ்வொரு கிருஷ்ணனாக இருந்து ராசக்கிரீடையாக அவர்களுக்கு இந்த அனுபவத்தை அளிக்கிறார்.

கோபஸ்திரீகளில் முக்கியமாக ராதாவை தன் காதலியாக ஏற்று அவள் மூலம் பக்தி செய்பவர்கள் யாவரும் ராதா, கிருஷ்ணனை காதலர்களாக வைத்து அவர்களுக்கு கல்யாணம் செய்வித்து ஜீவாத்மா, பரமாத்மா ஐக்கிய பாவத்தை அனுபவிக்கும்படி செய்கிறார்.

ராதா என்ற பெயரின் பொருளே ரா-ராமபக்தி, தா-தாமோதரனகிய கிருஷ்ணபக்தி என்பதாகும். கலியில் ராமபக்திக்கும், கிருஷ்ணபக்திக்கும் ஜீவன் முக்கியவத்துவம் அளித்து பக்தியின் இன்ப அனுபவத்ததைப் பெற்று 10 விதநற்பண்புகளுடன் வாழவேண்டும் என்பதற்கான முக்கியம் இதில் அடங்கியுள்ளது.

பகவான் ஸ்ரீகிருஷ்ணன் வெண்ணை திருடி உண்டு ஜீவனுக்கு காட்டுவது பால் தயிராக தயிரிலிருந்து வெண்ணை வருகிறது. வெறும் பாலைப் பார்க்கும் போது அதில் தயிர் இருப்பதையும் தயிரில் வெண்ணை இருப்பதையும் எப்படி ஜீவன் காண முடியவில்லையோ அதேபோல் பகவான் எங்கும் எதிலும் நிறைந்திருப்பதை காண முடியாது. அந்த அனுபவத்தை பக்தி மூலமே காணலாம். அப்படிக் கண்டால் வெண்ணையிலிருந்து நெய்யை காண்பது போல மனம் உருகி பக்தியின் ஆழத்தை உணரலாம் என்றே இந்த விளையாட்டை விளையாடி மிக எளிய முறையில் ஜீவனுக்கு போதிக்கிறார் கண்ணன்.

பிருந்தாவனத்தில் கோகுல கண்ணனாக பல பால லீலைகள் புரிய தான் எடுத்த அவதார நோக்கமாக கம்ஸ வதத்தை தனது 13ம் வயதில் முடித்து பின் சிசுபால வதத்திற்கான நாளை எதிர்பார்த்து இருக்கிறார்.

இது சமயம் மகாபாரத கதையின் ஆரம்பமாக பஞ்சபூத தத்வமாக பஞ்சபாண்டவர் பிறக்கிறார்கள். இவர்களின் மூத்தவனான சூரியபுத்திரன்

கர்ணன் தனியாகவே வளர்க்கப்படுகிறான். ஜய, விஜயன் பகவானின் சாபத்திற்கு இலக்கானதும் சாபவிமோசனம் கோரி அவர்கள் பகவானை பிரார்திக்கும் போது அவர் அதற்கான விடையை கூறுகிறார். அதாவது மூன்று பிறவி துஷ்டனாகப் பிறந்து விமோசனம் பெறுகிறீர்களா? அல்லது 100 பிறவி நல்லலவராகப் பிறந்து விமேசானம் பெறுகிறீர்களா? என்று கேட்டதும் மூன்று பிறவி துஷ்டராக இருந்தே விமோசம் பெறுகிறோம் என்றதும் அதேபோல மூன்று துஷ்டரான அசுரப்பிறவி எடுத்து மோட்சம் பெரும் பாக்கியம் அளிக்கப்படுகிறது.

இதையே 6வர் நல்ல வராகவும் 100 குழந்தைகள் துஷ்டர்களாகவும் மாற்றிப் படைத்துக் காட்டுகிறார்கள் மஹாபாரதத்தில் இது ஏன்?

சரீர தத்வமாக உள்ள பஞ்சபூத தத்வம் ஜீவனுக்கு நல்லதே செய்கிறது. ஜீவனின் விரோதிகளான 100 குணங்கள் ஜீவனை அழிவுப்பாதைக்கு இட்டுச் செல்கிறது. இதுவே பஞ்சபாண்டவர், துரியோதனாதிகள் தத்வம். இதை வைத்தே மஹாபாரதக் கதை பின்னப்பட்டு ஜீவனுக்கு தரப்படுகிறது. இதில் சூரிய புத்திரன் கர்ணன் இருவரக்கும் மையமாக வைக்கப்படுகிறான். ஏன் என்றால் சரீரத்தில் சூரியதேவனுக்கே முக்கிய அங்கம் இருப்பதால் ஜீவன் வாழும் வரை இருபக்கமும் இருந்து பணிபுரிவதால் பிறப்பை நல்வம்ஸத்துடனும் நடைமுறையில் தீயவம்ஸத்தவருடனும் பழகவைத்து முடிவில் தர்மத்திற்கே விடை அளிக்கும்படி வைத்துக் காட்டுகிறார்கள் கர்ணன் மூலம்.

கம்ஸவதத்திற்குப்பின் கண்ணன் குருகுலவாஸம் செய்து சகலவித்தைகளையும் குருவின் மூலம் கற்று குரு காணிக்கையாக அவர் இழந்த குமாரனை அசுரனிடமிலிருந்து மீட்கும்போது பாஞ்சசன்யத்தைப் பெற்று குரு, குரு பத்னியிடம் அவர் மகளை குரு காணிக்கையாக அளிக்கிறார் அவர்கள் விருப்பப்படி.

குருகுலத்தில் குசேலர் என்னும் சிஷ்யனுடன் அபரிமிதமான பாசத்துடன் பழகிய நண்பனிடம் விடை பெற்று பலராமருடன் துவாரகை வருகிறார்.

பலராமருக்கு மணம் ஆகிய பின் கண்ணனுக்கு திருமணம் செய்ய உத்தேசிக்கப் படுகிறது. இது சமயம் கண்ணனுக்காகவே பிறந்த ருக்குமணியின் திருமணமும் நிச்சயம் செய்யப்படுகிறது. சிசுபாலனுடன், இத்திருமணம் நடக்கக் கூடாது என்று ஒரு பிராம்மணர் மூலம் ருக்குமணி கண்ணனுக்கு ஒலை அனுப்புகிறாள். கண்ணன் ருக்குமணிக்கு பிராம்மணர் மூலமே செய்தி அனுப்புகிறார்.

ருக்குமணியை மணக்கோலத்துடன் கௌரி கோயிலுக்கு வரும்படி அனுப்பிய செய்திப்படி ருக்மணி கௌரி கோயிலுக்கு தோழியருடன் வருகிறாள்.

கண்ணனும் கூறியபடி கோயிலுக்கு வந்து ருக்குமணியை நேரில் கவர்ந்து வந்து துவாரகையில் யாவரும் சூழ சிறப்பாக மணம் செய்து கொள்கிறார்.

ருக்குமணியை கோயிலிலிருந்து கவர்ந்து வந்து மணம் முடித்ததில் உள்பொருள் ஒன்று உள்ளது.

சீதையை இராமாவதாரத்தில் பிரிந்து வந்த பகவான் சீதையான லஷ்மியிடம் இருந்து கிருஷ்ணாவதாரத்திலும் பிரிந்தே உள்ளார் என்பதை ருக்குமணியின் மூலம் புலப்படுத்துகிறார். ருக்குமணி கோயிலில் உள்ள கண்டாமணியின் நாதருபமே ஆவாள். அதனாலேயே அவள் பெயரை உருக்கி வார்த்த ருக்குமணி என்று வைத்து மணிக்கு கோயில்களில் முக்கியத்துவம் அளிப்பதால் அவளை கோயிலிலிருந்தே அழைத்து வந்து மணம் செய்து கொள்கிறார்.

சத்யபாமா பெண்களுக்கான போட்டி, பொறாமை, வீரம் என்ற குணங்களுக்கு விளக்கம் கொண்ட மூன்றும் இணைந்த பெண் ருபமாக வைத்து முக்கியம் அளிக்கப்படுகிறார்.

இவர்கள் இருவரும் கண்ணனின் பத்னிகள் என்று இருந்தாலும் ஓம்காரநாத ருபத்திற்கும் பெண்மைக்கு வேண்டிய முக்கிய பண்பின் குணத்திற்கும் கொடுக்கும் மரியாதையே ஆகும்.

பெண்ணிற்கு வீரம் அவஸியம் ஆனால் அது தீயவழிக்கு பயன்படக் கூடாது. கைகேயி தசரதருக்கு சத்தியம் செய்து யுத்தத்தில் வெல்ல வைத்துள்ளாள்.

அது போற்றற்குரிய வீரம், அதை மெச்சி தசரதர் இரண்டு வரம் அளித்ததை பொறாமைக்கு ஆளாகி போட்டி மனப்பான்மைக்கு இடம் அளித்து தகாத வரன்களை கேட்டதால் கைகேயி பெண்மை குணத்திலிருந்து இறங்கி அபவாதத்திற்கு ஆளாகிறாள். அதே போல சத்யபாமாவும் நரகாசுரவதத்திற்கு உதவி, கண்ணனுக்கு சத்தியம் செய்து வீரத்திற்கு மேன்மை அளித்தாலும் பொறாமை மனப்பான்மைக்கு இடம் அளித்து ருக்குமணியிடம் விரோதம் கொள்வதால் அவளும் வீரம் இருந்தாலும் பெண்மைக்கு உரிய மதிப்பிலிருந்து இறங்கி வந்து விடுகிறாள்.

இதனாலேயே கிருஷ்ண துலாபாரத்தின் போது தன் சகல உடமைகளையும் இழந்து தாழ்ந்து நிற்கிறாள். ருக்குமணியோ ஒரு துளஸி தளத்தை வைத்து தராசுத்தட்டை உயர்த்தி தானும் உயர்கிறாள். இதுபோல இவவிரு பெண்கள் மூலம் ஜீவனுக்கு எது தேவை எது தேவை இல்லாதது என்ற நீதி போதிக்கிறார்கள்.

கண்ணன் குசேலருக்கு அவர் கொடுத்த அவலை உண்டு உயர்ந்த பதவியும், செல்வமும் அளிப்பது ஏழையாக இருந்தாலும் அவர்கள் மேல் அன்பையும், பாசத்தையும் அளிக்க வேண்டும். தன்னால் இயன்ற அளவு உதவ வேண்டும் என்ற நீதியை பால்ய நண்பர்களை பதவி உயர்வு பெற்ற சமயமும் மறக்காமல் அவர்களிடம் அன்பு செலுத்த வேண்டும். உயர்வு, தாழ்வு, மனப்பான்மையே கூடாது என ஜீவனுக்கு உபதேசிக்கப்படுகிறது.

பஞ்சபாண்டவர்களுக்கு திரௌபதி ஒரே பத்னி என அமைக்கப்பட்டுள்ளது. சரீர தத்வத்தில் பஞ்ச பூத இயக்கத்தை திரௌபதி மத்தாக இருந்து கடைந்து பிரித்து அதன், பாகத்திற்கு சரிவர அனுப்புகிறாள். அதனாலேயே இவ்விதம் கூறப்படுகிறாள்.

பஞ்சபாண்டவர்களுக்கு தேசத்தில் ஒரு சிறு பகுதிகூட அளிக்கக் கூடாது என பலவித சூதுகளால் அவர்களை அழிக்கப்பார்க்கும் கௌரவர்கள் தங்கள் தீயசெயலால் தோல்வியே அடைகிறார்கள். தீய செயல் வெற்றி அடையாது என ஜீவனுக்கு உபதேசிக்கவே நடத்திக் காட்டப்படுகிறது.

நல்ல செயல் செய்தாலும் அதற்கு வெற்றி பலவித துன்பங்களுக்குப் பின்பே இருக்கிறது. இதுவே மஹாபாரதம்.

இதில் யுத்த சமயத்தில் கண்ணன் அர்ச்சுனனுக்கு கீதையை உபதேசிக்கிறார்.

18 அத்தியாயங்கள் மூலம் 4 தேவங்களின் சாரத்தை உள் அடக்கி தசாவதார 10 தத்வங்களையும் கீதாசாரமாக வடித்துத் தருகிறார். அர்ஜுனனுக்கு மட்டும் அல்லாமல் உலகில் - உள்ள ஜீவன்களுக்கு உலகம் உள்ளவரை உணர்ந்து நடக்கும் படியான பாடமாக உள்ளதை ஜீவன் உணர்ந்து நடக்க வேண்டும் என்பதே கண்ணனின் தணியாத ஆசை எப்பப்பொழுது உலகில் அக்ரமம் ஏற்படுகிறதோ அப்பப்பொழுது பல ரூபத்தில் நான் வருவேன் என்று கூறுகிறார்.

யுத்தம் முடிவில் பீஷ்மர் கண்ணன் மேல் அவர் செய்த பலவித தியாகங்களைப் போற்றி விஷ்ணு சகஸ்ரநாமமாக தொகுத்துத் தந்துள்ள நாமாக்களை ஜீவன் சொன்னால் சகலவித பிணிகளிலிருந்தும் விடுபட்டு சேமத்தை அடைவதுடன் ராமா நாம முக்கியத்வத்தையும் ஈஸ்வரோ உவாச என சிவனே கூறுவதாக வைத்து ராமநாமத்தின் மூலம் இருவரும் இணைந்து செயல்படுவதை கூறவைத்துள்ளார்கள். சகஸ்ர நாமத்தின் ராம ராம ராமேதி என்ற வாக்கியத்தை மூன்று தரம் படித்தால் சகஸ்ரநாமம் முழுமையும் படித்த பலன் கிடைக்கும் என்று கூறுகிறார்கள்.

இவ்விதம் கிருஷ்ணவதாரத்தில் மூலம் ராதா என்ற பெயரில் ராம பக்தி, கிருஷ்ண பக்தி இரண்டையும் இணைந்து பக்தி செய்யும் மார்க்கத்தையும் ஸ்ரீராம, ராம ராமேதி என்று சகஸ்ர நாமத்தில் இருவர் பெயரையும் இணைத்து சிவ பக்தி, வைஷ்ணவ பக்தி இரண்டையும் செயல்பட வழி தந்துள்ளார்.

கிருஷ்ணவதாரத்தின் மூலம் ஜீவனுக்கு சகலவித ஷேமங்களையும் கூறிய பின் கண்ணன் மரத்தின் மேல் வனத்தில் அமர்ந்துள்ள சமயம் ஒரு வேடன் கண்ணன் கட்டவிரல் ஆடுவதை ஒரு பட்ச்சி என நினைத்து

அம்பு எய்ய கண்ணன் முடிவு ஏற்படுகிறது. இவ்விதம் அவர் தனக்கு முடிவைத் தேடி கொண்டது ராமாவதார காலத்தில் மரத்தின் மறைவில் இருந்து கொண்டு வாலியை வதம் செய்த பாவம் நீங்க இவ்வித முடிவை ஏற்கிறார். பகவானாக இருந்தாலும் செய்த பாவத்திற்கு பலன் உண்டு என்பதை அதைப் போக்கிக் கொண்டாலே வைகுண்டம் போக முடியும் என்பதை அவதாரத்தின் போதும், முடிவின் போதும், நடத்திக் காட்டி ஜீவனுக்கு வாழவழிகாட்டுகிறார்.

(துவாபரயுகம் முடிந்து கலியும் ஆரம்பமாகும் சமயத்தை எழுத ஆரம்பிக்கும் இத் தினம் ஸ்ரீராமகதையை எழுதி முடிக்கும் தினம் ஸ்ரீரெங்கநாதர் ஜேஷ்டாபிஷேகமும், மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமியின் வெண்ணைத்தாழி உத்ஸவமும் சேர்ந்து அமைந்த தினமாக ஆனி 13ந் தேதியாக இருந்தது போலவே கலியுக சம்பவங்களை எழுத ஆரம்பிக்கும் தினம் ஜுலை மாதம் 7ந் தேதி நவமி திதியும் புதன் கிழமையும் ரேவதி நட்சத்திரமும் கூடிய தினமாக அமைந்து பகவானின் பரிபூரண ஆசி கிடைத்த மகிழ்ச்சியுடன் மேல் கொண்டு எழுத ஆரம்பிக்கிறேன்.)

## கலியுகம்

ஸ்ரீரெங்கச் சேஷத்திரம் சூரிய சந்திரவமஸத்தவரால் ஆராதிக்கப்பட்டு பின் இஷ்வாகு வம்ஸத்தவரிடம் பிரம்மனால் கொடுத்து பூஜிக்கப்பட்டு வந்து ஸ்ரீராமரால் விபீஷணாழ்வாரிடம் கொடுக்கப்பட்டு வினாயகராலும், ஸ்ரீலஷ்மி நரஸிம்மராலும் முன்பே ஏற்பாடுகள் செய்து மூன்று புறமும் காவேரியால் சூழப்பட்ட இடத்தில் வினாயகராலேயே பிரணவாகார விமானத்துடன் பிரதிஷ்டை செய்யபட்ட பூலோக வைகுண்டத்தில் துவாபரயுகம் முதல் நித்யவாஸம் செய்து கொண்டுள்ள அரங்கன் ஜீவனின் நலன்களை பேணிக்காத்துக் கொண்டு கலியுகத்தை எதிர்பார்த்து வருகிறார். ஸ்ரீராமர் காலத்தில் லவ, குசர் வடக்கு முதல் தெற்கு வரை ஸ்ரீராமர் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட ஸ்தலங்களுக்கு தாங்களே நேரில் வந்து பூஜித்துள்ளார்கள்.

துவாபரயுகத்தில் கண்ணன் மதுரா பிருந்தாவன், துவாரகா ஆகிய மூன்று ஸ்தலங்களுக்கே முக்கியத்துவம் கொடுத்து வடக்கேயே தங்கிவிடுகிறார்.

ஆனால் துவாபரயுகத்தின் முடிவில் பிரளயம் ஏற்பட்டபின் தென்னாட்டில் கேரளாவில் பத்மநாபஸ்வாமியாக பிரம்மா, விஷ்ணு, சிவன் என நான் மூன்றாகப் பிரிந்து இருந்து உலகப் பணியைச் செய்தாலும் உள்ளே ஒருவனே என சரீர தத்வத்தில் உள்ள ரூபத்தைப் புலப்படுத்தி அந்த

ஸ்தலத்திற்கு அருகிலேயே குருவாயூரில் பால ரூபத்தில் வந்து அமர்ந்து உலகப் பணிகளை ஏற்கிறார்.

மன்னார்குடியில் ராஜகோபாலஸ்வாமியாக அமர்கிறார். ருக்குமணியின் இருபுறமும் இரு யானையை சிவ - விஷ்ணு ரூபமாக அமரச்செய்து மணியான கண்டாமணியின் நாத ரூபமாக உள்ள ருக்குமணியை சகல கோயில் நிலைவாசலிலும் அமரச்செய்து உலகச் சேமார்த்தத்தை அளிக்கும் சிவ - வைஷ்ணவ ஒருமைப்பாட்டை ஜீவனுக்கு தெளிவாகச் சொல்லுகிறார்.

திருவாரூரில் ஜீவ சிருஷ்டியின் மண் பிருத்விஸ்தலமாக அமைந்துள்ள இடத்திற்கு அருகிலேயே தான் அமர்ந்து மன்னார்குடி குளத்தின் பெயரை அர்த்தநாரிஸ்வர என வைத்து அனுதினமும் ஜீவனின் பணிக்கான திருக்குளமாக வைத்து நீரையும், பிருத்வியையும் மதிப்பளிக்கிறார் கண்ணன். மன்னார்குடியில் வெண்ணைக்கு மதிப்பளித்து வெண்ணைத்தாழி உத்ஸவம் மிகச்சிறப்பாக கொண்டாட வைத்து ஜீவனுக்கு பக்தியின் மார்க்கத்தை உணர்த்துகிறார்.

இதன் பின் ஏழுமலையாக உள்ள திருமலையில் இராமாயண சம்பந்தப்பட்ட வேதவல்லி பத்மமாக சீதையின் ஹிருதயத்தில் அமர்ந்திருந்ததால் அவளுக்கு மதிப்பளிக்கப் போகும் ஸ்ரீனிவாஸன் வந்து அமர வராஹப் பெருமாள் பூமியை சதா காக்க ஸ்ரீமுஷ்ணத்தில் அமர்ந்துள்ள பெருமான் முன் வந்து திருமலையில் சகல ஏற்பாடுகளும் செய்து வைக்கிறார்.

ஹாளஹஸ்தியில் வாயுவாக ஜீவன் முக்கிய பணியை கவனிக்கும் சேத்திரத்திற்கு அருகிலேயே ஏழுமலையில் ஸ்ரீனிவாஸர் அவதரிக்கிறார். அவதரித்து வாலிபவயதுவரை புத்து மண்ணால் மூடப்பட்டு தபோநிலையிலேயே இருக்கிறார். பிரம்மாவும் சிவனும் பசுவும், கன்றுமாக வந்து இவர் மீது மூடப்பட்ட புத்துமண்ணைக் பாலைச் சுரந்து கரைக்க ஸ்ரீனிவாஸர் வெளிப்படுகிறார்.

ஆதலால் இதன் மூலம் கலியில் தாங்களே நேரில் மூவரும் இணைந்து சிருஷ்டிப் பணியின் தத்வத்தை புத்துமண், பால், நீர் கலந்த சரீரத் தத்வத்தை புலப்படுத்துகிறார்கள்.

ஆகாச ராஜனின் புத்திரியாகப் பிறந்து வளரும் பத்மாவதியை முறைப்படி மணந்து பத்மமாகிய சரீரதத்வ ஹிருதயகமலத்திற்கு திருமலையில் மதிப்பளிக்கப்படுகிறாள். சீதையின் ஹிருதயத்தில் இருந்த புண்யத்தின் மூலம் பலன் அளிக்கப்படுகிறாள்.

இவளைத் திருமணம் செய்ய குபேரனிடம் கடன் வாங்கி சீதையாக அவதரித்த லஷ்மி தன்னைவிட்டுப் பிரிந்தே உள்ளாள் என்ற விஷயத்தை இதன் மூலம் வெளிப்படுத்தி ஏழுமலையில் வராஹப்பெருமாள் அமர்ந்துள்ள திருக்குளத்தின் அருகில் ஸ்ரீனிவாஸராக அமர்ந்து ஜீவனின் பிறப்பு, இறப்பு, பணியை தன்தாக ஏற்கிறார்.

பத்மாவதித்தாயார் திருச்சானூரில் அமர்ந்து பூமித்தாயான பூமிப்பிராட்டியின் பணிகளை சரிவர நடத்தித்தர அமர்கிறாள்.

ஸ்ரீனிவாஸர் அமர்ந்த மலை ஏழு அரங்கன் அமர்ந்த பூலோக வைகுண்டம் 7 பிரகாரம் அரங்கன் நீர் ஸ்தலத்திலும் ஸ்ரீனிவாஸர் மலையிலிருந்து ஜீவ சிருஷ்டி நடப்பதை புலனாக்கி ஸப்தமலையிலும், ஸப்தப்ராகாரம் மூலம் ஸப்தநதிகளின் மூலம் நடப்பதை நீர் ஸ்தலத்தின் அருகில் அமர்ந்து அரங்கனும் தெளிவாக்குகிறார்கள். பத்மாவதி வாயு ஸ்தலத்தின் அருகில் அமர்ந்து பிரணவத்திற்கு மதிப்பளிக்கிறாள், வாயு இல்லாவிட்டால் ஜீவனின் ஸ்வாஸப்பணி எப்படி நடக்கும் எனக்காட்ட

வராஹாவதாரமாக வந்து பூமியைக் காத்தபின் ஸ்ரீமுஷ்ணத்தில் பகவான் தன் வாஸஸ்தலத்தை ஆகாஸ ஸ்த்லமாக சிதம்பதரத்தில் ஒருமைப்பாட்டை கோவிந்தராஸராகவும், நடராஜராகவும் இணைந்து அமர்ந்து உலகச் சேஷமத்தை மனதில் கொண்டு ஜீவனைக்கார்க்கிறார்.

திருவண்ணாமலையை அக்னிஸ்தலமாக அமைத்து அதன் அருகில் உள்ள திருக்கோயிலூரில் வாமனாவதாரம் எடுத்து வந்த ஓங்கி உலகளந்த பெருமாளாகவே இங்கு அமர்கிறார் வாமனன், இவ்விதம் அமர்ந்த ஸ்தலத்தின் அருகிலேயே கடலூருக்கு அருகில் திருவஹீந்தி புரஷேத்திரத்தில் முதலில் வரும் ஜீவனின் நாகரூபத்தை மதித்து கிணற்றிலிருந்து வரும் ஜலத்தை நாகரூபமாகவே காட்டி ஜீவனின் பிணியைப் போக்கும் அருமருந்தாக அதன் நீரை வைத்து ஜீவனைக் கார்க்கிறார்.

கருடரூபமே ஜீவனின் கடைசியாக வரும் ரூபமாதலால் இங்கு கருட நதியாக இருந்து நாக ரூபத்திலும், கருடரூபத்திலும் ஜீவனைக் கார்க்க நீரை ஆராதிக்கிறார்கள்.

இங்கு தாயார் ஹேமாம்புஜவல்லியகாவும் பெருமாள் தேவநாதப் பெருமானுமாக அமர்ந்துள்ள ஷேத்திரத்தில் சிறிய மலை மீது ஸ்வயம் பூவாக ஹயகரீவர் வித்தைக்கு அதிபதியாகத்தோன்றி தன் அருகிலேயே லஷ்மிநரஸிம்மரையும் குழந்தை பாக்கியம் அருளும் கண்ணனையும் அமரச் செய்து ஜீவனின் புத்திக்கு அதிபதியாக உள்ளார்.

ஜீவனின் முக்கியப்பணிகளை பஞ்சபூத ஸ்தலங்களில் அமைத்துக் கொண்டபின் ஸேதுபந்தனம் செய்ய தர்ப்பசயத்தில் நாகர் உலகில் தோன்றுவதற்கு முன் முதலில் தர்ப்பைப் புல்லாகத் தோன்றிய தர்ப்பைக்கு மதிப்பளித்த இடத்தில் பள்ளிகொண்ட நாராயணராக இருந்து ஜீவனின் ஸிருஷ்டிப் பணிக்கு உதவுவதோடு இராமேஸ்வரத்திலிருந்து மண்ணைக் கொண்டு சென்று காசியில் சேர்த்து விஸ்வநாதரை ஸதா அபிஷேகம் செய்யும் நீரான கங்கைக்கும் மதிப்பளிக்கிறார் ராமவதாரத்தில் துவாபரயுகத்தில் கிருஷ்ணவதாரத்தின் போது நரகாசுரவதம் ஆனபின் ராமாவதாரத்தில் சீதையின் சரீர புத்துமண்ணை

தங்கச்சிலையான அன்னபூரணியாக காசியில் அமரச்செய்து பூமியில் பூ, காய், கனி, தானியங்கள், மருந்து மூலிகைகளை விளையச் செய்யும் கங்கைக்கு மதிப்பளிக்க தீபாவளி தினம் கங்கைக்கும், அன்னபூரணிக்கும் மதிப்பளிக்கிறார்கள்.

ஜீவ சிருஷ்டிக்கு முதலிடம் அளிக்கும் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருநல்லாரில் சனிபகவானுக்கு முதலிடம் அளித்து இங்கு தர்ப்பையை ஸ்தல விருச்சமாக வைத்ததுடன் ஜீவனின் பிறப்பு, முதல் இறப்புவரை நல்ல, கெட்ட இரு பணிகளுக்கும் தர்ப்பைக்கு முதலிடம் அளிக்கிறார்கள்.

பலவித க்ஷேத்திரத்தில் ஜீவனின் பிறப்பு முதல் இறப்புவரை உள்ள சிறந்த பணிகளை ஏற்படுத்திக் கொண்ட ஸ்ரீரெங்கநாதரும் ஸ்ரீரெங்கநாயகித்தாயாரும் சரீரதத்வத்தில் அடங்கி உள்ள விஷயங்களை ஜீவனுக்கு புலப்படுத்துகிறார்கள்.

ஆதிசேஷனின் ரூபம் முதலில் வந்து அதன் பின்பே சரீரம் ஏற்பட்டதால் அரங்கன் ஐந்து தலை நாகத்தின் மேல் பள்ளிகொண்ட கோலத்தில் உள்ளதை முதலில் உணர்த்துகிறார்.

விமானம் ஓம் என்ற பிரணவாகாரம் ரூபத்தில் அமைத்து சரீரம் ஸ்வாஸிக்கும் காற்றின் மூலம் சிவ, விஷ்ணு, பிரம்ம ரூபத்தில் மூவரும் இணைந்தே ஒவ்வொரு வினாடியும் செயல்படுகிறது என ஜீவனுக்கு உணர்த்துகிறார்.

அரங்கன், சதா சயனக் கோலத்தில் இருந்து பின் நின்று நடந்து வரும் ரூபத்தை உத்ஸவகாலத்தில் சிம்மகதி என நடைக்கு முக்கியத்துவம் அளித்து பின் ஆஸ்தானத்தில் உள் நுழையும் போது சர்ப்பகதியில் வந்து அரங்கனுக்கு மரியாதை அளிப்பதுடன் சரீரம் நாகரூபமே என ஜீவனுக்கு புலனாக்குகிறார்.

இதன் பின் பிறப்பின் கணக்கையும் இறப்பின் கணக்கயும் எடுக்க ஆழ்வாராதிகளை படைக்கிறார் கலியின் ஆரம்பத்தில்.

முதல் ஆழ்வார்களாக பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என மூவரை தோற்றுவித்தார்.

பேயாழ்வார் பகவானின் நாத்திகம் என்னும் வாள். பொய்கையாழ்வார் பகவானின் பாஞ்சசன்யம். பூதத்தாழ்வார் கதாயுத அம்ஸம்.

திருமங்கை ஆழ்வார் பகவானின் ஸாரங்கம்.

கருடாழ்வார் பெரியாழ்வாராக அவதாரம், குலசேகர ஆழ்வார் பகவானின் கௌஸ்துபம், திருப்பாணாழ்வார் பகவானின் ஸ்ரீவத்ஸம், திருமழிசை ஆழ்வார் திருச்சக்கர அம்ஸம், மதுரகவி ஆழ்வார் பகவானின் குமுதாம்ஸம், தொண்டரடிப்பொடி ஆழ்வார் பகவானின் வைஜயந்திமாலை.

இவ்விதம் ஆழ்வார்களை தன்னிடம் உள்ள சகலத்திற்கும் அவதார அந்தஸ்த்து அளித்தபின்.

ஆதிசேஷனை கலியில் இராமானுஜராக தன்னுடைய பாதுகையை ராமாவதாரத்தில் தன்னுடன் கூட அவதரிக்கும் பாக்கியம் அளிக்காவிட்டாலும் நந்திக்கிராமத்தில் தன் சார்பாக அயோத்தியை ஆளும் பாக்கியம் அளித்த பாதுகையை ஜீவனின் இறப்பு, பிறப்புக் கணக்கை எடுத்து தீர்ப்பளிக்கும் பாக்கியத்தை அளிக்கிறார் நம்மாழ்வாராக.

இவ்விதம் சகல ஜீவச் சேம அவதாரம் பூர்த்தி செய்து கொண்டபின்.

திருமலை ஸ்ரீனிவாஸனாக கலியில் கண்ணன் வந்து அமர்கிறார். இராமாயண மங்கள காண்டத்தை பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் இராமரின் கையால் ஸ்தாபித்த ஸ்ரீரெங்கச் சேத்திர தாயார், பெருமாள் அனுக்கிரஹத்துடன் கோயில் கண்டாமணியில் வேதாந்த தேசிகராக தானே அவதாரம் செய்ய காஞ்சீபுரத்தில் அருகில் உள்ள தூப்புலில் தானே அவதரிக்கிறார்.

ருக்குமணியை துவாபரயுகத்தில் கண்டமணியன் நாதருபமாக அவதரிக்கச செய்து மணம் முடித்துக் கொண்ட கண்ணன் இங்கு கண்டாமணியாக தானே அவதாரம் செய்கிறார்.

துவாபரயுகத்தின் முடிவில் பிரளயகாலத்தில் ஒன்றுபட்டிருந்த கண்டம் பல பிரிவுகளாகப் பிரிந்து பல தேசங்கள் நாடுகள் தோன்றிவிட்டன. இவை எல்லா இடங்களும் ஒன்று பட்டிருந்தசமயம் மக்களால் சமஸ்கிருதமொழியே பேசப்பட்டு வந்தது.

வால்மீகி முனிவர் அவதாரம் தென்னாட்டில் அன்பில் என்ற சேத்திரமே ஆனால் இவர் இயற்றிய வால்மீகிராமாயணம் சமஸ்கிருத மொழியே. இதன் மூலம் நமக்கு உலகம் முழுதும் உள்ள மக்கள் சமஸ்கிருத மொழியே தாய் மொழியாக்க் கொண்டிருந்தார்கள் என்பதை பகவான் தெளிவுபடுத்தியபின்.

தென்னாட்டில் தமிழ் மொழிக்கு முக்கியம் அளிக்கப் போவதால் ஆழ்வார்கள் அவதரித்ததும் சேர, சோழ, பாண்டிய மன்னர்களை தென்னாட்டில் தோற்றுவித்தார்.

இவர்கள் மூலம் ஆலயத்திருப்பணிகளும் ஆழ்வார்கள் மூலம் செயல்பட்டு தமிழ் மொழி சிறப்புற நடத்தி மேன்மைப்படுத்த பாண்டிய மன்னரின் மகளாக மீனாட்ச்சி அவதாரம் செய்து தமிழுக்கு மதுரையில் பிறப்பு ஸ்தலமாக வைத்து ஸ்ரீவித்யாவாக அமர்கிறாள்.

மீனாட்ச்சி சுந்தரேஸ்வரரை மணந்து வைகையை பூமிக்குக் கொண்டு வந்த பின் மதுரைக்கு அருகில் காட்டு அழகராக சுந்தராஜப் பெருமாளாக விஷ்ணு அமர்கிறார்.

சிவன் சுந்தரேஸ்வரர் என்றும் விஷ்ணு சுந்தர ராஜன் என்று பெயர் பொருத்தத்துடன் அமர்வது சிவ + வைஷ்ணவ ஒற்றுமையை ஜீவனுக்கு புலப்படுத்தவே.

இவ்விதம் அமைத்துக் கொண்ட பின் 6 முருகனான 6 படைவீட்டை அமைத்து ஜீவனின் பிறப்பு, இறப்பு பணிகளை தனதாக ஏற்கிறார்கள்.

1. பழனி

6 படைவீடுகளில் முதல் வீடான பழனி சிவனின் நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றிய அக்னி ஜீவாலை கங்கையில் விடப்பட்டு அந்த ஜீவாலை 6 குழந்தைகளாக வெளிவந்து கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டு பின் பார்வதியால் ஒன்று இணைக்கப்பட்டு ஒரே குழந்தையாக 6 முகம் கொண்ட முருகனாக வந்தார்.

இதுவே பிறப்பின் தத்வமாக அமைந்து உள்ளதையும் பிறப்பின் தத்வம் அருபமாகவும் உள்ளதை ஜீவன் உணரலாம். இதனலேயே ஜீவன் காமனின் கருணையால் உண்டாவதால் அவரை அருபமாக வைத்து சிருஷ்டியை துவக்கி உலகில் பணிகளைச் செய்கிறார்கள்.

நாரதரால் ஒரு மாங்கனி கொண்டு வரப்பட்டு அம்மை, அப்பனிடம் கொடுக்கப்படுகிறது, இதை யாருக்குக் கொடுப்பது, வினாயகருக்கா? முருகனுக்கா? என அபிப்ராயம் எழ ஒரு போட்டி அவர்கள் இருவருக்கும் வைக்கப்படுகிறது. யார் இந்தப் போட்டியில் ஜெயிக்கிறார்களோ அவர்களுக்கே பழம் என்ற தீர்மானம் செய்கிறார்கள்.

முருகன் தன் மயில் வாகனத்தில் ஏறி உலகைச் சுற்றிவரச் சென்ற உடனேயே வினயாகர் அம்மை - அப்பனை வலம் வந்து மாம்பழத்தைப் பெற்றுக் கொண்டு விடுகிறார்.

உலகை மிகப் பிரயாசைப்பட்டு வலம் வந்து வினாயகரிடம் கனி இருப்பதைக் கண்டு முருகன் கோபம் கொண்டு பழனி வருவதாக புராணம்.

இதில் அடங்கி உள்ள தத்வம் பால முருகன் மயிலில் உலகைச் சுற்றி வலம் வரும் போதே பிரம்மனின் படைப்பை முத்தேவர் - முத்தேவியர் இணைந்து உலகப்பணியை ஏற்று ஆத்மாவை ரட்சிப்பதை புலப்படுத்தும் நாடகமே இது. 6 வராக இணைந்து பிறப்பின் ஆரம்பத்தையும் முடிவையும் ஏற்று முருகனாக இருந்து பவசாகரத்தை கடக்கும் பணியை ஏற்க முருகன் துணைக்கொண்டு நடத்தி ஆரம்பம் முதல் முடிவுவரை ஆத்மாவை ரட்சிக்கும் வினாயகர் கையிலேயே ஆத்மாவாக மாங்கனி வினாயகர் கையில் கொடுக்கப்படுகிறது. இதையே தென்னையில் மட்டையுடன் கூடிய தேங்காயின் மூலம் புலப்படுத்தி பூர்ண கும்பம் மூலம் தேங்காய்க்கும், மாவிலைக்கும் மதிப்பளித்து சதுர் தேங்காயாக வினாயகருக்கு உடைத்தும் வினாயகர் மூன்று சந்தி கூடும் இடத்திலும் ஆற்றங்கரை அரச மரத்தடியிலும் அமர்ந்து உலகில் ஆத்மாவின் பணியை ஏற்கிறார்.

## 2. சுவாமிமலை

பிரம்மனை ஓம் என்ற பிரணவருபத்திற்கு முருகன் அர்த்த விளக்கம் கேட்க பிரம்மன் அதன் பொருளை கூற முடியாமல் தவிக்க சரவணன் பிரம்மனை இதன் காரணமாக சிறையில் அடைத்து விடுகிறார்.

இவ்விதம் புரா்ண லீலையாக இருந்தாலும் படைப்புக் கடவுளின் உட்பொருளை உலகிற்கு கொண்டு வரவே பிரம்மா, விஷ்ணு, சிவனால் நடத்தப்பட்ட நாடகம்.

சிவனும், பார்வதியும் உலக சிருஷ்டி பிரம்மா சிறை வாஸத்தால் தடைப்பட்டதை போக்க முருகனிடம் பிரம்மனை மன்னித்து வெளியே விட்டு விடு எனக் கூற சிவனையும் முருகன் பிரணவ ருபத்திற்கு அர்த்த விளக்கம் கேட்க சிவனாலும் சொல்ல முடியாமல் போகவே, தானே அதன் பொருளைக் கூறுவதாகச் சொல்லுகிறார்.

இதற்கு சிவன் மண்டி இட்டு தாழ அமர்ந்து சிஷ்யனாகவும் தான் குருவாகவும் இருந்தே இப்பொருளை கூறமுடியும் என்றதால் சிவனும் அப்படியே அமர தந்தைக்கு ஓம் என்ற பிரணவாகார ருபத்தின் பொருளை உபதேசம் செய்ய சுவாமிமலையில் தகப்பன் சாமியாக முருகன் அமர்கிறார்.

இதன் உட்பொருள் பிரம்மானலும் கூறமுடியாமல், சிவனாலும் கூறமுடியாமல் போன பொருளை விஷ்ணுவே எடுத்துக் கூறி உலகிற்கு ஓம் என்ற பிரணவாகாரத்தில் தாங்கள் மூவரும் இணைந்தே உள்ளோம் எனக் கூறுகிறார்.

ஜீவனின் உட்புகும் காற்று மாசு இல்லமால் விஷ்ணு ருபமாகவும், உள்ளே சென்று சரீரத்தை சுத்திகரிக்கும் போது அதன் விஷத்தன்மை வெளிக் கொண்டுவரும் போது சிவனாகவும், மாசுபட்டு வெளியே வந்த விஷங்காற்றை பிரம்மன் மரமாக இருந்து சுத்திகரித்துத் தரும் பணியை ஏற்று பிரணவத்தில் மூவரும் இணைந்து உள்ள ருபத்தை உலகிற்கு வெளிப்படுத்துகிறார்கள்.

சுவாமிமலையில் முருகன் ஸ்வாமிநாதனாக அமர்கிறார்.

## 3. திருச்செந்தூர்

தீபாவளி முடிந்தபின் ஐப்பசி மாதத்தில் தீபவாளிக்கு 6ம் நாள் முருகப் பெருமான் சூரனை வதம் செய்கிறார். இந்த வதத்திலும் மூவர் அடங்கிய ருபம் வெளிப்படுத்தப்படுகிறது. சூரபத்மன், சிம்மமுகன் என்ற பெயரிலேயே இது அடங்கி உள்ளது. சூரன் - சிவமாகவும், பத்மன் பிரம்மனாகவும், சிம்மமுகன் விஷ்ணுவாகவும் உள்ளார்கள். சூரன் அழிக்கப்பட்ட பின் பிரம்மன் மயிலாகவும், சிவன் சேவலாகவும்

வருகிறார்கள். மயில் முருகனிடம் முன்பே வாகனமாக உள்ளது. சூரசம்காரத்திற்கு பின் மயில் முருகனுக்கு மயிலாகவந்து வாகனமாக இருப்பது பிரம்மன் மயில் ரூபத்தில் உள்ளதை ஜீவனுக்கு புலப்படுத்தவே. இதனாலேயே முருகனும், கண்ணனும் மயில் இறகை தங்கள் கிரீடத்தில் அணிந்து கொண்டு பிரம்மனை போற்றுகிறார்கள்.

சென்றால் குடையாம் இருந்தால் சிம்மாஸனமாம், நின்றால் குடையாம் என்னும் பொய்கை ஆழ்வார் பாசுரம் போல் விஷ்ணுவும் முருகரூபத்தில் இருப்பதாலேயே நாகர் மயிலின் திருவடியில் உள்ளார்.

நாகராக சிவனுக்கு ஆபரணம் வினாயகருக்கு பூணூல். இவ்விதம் விஷ்ணு ரூபம் யாவ ரூபத்திலும் இருப்பதாலேயே நாகரூபத்திற்கு சகலவிதத்திலும் முதலிடம் அளிக்கப்படுகிறது.

மூவரும் இணைந்துள்ள ரூபமாக உள்ளதுடன் முத்தேவியரும் இணைந்து 6 வராக உலக சிருஷ்டியை செயல்படுவதால் மற்ற அரக்கர்கள் நீதியை மட்டும் போதிக்கும்படி வைத்து சூரபத்மன், சிம்மமுகன், கஜமுகனை அழித்தாலும் நிலையாக மயில், சேவல், நாகம் என நிலையாக பூஜித்து வணங்கும் ரூபமாக வைத்துள்ளார்கள். முருகனின் கைவேல் முத்தேவியரும் இணைந்த ரூபமாக வைத்து 6 வரும் இணைந்துள்ள சரீர தத்வத்தையும் இதன் மூலம் அளிக்கிறார்கள்.

தீபாவளி அம்மாவாஸை முதல் 6 நாள் சிரத்தையுடன் விரதம் இருந்து முருகனை சூரசம்ஹாரத்தன்று வழிபட்டு விரதம் முடித்தால் சகல நன்மையும் ஜீவனுக்கு கிடைக்கும் என்று சரீர தத்வத்தை மக்களுக்கு புலப்படுத்தவே இதை நடத்திக் காட்டியுள்ளார்கள்.

விசாக நட்சத்திரம் நரஸிம்மருக்கும், முருகனுக்கும் உகந்ததாக வைத்து சிவ + வைஷ்ணவ ஒருமைப் பாட்டை உணர்த்துகிறார்கள்.

## 4. திருப்பரம்குன்றம்

திருச்செந்தூரில் சூரசம்காரம் முடிந்ததும் திருபரங்குன்றத்தில் முருகனின் திருக்கல்யாணம் தேவயானையுடன் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

இக்கல்யாணத்திற்கு அம்மை, அப்பன் பிரம்மா, ஸரஸ்வதி, விஷ்ணு, லஷ்மி வந்திருந்து சிறப்புடன் நடத்திக் கொடுக்கிறார்கள்.

இதில் தேவயானை என்று முருகனின் பத்னியின் பெயர் அமைந்திருப்பதின் காரணம் பார்வதியால் பிடிக்கப்பட்டு உருவாகிய பிள்ளையின் தலை சீவப்பட்டது சமுத்திரத்தில் விழுவதால் திருபாற்கடல் கடையும் போது வெள்ளையானையாக உருக்கொண்டு வெளிவருகிறது. இந்திரனுக்கு பரிசாக அளிக்கப்பட்டு தெய்வலோகத்தில் இந்திரனுக்கு

ஐராவதம் என்னும் பெயரில் வாகனமாக உள்ளதை புராணம் மூலம் அறிவோம்.

இந்திரனின் பெண்ணே தேவயானை இவ்விதம் சிவரூபமாக இருந்த சிரஸிற்கு வெள்ளையானை உருவந்ததால் தேவேந்திரனுக்கு பெண்ணாக வந்த தேவயானை என்ற பெயர் கொண்டு தன்னில் சிவதத்வம் நிறைந்து முருகனை மணந்த முருகனில் சிவதத்வம் உள்ளதுடன் வெள்ளையானை சிவரூபம் என்பதை புலப்படுத்துகிறாள்.

### 5. திருத்தணி

வள்ளிக் குறத்தியை மணப்பது பிரம்மனே காடுகளில் மரமாக நிறைந்து நாடு செழிக்க வானிலிருந்து மழையை பூமிக்கு கொண்டு வந்து நீர்வீழ்ச்சியாக பல இடங்களில் உண்டாகி நதிகளாக உலகம் பூராவும் நிறைந்து இருக்கச் செய்கிறார். மழை பொழிந்து நீர் நிலைகள் நிறைவதால் ஜீவன் உண்ண உணவு தான்யங்களையும், வியாதிகள் குணப்படுத்த மருந்து மூலிகைகளையும் நிரம்பி இருக்கச் செய்கிறார். இவ்விதம் ஜீவன் பல விதங்களிலும் வாழச் செய்ய படைப்புக் கடவுளான பிரம்மன் ஜீவன்களை படைத்த பின்பும் அவர்கள் வாழ பலவித வஸதிகளையும் செய்து தருவதால் பிரம்மனை மதிக்க வேடுவச் சிறுமியாக வேடுவர் மத்தியில் வள்ளியை வளரச்செய்து பின் மூன்றுவித சோதனைக்கு வள்ளியை ஆட்படுத்துகிறார்கள். இதன் உட்பொருள் வேலனாக புலித்தோலை அணிந்து வந்து மான் வேட்டையாடி சிவனுக்கு மதிப்பளிக்கிறார்கள். பின் வேலமரமாக வந்து பிரம்மனுக்கு மதிப்பளிக்கிறார்கள். கடைசியாக முதிய கிழவராக வந்து விஷ்ணு ரூபத்திற்கு மதிப்புத் தருகிறார்கள்.

இவ்விதம் மூவரும் இணைந்த ரூபத்திற்கு மதிப்பளித்து பின் வினாயகராக வந்து மூவரில் விஷ்ணுவே முதன்மையானவர் என தெளிவுபடக் கூறி வள்ளிக்கும் முருகனுக்கும் சிறப்புற திருமணம் முடிக்கப்படுகிறது. திருத்தணியில் இவர்கள் திருமணம் மூலம் காட்டில் வாழும் ஆதிவாஸிகளுக்கும், பழங்குடி மக்களுக்கும் மலைவாஸியான குறவர்களுக்கும் மதிப்புத்தரப்படுகிறது.

### 6. பழம்முதிற் சோலை

ஐந்து படைவீடுகளிலும் உள் அடங்கி 6 வரும் இணைந்து செயல்படும் ரூபங்களை ஜீவனுக்கு புலப்படுத்தியபின் தமிழுக்கு முக்கியப் பணி எவ்விதம் தொடங்கப்படுகிறது. என்பதை கூறுகிறார்கள்.

மதுரையில் மீனாட்சி, சுந்தரேஸ்வரராக அமர்ந்து பொற்றாமரைக் குளத்தில் சங்கப் பலகை மூலம் திருவாசகம், திருமூலம், ஸ்கந்த புராணம், ஸ்கந்தர் அனுபூதிகளை சிவமதத்தவர்களுக்காகவும், திருப்பாவை, நாலாயிரப் பிரபந்தம் முதலிய நூல்கள் வைஷ்ணவர்களுக்காகவும் இயற்றி பொக்கிஷமாக தமிழில் வைக்கிறார்கள்.

அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர் முதலியவர்களுடன் 63 நாயன்மார்கள் இயற்றிய சங்கநூல்களை அரங்கேற்றம் செய்கிறார்கள். அது மட்டும் அல்லாமல் கிருஷ்ணாவதாரத்தில் கீதோபதேசம் செய்ததில் அடங்கியுள்ள பொருள்களை திருவள்ளுவராக தானே கண்ணன் அவதாரம் செய்து திருக்குறளாக தமிழில் ஜீவனுக்கு வேண்டிய சகல ஒழுக்கங்களையும் போதிக்கும் நூலை வடித்துத் தருகிறார். கம்பர் தமிழில் ஸமஸ்கிருத நூலான இராமாயணத்தை இயற்றித்தருகிறார் தமிழ் மக்கள் எளிதாக புரிந்து கொள்ளும் வகையில்.

அதேபோல் ஆழ்வார்கள் நாலாயிரப் பிரபந்தத்தையும் இராமாயண, மகாபாரத்தில் ஸ்ரீராமர், கண்ணன் பகவானாக வந்து ஜீவனுக்காக நடத்திய லீலைகளை கவிதையாக செய்து ஜீவன் கானமாகவும், உபன்யாஸமாகவும் செய்யும் வழியைக் காட்டி அதன் மூலம் மோட்சம் அடையும் மார்க்கத்தைக் காட்டுகிறார்கள்.

பூமிப்பிராட்டியான ஆண்டாள் திருப்பாவையை இயற்றி அதன் மூலம் பகவத் அனுபவமும், இறைவனை அடையும் மார்க்கத்தையும் தமிழில் நான்கு வேதங்களின் சாரத்தையும் உள் அடக்கி ஜீவனுக்கு தந்துள்ளாள்.

ஸரஸ்வதியே ஔவையாகத் தோன்றி மூதுரை, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், முதலிய நூல்களை மிக எளிய முறையில் ஜீவன் புரிந்து கொண்டு கல்வி அறிவு இல்லாத பாமரரும் நல்வழி நடக்கும் வாழ்க்கையை வாழ வழிசெய்துள்ளாள்.

அப்பேர்பட்ட ஔவை மூலமே முருகன் தன் கடைசிப்படை வீட்டை அமைத்துக் கொள்ள விரும்பி பிரம்ம சிருஷ்டியின் நாயகியான ஸரஸ்வதியான ஔவையை சோதிக்க மாடு மேய்க்கும் இடைய ருபத்தில் வந்து சுட்டபழம் வேண்டுமா, சுடாப்பழம் வேண்டுமா? என வினா எழுப்ப ஔவை தனக்கு சுட்டபழமே வேண்டும் எனக் கேட்கிறாள். நாவல் மரத்தில் அமர்ந்திருந்த முருகன் மரத்தை உலுக்க பழங்கள் கீழேவிழ ஔவை அதனை எடுத்து ஊதுகிறாள், ஏன் பாட்டி பழம் சுடுகிறதா? என முருகன் கேட்க அப்போது தான் அதன் பொருளை உணர்கிறாள் ஔவை.

பிரம்மனால் படைக்கப்பட்ட ஜீவன் வாழ்க்கை முறைகளை பல விதங்களில் போதித்துத்தந்த பின் அதன் வழி நடந்தும் ஜீவன் தன்னை

அறியாமல் செய்யும் பாவங்களை ஊதிக்களைந்து மோட்ச வழிக்கு வழி காட்டுகிறேன் என்கிறார் முருகன் பழமுதிர்சோலையில் சுந்தரராஜனாக அமர்ந்திருக்கும் அழகர்மலையில் அமர்ந்து.

பனையின் பழத்தின் நிறம் நீலம், இது சிவ தத்துவத்தை பனையில் உள்ளபடி காட்டி காற்றில், பூமியில் விஷ ஜந்துகளில் நிறைந்திருக்கும் விஷத்தைப் போக்குகிறேன் என்கிறார் சிவன்.

பழமுதிர்சோலையில் முருகன் நாவல் பழத்தை தேர்ந்தெடுத்து அதன் கரு நீல நிறத்தைக் காட்டி பாவத்தின் ரூபமாக அதை வெளிப்படுத்துகிறார். இவ்விதம் ஜீவனுக்கு வேண்டிய சகலவித நன்மைகளைச் செயல்படச் செய்து பின் ஸ்தலங்கள் மூலம் ஜீவ சிருஷ்டித் துவக்கத்தையும் முடிவையும் நமக்கும் கூறுகிறார்கள். கண்ணனும் நாவல் பழத்திற்கே முக்கியத்துவம் அளிக்கிறார்.

## ஸ்தலங்களின் வரலாறு

சூரியவம்ஸத்வராலும், சந்திர குலத்தவராலும் பூஜிக்கப்பட்டு பிரம்மனிடமிருந்து இஷ்வாகுலத்தில் ஒப்படைக்கப்பட்டு அவர்களால் பூஜிக்கப்பட்ட குலதனமான அரங்கன் பிரணவாகார விமான தளத்தின் கீழ் பூலோக வைகுண்டமான ஸ்ரீரெங்கச்சேத்திரதில் ஸ்ரீராமரின் கையால் விபீஷணரிடம் அளிக்கப்பட்டு விபீஷணர் மூலம் வினாயகர் கையில் ஒப்படைக்பட்டு வினாயகராலேயே பிரதிஷ்டை செய்யப்பட்ட பெருமை கொண்டதே ஸ்ரீரெங்கச்சேத்திரம். இராமாயண காலத்திலேயே பகவானல் பூலோக வைகுண்டத்ததை பலவித ஏற்பாட்டை செய்துள்ள ஸ்தலம் ஸ்ரீரெங்கம்.

இராமாயண, மஹாபாரத இதிகாஸங்களை ஜீவன் வாழும் வகைக்காக தாங்களே மனிதர்களாக வந்து நாடக ரூபமாக நடித்து அதை காவியமாக எழுதிவைத்த பின் இவைகள் ஜீவன் உள்ளகாலம் வரை அழியாமல் காத்தும் வந்துள்ளார்கள். ஜீவன் இதை சாதாரண காவியமாக நினைத்து நடைமுறையில் கொண்டுவராமல் இருந்துவிடப் போகிறர்களோ என்று இவைகளைப் படித்தால் புண்ணியம் என்ற ஒரு ஆழமான முத்திரையும் பதித்து மதிப்பில் வைத்துள்ளளர்கள்.

துவாபரயுகத்தின் முடிவில் பிரளயகாலம் முடிந்த பின் கலியுக துவக்கத்தில் கண்ணன் தானே குருவாயூரில் பாலரூபத்தில் வந்து அமர்ந்து கலியுகப் பணிகளைத் துவங்குகிறார். துவாபரயுகத்திலும், திரேதாயுகத்திலும் பகவான் தானே அவதரித்து மனிதராக பல உண்மைகளை ஜீவனுக்கு புலப்படுத்தியபின் கலியில் தன் ரூபங்களை சிலையாகவே வடித்து பல கோயில்களை நிர்மானித்து அதனை ஜீவன் வழிபடும்படி வைத்துள்ளார்கள்.

திரேதாயுகத்திலும், துவாபரயுகத்திலும் மூவரும் இணைந்தே பணிசெய்வதை காட்டியவர்கள் கலியில் சிவம், வைஷ்ணவம் என இருபிரிவாகவே பிரிந்து பணிகளைச் செய்கிறார்கள். அவர்களால் நிர்மானிக்கப்பட்ட கோயில்களைப் புகழ்ந்து ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஸ்தோத்திரம் செய்த ஸ்துதிகளைக் கொண்டே இவ்விரு பிரிவும் நடக்கும்படி மேலான தத்வத்தை உட்புகுத்தி உள்ளார்கள்.

திருமலையில் ஸ்ரீனிவாஸர் அனுதினமும் கௌசல்யா சுப்ரஜராமா என்று துதித்து ராமாயணத்திற்கும் திருமலைக்கும் சம்பந்தம் உள்ளதை புலப்படுத்தி நம்மையும் தினம் வணங்கச் செய்தபின்.

கும்பகோணம் அருகில் உப்பிலி அப்பன் கோயிலில் பூமிப்பராட்டியை மார்கண்டேய முனிவரின் புத்திரியாக வளரச் செய்து பூவராகவராக வந்து பூமியைத் தாங்கி அவளுக்கு நரகாசுரன் என்ற புத்திரனை அளித்திருந்தாலும் அவளை கல்யாணம் செய்து கொண்டு திருமணக்கோலம் அளிக்காததை இங்கு போக்கி அவளைத் திருமணம் செய்து அவளின் குறையைப்போக்கி மக்களின் குறைகளையும் நீக்குகிறார்.

இந்தஸ்தலத்தில் உப்பிற்க்கு அதாவது சரீரதத்வத்தில் உப்பு நீராக பஞ்ச தத்வத்தில் ஆணாக இருக்கும் சமுத்திரத்திற்கு மதிப்பளிக்கிறார். இங்கு ஸ்ரீனிவாஸர் உப்பில்லாத உணவை உண்டு மக்கள் மாதா மாதம் ஒரு முறை திருவோண நட்சத்திரத்தில் ஸ்ரவண விருதமாக உப்பில்லாத உணவை உட்கொள்ளவைத்து சரீர, மனப் பிணிகளை நீக்குகிறார்.

மயிலையில் கபாலீஸ்வரராக சிவன் அமர, கற்பகவல்லியாக அம்பாள் தெற்கு நோக்கி நாராயணர் ஸ்ரீரெங்கத்தில் தெற்கு நோக்கி அமர்ந்து உள்ளது போலவே அமர்கிறாள். இங்கு மூன்று தத்வங்கள் உள் அடங்கி இருப்பதை ஜீவன் உணர முடியும். மயிலை மயிலாக உள்ள பிரம்மனைப் போற்றி கற்பகமாக ஜீவனின் முதல் ரூபத்திற்கு ஆதாரமாக இருக்கும் கற்பக விருச்சமாகிய தென்னைக்கு மதிப்பளித்து ஜீவனின் பிறப்பின் பின் அதன் கல்யாண நலன்களை பூர்த்தி கவனித்து பின் மோட்சத்திற்கான பணியையும் ஏற்கிறோம் என புலப்படுத்துகிறார்கள்.

அம்பாள் கற்பகமாக இருந்து பூர்ண கும்பத்தின் மகிமையை புலப்படுத்துகிறாள். மண்ணான கலஸத்தில், கங்காநீரை நிரப்பி மாவாகிய ஆத்மாவின் சின்னமாகிய மாமரத்தின் இலையை 5 தளத்தை வைத்து அதன் நடுவில் முழு மட்டைத் தேங்காயை வைத்து ஜீவனின் சிருஷ்டித்தத்வத்தை புலனாக்கி தானே கற்பகமாக அமர்கிறாள். சகல ஆலங்களிலும் தேங்காயை உடைத்து சிருஷ்டியை ஆராதிக்கிறார்கள். இதன் மூலமே கோயில் கோபுர கலஸங்கள் யாவும் பூர்ணகும்ப ரூபத்திலேயே வடிவு அமைத்து கும்பாபிசேகம் செய்து சிருஷ்டிக்கு தலைவணக்கம் செய்யப்படுகிறது.

கற்பவதி பிரஸவத்திற்கு தாய் இல்லம் செல்லும் சமயம் மட்டைத் தேங்காயயை மடியில் வைத்து வளைகாப்பு, ஸ்ரீமந்தம் ஆனபின் அனுப்புவது என்ற வழக்கத்தை வைத்து பிரஸவம் ஆனபின் தொட்டிலிட்டு காப்பரிசி செய்யும் பொழுது இந்த மட்டைத் தேங்காயை உடைத்து அதன் சிறு துண்டாக்கி வெல்லம் பாகுடன் சேர்த்து வழங்குவதும் சிருஷ்டியான ஜீவன் சகல நலங்களும் குறைவின்றி பெற ஆசிகூறவே பெரியோர்களால் வழிவகுத்துத் தரப்பட்டுள்ளது.

அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் தோன்றி கற்பகவல்லி கபாலீஸ்வர்ரின் மஹிமையை உலகிற்கு கொண்டுவர 63 நாயன்மார்களுடன் சேர்ந்து பக்தியின் பொருளை பலப்படுத்துகிறார்கள்.

பாதுகையே நம்மாழ்வாராக ஆழ்வார் திருநகரியிலும், ஆதிசேஷனே ஸ்ரீராமனுஜராக ஸ்ரீபெரும்புதூரிலும் அவதாரம் செய்ய துப்புலில் திருவேங்கடமுடையானே கண்டாமணியில் வேதாந்ததேசிகராக காஞ்சியில் அவதாரம் செய்த அதேசமயத்தில் காலடியில் சிவஸ்வருபமாக ஆதிசங்கர் அவதாரம் செய்கிறார்.

ஆதிசங்கரர் தன் 7வது வயதிலேயே பால சன்யாஸம் ஏற்கிறார். இவர் தன்கையாலேயே 11 லிங்கங்களை பிரதிஷ்டை செய்கிறார்.

ஸ்ரீராமர் தன் கையால் இராமேஸ்வரத்தில் மண்ணால் லிங்கம் பிரதிஷ்டை செய்ததே கல்ருபமாக மாறி சதா சிவலிங்கமாக உள்ளதும் அதேமாதிரி காசியில் லிங்கப் பிரதிஷ்டைசெய்து கங்காநீரால் சதா அபிசேகம் செய்யும் மூலத்தை ஏற்படுத்திய பின் ஆதி சங்கரரால் 11 லிங்கப் பிரதிஷ்டை செய்யப்படுவது ஜீவ தத்வ ரகஸ்யம் வெளிப் படுத்தப்படுவதின் நோக்கமே.

இதன்பின் அம்பாளுக்கு 6 மடங்கள் அமைக்கிறார்.

காஞ்சீபுரமே உலகின் மையமாக இருப்தால் இங்கு ஸ்ரீசக்ரத்தை தனதாகக் கொண்டு காமாட்சி அம்மனாக அம்பாள் இருந்து உலகை சதா சுழலச் செய்வதால் ஆதி சங்கரர் அம்பாள் உள்ளபடி ஸ்ரீசக்ரத்தை இங்கு பிரதிஷ்டை செய்கிறார். திருவாரூர் புத்து மண்ணிற்கான பிருத்திவிஸ்தலமாகவும் காஞ்சீபுரம் உலக மையமான பிருத்திவிஸ்தலமாகவும் உள்ளபடி கூறப்பட்டுள்ளன.

காஞ்சீபுரத்திலேயே பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் ஜீவனின் சிருஷ்டிப் பணியை துவக்கமாகக் கொண்டு செய்வதை காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆலயத்தில் சந்திர + சூரியன் இணைந்து அதன் நடுவில் பல்லி ருபம் இருப்பதை கல்வெட்டில் நிலையாக சாட்சி ருபத்தில் வைத்துள்ளார்கள். பிரம்மண் அத்திவரதனாக மரங்களின் தலைவானக வரதராஜன் பெருமாள் திருகுளத்தில் இருந்து நீரை, மண்ணை சதா பூஜிக்கிறார்.

காஞ்சியிலேயே ஏகாம்பரேஸ்வரர் ஆலயத்தில் ஆத்மாவின் பணியை கல்யாணமாகச் செய்வதால் இங்கு உள்ள மாமரத்தடியில் நித்ய கல்யாணம் நடத்தி சதா ஆத்மாவை பூஜிக்கிறார்கள்.

உலகை ஸ்ரீசக்ரம் சுழல மாங்காட்டில் அம்மன் மஹாமேருவான நடு ராடாகவும் அதனை சுழலச் செய்ய அகிலாண்டேஸ்வரி தன் பாடகம் மூலம் மின்சாரத்தை ஜம்புலிங்கேஸ்வர் திருவடியிலிருந்து சதா சுரக்கும் ஸப்த நதிகளின் நீரிலிருந்து உண்டாக்கி ராடில் பாய்ச்ச பூமி சதா சுழலும் தன்மையைப் பெறுகிறது.

இவ்விதம் உலகப் பணியை சதா இயக்கும் காஞ்சியில் அம்பாளை நித்தியம் பூஜிக்க ஸ்ரீமடம் ஆதி சங்கரரால் அமைத்து சதா ஸ்துதிசெய்யப்படுகிறாள் பூ உலகப்பணி ஒரு செகண்ட் கூட தடையில்லாமல் நடைபெற.

வரதாராஜப் பெருமாள் ஜீவனின் பெரும் பொக்கிஷமான 4 வேதங்களை நித்திய பாராயணமாக வைத்து பூஜிக்கிறார்.

இதே சமயம் ஸ்ரீவில்லிபுத்தூரில் பூமிப்பிராட்டியே ஆண்டாளாக அவதாரம் செய்கிறாள். துளஸி வனத்தில் பெரியாழ்வார் துளஸி வனத்தில் கண்டெடுத்து குழந்தைக்கு ஆண்டாள் எனப் பெயர் சூட்டி வளர்க்கிறார்.

ஆண்டாள் பெரியாழ்வார் மூலம் ஸ்ரீமன் நாராயணனின் மகிமையை அறிந்து அவரையே தன் மணவாளனாக சிறு வயது முதலே தன் மனதில் இடம் அளிக்கிறாள்.

பெருமானுக்கு பெரியாழ்வார் வண்டுகள் தீண்டி தேன் எடுக்காத மலர்களை விடியற்காலையே சென்று தொடுத்த புஷ்பங்களை தான் அணிந்து கொண்டு, களைந்த மாலைகளை குடலையில் வைத்து அனுப்புவாள். மாலை அணிந்து கொண்டு கிணற்று நீரில் தெறியும் தன் பிரதிபிம்பத்தின் அழகைப் பார்த்தபின்பு.

முதலில் இதனை அறியாத பெரியாழ்வார் அரங்கனுக்குச் சாற்றும் சமயம் அதில் தலைமுடி இருந்ததைக்கண்டு வெகுண்டு ஆண்டாளைக் கண்டிக்கிறார். புதிதாக மாலை தொடுத்து அந்த மாலையை அரங்கனுக்குச் சாற்ற முற்பட்டபோது அம்மாலை அரங்கன் கழுத்தில் நிற்காமல் நழுவி விழுகிறது. இந்தச் சம்பவம் பெரியாழ்வாரை மிகவும் துக்கத்தில் ஆழ்த்துகிறது.

அன்று இரவு சொப்பனத்தில் அரங்கன் பெரியாழ்வாருக்கு ஸேவை சாதித்து ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையே நான் விரும்பி ஏற்கிறேன் என்று சொன்னபின் அன்றையிலிருந்து ஆண்டாள் சூடிக் கொண்ட மாலையே சாற்றுகிறார்.

ஆண்டாள் உரியபருவம் வந்ததும் அரங்கன் மேல் அடங்காக் காதல் கொண்டு நாச்சியார் திருமொழியை இயற்றுகிறாள்.

அதன்பின் அவரையே திருமணம் செய்வது போல வாரணமாயிரம் என்னும் திருமணச் சடங்குப் பாடல்களை இயற்றி அதன் பின்பும் வழி தெரியாமல் தோழிகளுடன் மார்கழிமாதம் 30 நாளும் விடியற்காலை எழுந்து ஒவ்வொருநாளும் ஒரு பாசுரமாகப் பாடி அரங்கனை அடையும்

மார்க்கத்தை தானும் அடைந்து ஜீவனையும் அடையும் மார்க்கத்தை புலப்படுத்துகிறாள்.

திருப்பாவையில் ஆண்டாள் தமிழில் ஸமஸ்கிருத வேதத்தின் சாரத்தையே உள் அடக்கித் தந்துள்ளாள். ராமாவதார காலத்தில் நிர்மானிக்கப்பட்ட அரங்கன் 12 ஆழ்வார்களை படைத்து தமிழில் நாலாயிரப் பிரபந்தம் பாடிய சாரத்தையும் உள்அடக்கி ஆழ்வார்களையும் பாசுரங்கள் மூலம் பெறுமைப்ப படுத்தியுள்ளாள் அரங்கன் பணியை திறம்படச் செய்த திறமையைப் போற்றி முதல் பாசுரத்தில் கண்ணனுக்கு உகந்த மார்கழியை முதலில் வைத்து பின் நாராயணனே தெய்வங்களுக்கு மூலம் என்று நாராயணனே நமக்கே.

பறைதருவான் என்றும் கோவிந்தநாமத்தின் புகழ் பாடியுள்ளாள் 8சாண் உடம்பில் அஷ்டாச்சர மந்திரம் அடங்கி இருப்பதால் அவரவர்கள் கையால் சரீரத்தை அளந்தால் 8 சாண் இருப்பதையும் உணர்த்தி நாராயணன் புகழ் சேர்க்கிறார்கள் அவனே மூலம் என்று.

இதனையே ஆண்டாள் திருப்பாவையில் அன்று உலகமளந்தாய் பாசுரத்தில், உன்கையில் வேல் போற்றி என்று கூறி உள்ளாள் தைரியமாக என்றால் முருகனும் அவனே என்னும் பொருள் உணர்ந்தே உட்பொருளாக வைத்துள்ளாள்.

இதனை நம்மாழ்வாரான பாதுகையைப் போற்றி வேதாந்ததேசிகர் இயற்றி உள்ள பாதுகா ஸ்கஸ்கரத்தின் 11வது ஸ்லோகத்தில் 6குணங்கள் பகவானிடம் இருப்பதாகக் கூறுகிறார். ஞானம், புத்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம் தேஜஸ் என்ற 6 குணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஞானம் | - | பிரம்மம் | புத்தி | - | ஸரஸ்வதி |
| பலம் | - | சிவம் | தேஜஸ் | - | பார்வதி |
| வீர்யம் | - | விஷ்ணு | ஐஸ்வர்யம் | - | லஷ்மி |

என்ற 6வரும் உள்ளதைக் காணலாம்

இதையே ஆண்டாள் திருவாடிப்பூரத்தில் அவதரித்தது போல அம்பாளும் திருவாடிப்பூரத்தில் அவதரிக்கச் செய்து இருவரிலும் ஒருவரே உள்ளதை ஜீவனுக்கு தெளிவாக்குகிறார்கள். பாறையான பாறாங்கல் கரைந்தே பூமியில் மண்ணாக மாறுவதால் இதைத் தாங்கிய பூமிப்பிராட்டியின் அம்ஸமே இவ்விருவரும் என்பதில் சந்தேகம் இல்லை என்று இருவர்கையிலும் கிளியைக் கொடுத்து ஒன்றுபடுத்திக் காட்டுகிறார்கள்.

இராமாவதாரத்தில் இருவரும் இணைந்த ரூபமே என்று காசியில் சீதையை அன்னபூரணியாக தங்கச்சிலை வடித்து கங்காநீரை விஸ்வநாதருக்கு அபிசேஷகம் செய்து மண்ணிற்கும், நீருக்கும் சிவ ரூபத்தில் மதிப்பளித்தவர்கள்.

ஸ்ரீரெங்கத்தில் வைஷ்ணவ ருபத்தில் பூமிப்பிராட்டியான ஆண்டாளுக்கு ஐக்கியம் அளித்து தன்னில் அடக்கி அவளை கௌரவிக்கிறார்.

சிவ + வைஷ்ணவமாக கலியில் பிரிந்து ஜீவனின் பணிகளைச் செய்தாலும் நாங்கள் ஒன்றே என்பதை பந்தல நாட்டு மன்னன் வளர்ப்பு மகனாக சிவனுக்கும் + விஷ்ணுவிற்கும் மோகனாவதாரம் மூலம் பிறந்த குழந்தை ஐயப்பனாக வளர்கிறார். சிவ + வைஷ்ணவ இணைப்பாக இருந்து.

இவரும் இராமாயண கால சம்பந்தம் உடைய பம்பா நதி தீரத்தில் மகிஷி எனும் அரக்கியை அழித்தபின் அந்த மலைக்கு சபரி மலை என பெயரிட்டு 18 படிகளின் மேலாக ஐயப்பனாக அமர்கிறார் கண்ணன்.

மஹாபாரதத்தில் தான் இயற்றிய கீதையின் 18 அத்தியாயங்களையே இங்கு 18 படிகளாக வைத்து நேம, நிஷ்டை, ஆசாரத்துடன் சகல ஜீவதத்துவங்களையும் பாமரரும் உணர்ந்து நடக்கும் ஞானவழி காட்டுகிறார்கள் இங்கே.

இங்கு நெய் அபிசேஷகம் பக்தர்கள் தேங்காயில் விருத காலத்தில் விட்டு பூஜித்த நெய்யை அபிசேகம் செய்து கொண்டு தேங்காய்க்கும், வெண்ணைக்கும் உள்ள இணைப்பை இங்கு எடுத்துக் காட்டுகிறார்.

பாலில் வெண்ணை அடங்கி உள்ளதை உணர்ந்து அதை நெய்யாக வெளிக் கொண்டுவருவது போல பக்தி மூலம் ஞானம் கிடைக்கும் என்ற நீதியை இதன் மூலம் போதிக்கிறார்.

குருவாயூர் அப்பனாக அமர்ந்த கேரள தேசத்திலேயே சபரிமலையில் ஐயப்பனாக அமர்ந்து வடக்கிலிருந்து தெற்குவரை யாவரையும் ஒன்று இணைத்து பேதங்களையும் இங்கு அகற்றுகிறார்.

பத்துவித திய குணங்களை நீக்கி 10 வித நற்பண்புகளோடு பிரம்மா, ஸரஸ்வதி, சிவன், பார்வதி, விஷ்ணு, லஷ்சுமி ஆகிய 6 வரின் கிருபை பெற்றால் ஜீவன் சகலவித சௌபாக்கியமும் பெறுவார்கள் என்பதை 16ம் பெற்று பெறு வாழ்வு வாழ் என ஆசீர்வாதம் செய்வதின் பொருளாகும்.

10 வித நற்பண்பும் + 6வரின் கிருபா கடாச்சமும் ஒருவருக்கு கிடைத்து விட்டால் அந்த ஜீவன் நற்பாதையில் நடந்து முடிவில் மோட்சமாகிய லஷ்சுமி + நாராயணன் திருவடியை அடைவார்கள் என்பதே 18 படி.

இவ்விதம் நல்ல பாதையில் நடக்கும் ஜீவனை அழிவுப் பாதையில் நடக்க வைக்கும் சூழ்நிலை ஏற்படுவதையே, வெண்ணை திரண்டு வரும் போது தாழி உடைந்த மாதிரி என்ற உவமானம் பேசப்படுகிறது.

பாலிலிருந்து தயிர், தயிரிலிருந்து மோர், மோரிலிருந்து வெண்ணை என்று இருப்பதை ஜீவன் முயற்சி செய்தே கண்டுபிடிக்க முடிகிறது. இதைப் போன்றதே ஞானம், ஞானம் கிடைத்தபின் அதை விடாமல்

செயல்பட்டால் தான் நெய் கிடைக்கும் என்பதே ஐயப்பன் நெய்க்கு முக்கியத்துவம் அளிப்பது.

தேங்காயில் நெய்யை பக்தர்களை அடைக்கச் செய்து தேங்காயிலிருந்து உற்பத்தியான ஜீவன் பக்தி மூலம் ஞானம் அடை நெய் போல என்ற உபதேசமாகும்.

ஸ்ரீரெங்கநாதர் கிருஷ்ணாவதாரத்தில் யசோதையின் வயிற்றிலிருந்து பிறந்த மஹாமாயையான விஷ்ணு துர்க்கையை தன் உடன் பிறந்த சகோதரியாக சமயபுரத்தில் மாறி அம்மனாக அமரச்செய்கிறார். கோகுலத்திலிருந்து மதுராவிற்கு மாறிவந்த அடையாளமாக அவள் பெயரை மாரிஅம்மன் என்றே வைத்து ஜீவனுக்கு இதை புலப்படுத்துகிறார்.

இவளையே பல ஸ்தலங்களில் பலவித ரூபங்களில் பாமரர்க்கும் அருள் பாலித்து சகல நோய்களையும் போக்கும் அம்மனாக அமரச்செய்து ஜீவனை காக்கிறார்.

கர்நாடக தேசத்தில் உடுப்பியில் தான் கண்ணனாக அமர்ந்து தன் அருகிலேயே முத்தேவியரும் அடங்கிய மூகாம்பிகையாக அமரச்செய்கிறார். யாவ ஸ்தலங்களிலும் உள்ள அம்பாள் மூவரும் அடங்கிய ரூபமாக இருந்தாலும் ஒவ்வொருவர் ஒவ்வொரு ரூபத்தில் மதிப்பளிக்கப்படுகிறார்கள்.

உடுப்பியில் அமர்ந்த கண்ணன் துவாரகையில் ருக்குமணியால் ஆராதிக்கப்பட்ட சாளக்கிராம முகூர்த்தமான சிலை ஆவார். இவர் கையில் மத்துடன் இருந்து சரீரத்தில் திரௌபதி மத்தாக இருந்து சரீரப் பணியை கவனிப்பதை மதிப்பதடன் ஜீவன் பக்தி என்னும் ஞானத்தை கடைந்து பெறவேண்டும் என்றும் நித்தியம் ஜீவனை வேண்டி நிற்கிறார்.

கர்நாடக தேசத்திலேயே காவேரி அகஸ்திய முனிவரின் கமண்டலத்திலிருந்து காக்கை ரூபத்தில் வந்த வினாயகரால் வெளிக்கொண்டு வரப்பட்டு தலைக்காவேரியாக ஜனித்து ஸ்ரீரெங்கத்தை வந்து அடைந்து ஸ்ரீரெங்காநாதரை மூன்று புறமும் சூழ்ந்து பின் மாயவரத்தில் சமுத்திரத்தில் சங்கமமாகும்.

காவேரியின் உற்பத்திஸ்தானத்தில் சாரதாம்பளை ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்து மடம் ஏற்படுத்துகிறார். காவேரி என்ற பெயரின் உட்பொருள். கா-காடு, வேரி-ஏரி முதலியவைகள் நிரப்பும் நீர் என்ற பொருள் கொண்டது, மழை நீரை தன்னில் அடக்கி சகல நீர் நிலையங்களையும் வற்றாமல் இருக்கச் செய்து காட்டை வளப்படுத்தி பூமியில் பயிர், பச்சைகள் நிறைந்து தானியம், காய், கனி நிரம்பி ஜீவன் சகல சௌகரியத்துடன் வாழ வைக்க வேண்டும் என இங்கு சாரதாம்பாளை வேண்டி ஜீவரட்சணர்த்தமாக அமைக்கப்பட்ட ஸ்ரீமடம் சிருங்கேரி சாரதாபீடம் ஆகும்.

இவ்விதம் பிரளய முடிவில் துவாரகையிலிருந்து கண்ணன் குருவாயூரில் அமர்ந்தபின் வரிசையாக மேல் கூறிய இடங்களில் அமர்ந்தபின் தென்னாட்டில் சென்னையில் திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதியாக பிருகு முனிவரின் வேண்டுகோளுக்கு இணங்கி அமர்ந்து தென்னாட்டில் மக்களுக்கு கீதாச்சார்யனாக கீதையின் தத்வங்களை போதிக்கும் ஆசானாக அமர்கிறார். இவ்விதம் தென்னாட்டையும், வடநாட்டையும் இணைப்பதுடன் ஸமஸ்கிருத்தில் எழுதப்பட்ட கீதையை தமிழில் எழுத தானே திருவள்ளுவராக அவதாரம் செய்து நீதிகளை போதிக்கும் திருக்குறளை எழுதித் தருகிறார். இதை ஜீவன் ஒப்புக்கொள்ள அவர் மனைவியின் பெயரை வாசுகி என்று வைத்து புலப்படுத்துகிறார். வாசு - அதாவது வாசுதேவனாகிய கி- கிருஷ்ணரே என் கணவரான திருவள்ளுவர் திருமால் என்று தெளிவுபடுத்தி உள்ளாள்.

துவாபரயுகம் வரை ஸகல கண்டங்களும் இந்தியாவுடன் இணைந்து ஓரே உலகமாகவே இருந்தது பிரளயத்திற்கு பிறகு பல கண்டங்களாக பிரிந்து விட்டன. இதனால் பகவான் பகவத் கீதையில் தான் கூறியபடி எங்கெங்கு துன்பங்கள் நேருகிறதோ, அதர்மங்கள் தழைக்கிறதோ அப்போதெல்லாம் நான் பல ரூபங்களில் வருவேன் என்று கூறியபடி பாலஸ்தீனத்தில் யூதர்களிடையே வன்முறைகள் தலைதூக்கிய சமயம் தானே அங்கு கிருஸ்துவாக அவதரித்துள்ளார்.

ஜெருஸலேம் நகர் இந்தியாவை ஒட்டிய நாடே இங்கு கண்ணனே வந்து அவதரித்துள்ளார் என்பதற்கு பல ஆதாரங்களும் வைத்துள்ளார்.

இந்நாட்டில் கம்ஸன் போலவே யூத அரசர் மக்களுக்கு பல துன்பங்கள் இழைந்து வந்த சமயம் கன்னி மரியாளிடம் அசரீரியாக தேவதூதன் வந்து தேவகிக்கு எவ்விதம் நான் உன்னிடம் 8 வது மகனாக வருவேன் என்று கூறியது போலவே கன்னிமேரியிடம் மணம் ஆவதற்கு முன்பே வருகிறேன் என்று கூறி அக்குழந்தைக்கு ஏசு என்ற திருநாமம் வைத்து அழைக்கும்படி கூறி உள்ளார்.

குழந்தைக்கு ஏசு என்ற திருநாமமே வைக்கச் சொன்னதின் காரணம் கிருஷ்ணாவதார காலத்தில் தேவகியும், வாசுதேவரும் பலவித துன்பங்களை ஏற்கிறார்கள் கண்ணன் மூலம் கம்ஸவதத்திற்காக. பகவானுக்காக அவர்கள் ஏற்றுக் கொண்ட துன்பங்களை மனதில் கொண்டே கலியில் மரியாளிடம் தான் வரும் போது துவாபரயுக தாய், தந்தையான இவ்விருவரையும் மனதில் கொண்டு தேவகியில் - தே என்ற துவனியல் உள்ள ஏ என்ற சொல்லையும் வசு - என்று முடியும் சு என்ற சொல்லையும் இணைத்து ஏசு என்றே பெயர் வைக்கச் சொல்லுகிறார்.

அவர்கள் வேறு பெயர் வைத்துவிடாமல்,தேவதூதன் கன்னி மரியாளிடம் வந்துள்ளேன் என்று அவளுக்கு நிச்சியிக்கப்பட்ட சூசையப்பரிடம் கனவில் வந்து சொல்லுகிறார். அதனால் சூசையப்பர்

அவளை எந்தவித மனக்கிலேசமும் இல்லாமல் திருமணம் செய்து கொள்கிறார்.

இதனை அறிந்த அரசன் அவர்களை கொல்ல முயற்சி செய்தும் பலன் இல்லாமல் போகிறது. ஜெருசுலேயத்தில் இடையர்களிடம் மாட்டுத் தொழுவத்தில் இரவு 12 மணிக்கு ஏசு அவதரிக்கிறார். கண்ணன் பிறந்ததும் இரவு 12 மணிக்கு இதை ஜீவன் அறியும் என்பதால் அதே நேரத்தை தேர்ந்தெடுத்து பிருந்தாவனத்தில் மாடு, கன்று மேய்த்து இடையர்களிடையே வாழ்ந்த அடையாளத்தை மாட்டுத் தொழுவத்தில் அவதரிக்கிறார் கலியில் ஏசுவாக.

மாட்டுக் கொட்டடியில் பிறந்திருக்கும் குழந்தை ஏசு என்பதை வெளி உலகிற்கு இடையர்களே கூறுகிறார்கள். மூன்று அரசர்கள் ஏசுவை வணங்க வருகிறார்கள். மூன்று அரசர்கள் என்பது முக்கடவுளே ஆவர்.

ஏசு பிறந்தது கண்ணனுக்கு உகந்த மார்கழியான டிஸம்பர் மாதமே, இவ்விதம் பல ஒற்றுமைகளுடன் குழந்தை ஏசு பிறந்த செய்தியைக் கேட்டு யூத அரசர் அந்த சமயம் பிறந்த எல்லாக் குழந்தைகளையும் கொல்ல உத்தரவிடுகிறான் கம்ஸன் போலவே.

ஏசு என்று குழந்தையின் பெயரை தாங்கிய உடல் பிரம்மபுத்திரரான நாரதருடையது இது ஏன் என்றால் கம்ஸன் தன் சகோதரியின் 8வது குழந்தையினால் தானே தனக்கு மரணம் என்று மனிதாபிமானத்துடன் மற்ற 7 குழந்தைகளையும் கொல்லாமல் விட்டு விட நினைத்த போது நாரதர் அப்படிச் செய்யவிடாமல் கம்ஸனை தடுத்து நிறுத்தி யாவரையும் கொன்றுவிட உபதேசிக்கிறார்.

ஏன் என்றால் கம்ஸன் இவ்விதம் செய்யாவிட்டால் நீதிமானாகி வீடுான். அப்படிப்பட்ட அவனை பகவானால் கொல்ல முடியாது என்ற நல்ல எண்ணத்தோடு செய்தாலும், அவர் தேவகி, வசுதேவர் குழந்தைகளைக் கொல்ல தூண்டுகோலாக இருந்த குற்றவாளி ஆகிவிடுவதால் அவருக்கு இந்த ரூபம் அளிக்கப்படுகிறது.

முட்கிரிடம் தரிக்கப்படும் போது சிவனும், மரச்சிலுவையில் அறையும் போது விஷ்ணுவும், மண்டைஓடு என்ற இடத்தில் சிலுவையில் அறையும் போது பிரம்மனும் உள்ளதையும், அவர்களால் தாங்கப்பட்டு அவர் தன் சரீர ரத்தத்தை சிந்தும் போது வலி தெரியாமல் இருக்கச் செய்து அவரின் பாபத்திற்கு மன்னிப்பு அளிப்பதுடன் அவரை தரிசிக்கும் பக்தரின் பாவத்தையும் நீக்கி பாவ மன்னிப்பு அளிக்கப்படுகிறது.

அவரின் பெரியகோயில் தென்னாட்டில் சான்தோமியரால் மைலாப்பூரில் சான்தோம் சர்ச்சாக அமைக்கப்பட்டதுடன் ஏசு பிரம்மபுத்திரன் என்ற சாட்சியாக அவரின் இருபுறமும் இரு மயிலை வைத்து வெள்ளைத் தாமரையின் மேல் அவரை நிற்கும்படி செய்து சான்தோமியர் குத்தப்பட்ட வேலை பூஜையில் வைத்திருப்பதும் இதற்கெல்லாம் சாட்சியாக உள்ளது.

கண்ணனுக்கு விருப்பம் அப்பம். கிருஸ்துவர்களும் அப்பத்திற்கே முதலிடம் அளிக்கிறார்கள். கோயில் மணி நம் கண்டாமணி சாம்ராணி பூஜைக்கு உபயோகப் படுத்தப்படுகிறது.

நாகைப் பட்டணத்திற்கு அருகில் வேளாங்கன்னியில் மேரி மாதா முதலில் கேட்டது மோர். அதாவது கண்ணனுக்கு உகந்த பால், தயிர், மோருக்மே முக்கியம் அளிக்கப்பட்டு புனித நீராக கங்கைக்கும் மதிப்பளிக்கப்படுகிறது.

வேளாங்கன்னிமாதா அவதரித்துள்ள மாதம் ஆவணி மாதம் கிருஷ்ண அவதாரம் செய்த மாதமே செப்படம்பரில் வருகிறது. இதற்கு முக்கிய காரணம் மேரியாக வந்தள்ளது பிரம்ம பத்னியான ஸரஸ்வதி. இது எப்படி என்றால் கன்னிமேரியிடம் வந்தது பிரம்ம புத்திரரான நாரதரே ஆதலால் அவருக்கு நிஜத்தாயாரே மேரியாக யாவரும் வணங்கப்படும் மதிப்பிற்குரிய அன்னையாகிறாள்.

பின் சூசையப்பர், மேரிக்கு கிருஷ்ணாவதாரம் வசுதேவர், தேவகியான ரூபத்தை அளித்து அவர்கள் கம்ஸனால் கொல்லப்பட்ட மற்றக் குழந்தைகளை அளித்து மகிழச் செய்கிறார்கள்.

பிரம்மபுத்திரரான ஏசுவை குழந்தையாக மடியில் தாங்கி ஸரஸ்வதியே மேரிமாதாவாக யாவருக்கும் தரிசனம் அளிக்கிறாள்.

இவ்விதம் துவாரகையில் தனக்காக பல துன்பங்கள் அடைந்தவர்களை கலியில் போற்றி மதிப்பளிக்கிறார் என்றால் தனக்காக துன்பங்களை ஏற்கும் பக்தர்களை அவர் கைவிடுவதில்லை என்பதை இதன் மூலம் நிருபிக்கிறார்.

இவ்விதம் கிருஸ்து பிறப்பில் மூலமாக கண்ணனான நானே உள்ளேன் என்பதை நிருபித்தவர் அவர்கள் தாய்மொழியாகத் தோன்றிய ஆங்கிலத்தில் கீதையை பைபிளாக அமைத்துத் தந்துள்ளார். 10 கட்டளை என்பதின் மூலம் தசாவதாரத் தத்வத்தை எடுத்துக்கூறி கிருஸ்துவர்களும் என் குழந்தைகளே என ஜீவனுக்குத் தெளிவு படுத்துகிறார்.

தமிழில் திருக்குறளை கீதையின் தத்வத்தை வடித்துக் கொடுத்தபின் ஆங்கில மொழியின் பைபிளை கீதையின் பொருளை உள் அடக்கித் தந்துள்ளளர் கண்ணன்.

தமிழின் சொற்கள் தனிப்பட்டே ஒரே அட்சரத்தில் எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலமும் ஒரே சொல்லைக் கொண்டே எழுதப்பட்டுள்ளது.

இந்தியாவை விட்டுப் பிரிந்த மற்ற கண்டங்களிலும் சரி, இந்திய நாட்டின் மற்றப் பிரிவிகளிலும் உள்ள எழுத்துக்கள் ஸமஸ்கிருத மொழி போலவே 4 எழுத்துக்கள் ஒவ்வொரு எழுத்திற்கும் உச்சரிக்கும் த்வனியாக உள்ளதைக் காணலாம். ஏன் என்றால் இவைகள்யாவும் ஸமஸ்கிருத மொழியையே தாயாகக் கொண்டுள்ளதாலேயே ஆகும்.

ஆங்கிலேயர் சொல்லும் GOD

கடவுள் என்ற சொல்லிலும்

| | | | |
|---|---|---|---|
| G | - | Genarate | என்று பிறப்பும் |
| O | - | Silent | பிரம்மமும் |
| D | - | Distrection | இறப்பும் என |

பிரம்மனால் படைக்கப்பட்ட ஜீவனின் பிறப்பும் - இறப்பும் மௌனமாக படைப்புக் கடவுளான பிரம்மனிடமே அடங்கி உள்ளது என்பதையே GOD என்று கடவுளை அழைக்கப்படும் சொல்லில் வைத்து பிரம்மபுத்திரனே அவர்கள் வழிபடும் தெய்வமாக வைத்துக் காட்டுகிறார்கள்.

இவ்விதம் தமிழிலும், ஆங்கிலத்திலும் கீதையை, திருக்குறளிலும், பைபிளிலும் படைத்து ஜீவன் வழி நடக்கும் வழியைக் கூறியபின்.

புத்தரான கௌதம் புத்தர் இந்தியாவிலேயே அவதரித்தாலும் அவரின் தத்வங்களை சீனா, ஜப்பான் ஜாவா, சுமத்திரா, இலங்கை என்று பல வெளிநாட்டில் இந்தியாவின் சமீபம் வஸிக்கும் மக்களிடையே நீதி வழி நடக்கும் போதனையாக கீதையின் சாரத்தை அவர்கள் மொழியில் தம்மபதம் என்ற சிறந்த நூலை படைத்து விடுகிறார் கண்ணன்.

நரஸிம்மாவதாரத்தின் போது சினத்திற்கு இடம் கொடுத்ததால் அவரே புத்தராக சாந்தஸ்வருபியாக வந்து அமைதித் தத்வத்தை புத்தராக போதிக்கிறார்.

நம்நாட்டில் அவதரித்து பிற நாட்டவரால் வழிபடும் தெய்வமாக புத்தரை வைத்து நீதிவழி நடக்கும் வழியை காட்டுகிறார்கள்.

இதன் பின் நபிகள் நாயகமாக சிவனே அவதாரம் செய்து உள்ளார். அப்படி இருந்தாலும் இவரிடமும் மூவர் அடங்கிய உள்ள தத்வம் உள்ளதால் பிரம்மனை மதிக்க சந்தனக் கூடும், மயில் பீலியும் இவர்கள் துதிக்கும் இஷ்டப் பொருள்களாக வைத்து நபிகள் நாயகம் கடைசியில் நதியில் ஸ்ரீராமர் ஸரயூநதியில் பிரவேசிக்கும் போது கடைசியாக யாவரையும் தன் வலது கரத்தை உயர்த்தி ஆசீர்வதித்தது போலவே தன் வலக்கையை மட்டும் உயர்த்தி நதியில் பிரவேசித்து இருவருக்கும் உள்ள ஒற்றுமையைக் காட்டியுள்ளார்கள்.

நபிகள் நாயகம் தன் வலக்கையை உயர்த்தி துக்கப்படும் நேரம் அல்ல, அல்ல என்று அசைத்ததையே அல்லா என்று கடவுளின் திருநாமமாக வைத்து கடவுளை அருபமாகவே வழிபடுகிறார்கள் முகமதியர்கள் அபயஹஸ்தமாக உள்ள கை கண்ணனான கோவிந்தனாக இருப்பதால் பகவான் கண்ணன் இவர்களுக்கு அரேபிய மொழியில் திருக்குரானை கீதையின் சாரமாக இயற்றித் தந்துள்ளார்.

இவ்விதம் கிருஸ்துவிடம் பிரம்ம ருபமாகவும், புத்தரிடம் விஷ்ணு ருபமாகவும், அல்லாவில் சிவ ருபமாகவும் இருந்து புதிதாகத்

தோன்றியுள்ள தேசங்களில் ஆட்சி தெய்வமாக அவர்கள் வணங்கும்படி வைத்து அங்கு புதிதாகத் தோன்றியுள்ள மொழிகளில் பைபிள், தம்மபதம், குரான் என ஜீவன் நல்வழிநடக்கும் மார்க்கத்தைக் காட்டியுள்ளளார்கள்.

கோகுலாஷ்டமிக்கும், குலாம்காதருக்கும் என்ன சம்பந்தம் என்று கூறுவதுண்டு.

உண்டு என்பதை கோகுலாஷ்டமியின் நாயகனான கண்ணன் குரானை இயற்றி கீதைக்கும், குரானுக்கும் சம்பந்தம் உண்டு என்பதை நிருபித்துள்ளார்.

அது மட்டும் அல்ல கிருஸ்துவான ஏசுவை தனக்கு உகந்த மாதமான மார்கழிக்கும், டிஸம்பருக்கும் ஒற்றுமையைத் தந்து புலப்படுத்தி மேரி மாதாவின் அவதாரம் தான் அவதரித்த ஆவணியான செப்டம்பரில் இணைத்து இருமதங்களிலும் தானே உள்ளதை ஜீவனுக்குக் காட்டுகிறார்.

புத்தர் நம் நாட்டிலேயே அவதரித்து உள்ளதால் ஜீவனுக்கு இந்த அவதாரத்திற்கு விளக்கம் தேவை இல்லை என்றாலும் வைகாசி விசாக நட்சத்திரத்தில் நரஸிம்மராக தோன்றிய அவதாரநாளின் மறுநாளே புத்தர் அவதாரன்மான புத்தபௌர்ணிமாவான வைகாசிமாதமாக வைத்து ஒற்றுமையைக் காட்டியுள்ளார்கள்.

திகம்பரராகவும் வந்து ஆசாபாசங்களை தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டியும், ஒட்டாமலும் வாழ்ந்து நிர்வாணம் அதாவது சுகம் + துக்கம் இரண்டையும் ஒன்றாகப் பாவிக்கும் மனத் தூய்மையுடன் வாழ வேண்டும் என உபதேசிக்கிறார்.

வாழ்க்கை இராமாயணம், மஹாபாரதம் போலவே இருக்கும் என அதனைத் தாங்களே நடித்தும் காட்டி பின் ஜீவன் அவைகளை கடக்கும் வழியையும் கீதையாக நீதிகளின் தத்வங்களை அடக்கிக் கூறி அதனைக் கலியில் புதிதாகத் தோன்றிய மொழிகளிலும் தானே பலரூபங்களில் வந்து கண்ணன் இயற்றித் தந்ததுடன் உலகில் உள்ள அனைவரும் ஒன்று பட்டவரே என்பதையும் போதித்துத் தந்த பின் மகாராஷ்டிர மாநிலத்தில் விடோபாவாக பாண்டுரங்க விட்டலாக அனைவரும் தன்னை தொட்டு வணங்கும் படியான முகூர்த்தமாக அமர்ந்து பக்தர்களுக்கு காட்ச்சி தருகிறார்.

இந்திய நாட்டிலும் வெளிநாட்டிலும் பலவித ரூபங்களிலும் அமர்ந்து அருட்கடாச்சம் செய்தபின் பூரியில் ஜகன்னாதனாக உருவம் மரத்தினால் அமைத்துக் கொண்டு அமர்கிறார்.

மரமாகிய வேப்பமரத்தில் இங்கு பூரியில் ஜகன்னாதர் தன் உருவத்தில் அமைத்துக் கொண்டதின் காரணம் காடு, நாடுகளில் மரமாக இருந்து ஜீவனுக்கு முக்கியமான நீரைத் தாங்கும் மேகங்களை வானத்தில் உருவாக்கி மழை நீரை பூமிக்குக் கொண்டு வந்து நீர் நிலயங்களை நிறையச் செய்து பயிர், பச்சைகளை செழிக்கச் செய்யும் பிரம்மன்

பலவித மூலிகைப் பொருள்களாகவும் இருந்து ஜீவனின் பிணிகளை போக்கும் மருந்தாக உள்ளதில் வேம்பே சிறந்த எளிய வைத்திய மூலிகை ஆகவும் நகரப் புறங்களிலும் கிடைக்கும்படி இருப்பதாலும் இதனையே தன் சரீரமாக அமைத்துக் கொண்டு ஆதிசேஷனான பலராமனை தன் சகோதாரரை ஒரு புறமும், சுமத்திரையான பார்வதியை சகோதரியாக நடுவிலும் அமரச் செய்து கொண்டு அருள் பாலிக்கிறார்.

சிவ + வைஷ்ணவ ரூபமாக இப்போது இருந்தாலும் ராமாவதாரத்தில் சரீர தத்வத்திலேயே இணைந்தும் அர்ஜீனனாகப் பிரிந்து செயல்படுவதால் அர்ஜீனன் மணந்த சுமத்திரை பார்வதி ரூபமாகவே இருப்பதாலேயே இவ்விதம் கண்ணன் ஜகன்னாதர் ரூபத்தில் வெளிப்படுத்துகிறார்.

பூரியில் தேர் மற்றத் தேர்களைப் போல் நிரந்தரமாக செய்யப்படாமல் தேர் சமயமே புதிதாக செய்யப்படுகிறது. தங்கத் துடைப்பத்தால் பூரி அரசர் அதாவது எந்த ராஜாவின் குடும்பத்தாரால் பூரியில் ஜகன்னாதர் அமரக்காரணமாக இருந்தார்களோ அந்த அரச பரம்பரையில் வந்த அரசரால் பூரி ரதோஸ்தவத்தன்று பெருக்கிரதத்தை சுத்தம் செய்யும் பணி செயல்படுத்தப்படுகிறது.

பெருக்கும் போது வெண்புஷ்பங்கள்ால் தூவப்படுகின்றன. பின் சந்தன நீர் தெளிக்கப் படுகிறது. மஞ்சள் அட்ச்சதை தூவப்படுகிறது. இவையாவும் சரீர தத்வமான தென்னைக்கும் சிருஷ்டிப் பணி செய்யும் பிரம்மனுக்கும், ஸரஸ்வதிக்கும் மதிப்பளிக்கப்படவே ஆகும். வேம்பு மருந்திற்க்கு முதல் ஸ்தானம் வகிப்பது போல பிரம்மனின் படைப்பில் சந்தனமரம் தெய்வப் பணிகளுக்கு முதன்மையாக இருப்பதால் சந்தன நீர் தெளிக்கப்பட்டு அட்ச்சதை பார்வதியை மதிக்க என்று ஜீவ சிருஷ்டியின் பணிகளையே இங்கு மதிக்கிறார் பூரி ஜகன்னாதாராக தன் விசாலமாக கண்களால் உலகத்தில் சகலவிதமான நடவடிக்கைகளையும் ஒவ்வொரு வினாடியும் கண்காணிக்கிறார்.

ஸ்நான வேதி உத்ஸவத்தின் போது ஜகன்னாதர் கறுப்பு யானைக்கும், பலராமர் வெள்ளையானைக்கும் மதிப்பளித்து அந்த வேஷங்களைத் தரித்துக் கொண்டு காட்ச்சி தருகிறார்கள்.

சிவ + வைஷ்ணவ ஒருமைப்பாட்டை இங்கு உணர்த்தியபின் நரநாராயணராக பத்ரியில் அமர்ந்து ஆதிசங்கரர் கையாலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டபின் குருவாயூரில் கண்ணனாக அமர்ந்து உள்ள குருவாயூர் அப்பன் அந்த தேச நம்பூதிரியைக் கொண்டே பத்ரிநாராயணனின் பூஜா விதிகளை செய்யும் படி வைத்து தெற்கையும் வடக்கையும் ஒன்று படுத்தி ஒற்றுமைப்படுத்துகிறார்.

பூரியில் ஆதிசங்கரரால் மடம் அமைத்து ஜகன்னாதரின் பூஜா விதிகளையும் அதைக்கடைப்பிடிக்கும் முறைகளையும் ஏற்படுத்தித் தந்தபின் புஷ்பகிரியில் பிரம்மனால் படைக்கப்பட்ட யாவும் புஷ்பங்களிலிருந்தே வெளிப்படுவதால் இந்தப் புஷ்பங்களை மதிக்க

இங்கு சங்கரமடம் அமைக்கிறார். ஸகல ஆலயங்களிலும் பிரம்மனின் மூலமான புஷ்பங்களை மாலையாகவும், அர்ச்சனைக்கும் பிரயோஜனப்படும்படி வைத்து மதிப்பளிக்கிறார்கள்.

இவ்விதம் மடங்களை அமைத்துக் கொண்டபின் துவாரகையில் கண்ணன் அரசாண்டு பின் பிரளய காலத்தில் மூழ்கிய பின் குருவாயூரில் கண்ணனாக அமர்ந்து பலசேத்திரங்களிலும் அதன் அதன் பணியின்படி அமர்ந்தபின் பஞ்சத் துவாரையாக அமைத்து அவைகளையும் கண்ணனின் பணிகள் சரிவரநடக்கும் பணிகளைக் கண்காணிக்க துவாரகையில் சங்கரமடம் ஆதி சங்கரர் தன் கையால் இவ்விதம் 6 மடங்களையும் அமைத்துத்தந்து சகல இடங்களிலும் பூஜா விதிகள் தவறாமல் நடத்தித்தர ஆசார்யர்களை நியமிக்கிறார்.

## பகவான் ஜீவனுக்கு பிறப்புகளை தான் எந்த எந்த ஸ்தலங்கள் மூலம் நடத்துகிறேன் என்று வரிசையாகக் கூறுகிறார்.

திருவேணி சங்கமம் வடக்கேயும் தெற்கு முனையான கன்யாகுமரியில் மூன்று கடல் கூடும் சங்கமமாக வைத்து சூரிய + சந்திரனின் உதய, அஸ்தமனம் ஒன்று இணைந்து காணும் ஸ்தலத்தில் அம்பாள் கன்னியாக இருந்து ஜீவனின் ஆரம்பத்தை துவக்கி வைக்கிறார்.

நாகர் கோயிலில் ஜீவனின் உடலில் புழு ரூபத்தில் உள்ள ஆதிசேஷன் இங்குள்ள புத்துமண்ணில் அதற் அதற்கேற்ப நிறம் அளித்து கும்பகோண மகா மகக்குளம் மூலம் சுதர்ஷன சக்ரத்தின் சுழற்சியில் சுழலச் செய்து ரூபம் அளித்து தாயின் கருவில் சிறு முட்டை ரூபத்தில் சேர்க்கப்படுகிறது.

சுதர்ஷன சக்ரத்தின் சுழற்சியில் அதற்கான புத்துமண் நாகர்கோயிலிலிருந்து அனுப்ப பட்டதை சங்கர நாராயணர் கோயிலில் உள்ள கோ + மதி அதாவது கோமாதாவான லச்சுமி பாலையும், மதி சந்திரனாகிய பிறையை சிரஸில் தரித்த சிவனின் சிரஸில் உள்ள கங்கா நீரை அம்பாளும் கலந்து அளிக்கப்படுவதை சேர்த்து கலவை கலந்து அளிக்கப்படுவது முக்கியமாகும்.

இவ்விதம் கலந்து நாகர் உட்புகுந்து சரீரம் உருவாக்கப்பட்டு கருப்பையில் உருவாகும் போது அதன் உரு முட்டை உருவான ஒரு பிண்ட ரூபத்திலேயே இருக்கிறது.

இதில் எந்த உருவும் 4 மாதம்வரை சரியான பிரமாணத்திற்கு வராத நிலையில் கரு கற்பரட்ச்சாம்பிகையால் காக்கப்படுகிறது.

இச்சமயம் சுஸீந்திரத்தில் 6வரும் இணைந்து அதாவது பிரம்மா, விஷ்ணு, சிவன், மூவரும் ஒரே கருவறையில் இருக்க அவர்கள் அருகிலேயே உள்ள லச்சுமி, பார்வதி ஸரஸ்வதி ஆக மூவரும் கூடிய உள்ள நிலையில் இவர்கள் 6வராக ஒன்று இணைந்து கர்ப்பத்தை வந்து அடைகிறார்கள். இதன் பின்பே கருவில் உள்ள குழந்தைக்கு அவயவங்கள் அமைகின்றன.

லச்சுமி பாலாக வெள்ளை அணுக்களாகவும் பார்வதி சிகப்பு அணுக்களாகவும் உள்ளார்கள். ஸரஸ்வதி எலும்புக்கூடாக அமர மண்ணான பூமிப் பிராட்டியின் புத்துமண் ரூபம் தாமரை நிறம் கொண்ட மாமிஸமாக எலும்புக் கூட்டை அணைத்துக் கொள்கிறது.

இவ்விதம் சரீரம் அமைந்ததும் காலின் மேல் பாகம் சிவலிங்க ரூபமாகவும் முழங்கால் முதல் பாதம் வரை வினாயக ரூபம் கொண்ட விஷ்ணுவாகவும் அமைந்து உடலைத் தாங்கும் சமயம் பிரம்மனால் அதற்குண்டான ஆவி தாயின் நெற்றி மூலம் முன்பே கருப்பையில் தாயுடன் உடலில் இணைந்துள்ள கொடி மூலம் கருவின் நெற்றி மூலம் உடலைச் சென்று அடைகிறது.

பிரளயகாலம் முடிந்து ஜீவ சிருஷ்டியை கும்ப்கோணத்திலிருந்து தொடங்குவதாலேயே அமிர்த கலஸமாகிய பூர்ணகும்பம் கும்பகோண சேத்திரத்திலேயே இறங்குகிறது. இங்கு சிவன் கும்பேஸ்வரராக இருக்கிறார்.

சாரங்கபாணியின் சூரியரதம் வைகுண்டத்திலிருந்து இறங்கி 6மாதம் உத்ரநாராயண வாஸலாகவும், 6 மாதம் தட்ச்சிணாய வாஸலாகவும் உள்ளது. சிருஷ்டியின் தத்வம் இங்கே அடங்கி உள்ளதால் சாரங்கபாணி பள்ளி கொண்ட அரங்கனாகவும் ஸப்தரிஷி, ஸப்த நதிகளான ஸப்தகன்னிகளும் கூடியவராக இருந்து சக்ரபாணியின் சக்ரத்தில் சுழன்று உருவாக்கப்படும் சிசுவிற்கு அதன் அதன் வம்ஸப் பிரிவுப்படி கங்கை நீருடன் அதன் பிரிவுப் படியும் நீரை கலக்க உதவுகிறார். சரீரத்தில் கும்பதத்வம் அடங்கி உள்ளதாலேயே கோயில் கோபுர கலஸங்கள் இந்த ரூபத்திலேயே அமைக்கபட்டுள்ளன.

திருநெல்வேலியில் அம்பாள் காந்திமதியாக இருந்து காந்தி + சூரியகாந்தி மதி +. சந்திரனின் குளுமை இரண்டையும் சமப்படுத்தி சரீரத்தை ஆயுள் உள்ளவரை இயக்குகிறாள்.

நெல்லை அப்பர் ஜீவன் உண்ணும் முக்கிய பயிரான நெல் முதலிய தானியங்களில் தாம்பர சத்தை ஊக்குவித்து ஜீவன் உடல் ஆரோக்கியம் குறையாமல் பார்த்துக் கொள்கிறார்.

சாதாரணமாகப் பார்க்கிறோம் தங்கபஸ்பம், வெள்ளிபஸ்பம் உடலுக்கு மெறு கூட்டுகிறது என்று அரசர் உண்ணும் தாம்பாளங்களின் நடுவில் தங்கம் பதிக்கப்பட்ட வெள்ளித் தட்டில் உணவை சூடாகச் சேர்த்து உணவுடன் அந்த சத்துச் சேர உண்டார்கள் என்பதை. இதற்கும் மேலானது தாம்பரம் தாம்பர பாத்திரத்தில் நீரி வைத்து குடிப்பதால்

உடல் ரோகம் நீங்கி ஆரோக்கியம் பெருகுகிறது. இதனாலேயே கோவில்களில் பெரும்பாலும் வெள்ளி, தங்கம் இதற்கும் மேலாக தாம்பர பாத்திரத்தில் துளஸி வில்வம் வைத்து மக்களுக்கு கொடுப்பது ஜீவன் உடல் ஆரோக்கியம் பெறவே ஆகும்.

கோயில் விக்ரகங்கள் பஞ்சலோகத்தில் செய்யப்பட்டு அபிசேஷ தீர்த்தம் ஜீவனுக்கு விசேஷமாக அளிக்கப்படுவது உடல் ஆரோக்கிய ஔசதம் மிதமாக கிடைக்கும்படி செய்வதாகும்.

இதையே நெல்லை அப்பர் அம்பாளான காந்திமதி ஜீவனுக்கு சூரிய + சந்திர வெப்பம் குளுமை மிதமான சமநிலைபடுத்தி அளிக்கும் பணிக்கு தாம்பர சத்தை அளித்து ஜீவன் உண்ணும் உணவுச் சத்தை சமநிலைப்படுத்தி அளிக்கிறார்.

காஞ்சீபுரத்தில் ஏகாம்பரேஸ்வர ஆலய மாமரத்தில் ஆத்மாவின் கல்யாண நலங்களை வைத்து வரதராஜப் பெருமாள் ஆலயத்தில் சிருஷ்டியின் மூலத்தை ஜீவனுக்கு தருகிறார்கள்.

முன்பே கூறியபடி தென்னைக்கும் தென்னையின் மட்டையும் கூடிய தேங்காயே ஆரம்பம் என்று சொன்னபடி கருவில் மூலத்தை தயார் செய்து வைத்த ரூபம் கருப்பையில் கருவுடன் கூடி தாயின் உடலுடன் இணைக்கப்பட்டு மரத்தில் மட்டையுடன் கூடிய தேங்காய் தொங்குவது போலவே அமைகிறது.

ஜீவனின் புத்துமண் பூமியிலிருந்தே சேகரிக்கப்பட்டு உருத் தரப்படுவதால் மேல் கூறிய விபரங்கள் சொல்லப் படுகிறது.

ஆத்மா லேசான பொருள் ஆவதால் ஆகாயம் அதாவது பிரம்ம லோகத்திலிருந்தே அதற்கான பலாபலனைக் கொண்டு பிரம்மலிபிப்படி தாயின் கூட்டை வந்து அடைகிறது. இதைக் கொண்டே பிரம்மா படைப்பின் அதிகாரி ஆகிறார்.

காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆலயத்தில் சூரிய + சந்திர மத்தியில் பல்லி இருப்பதைக் காட்டி சிருஷ்டி துடக்கம் தாயின் கருவிடம் ஒப்பிட்டு ஜீவனுக்குக் கூறுகிறார்கள்.

முதலில் புத்துமண் தேக அமைப்பில் சரீரம் புத்துபோல் அமைய அதில் ஆதிசேஷனகிய நாகர் குடியேற முட்டை போன்ற பிண்ட வடிவம் உருவாகிறது. இந்த மூலம் 1 மாத காலத்தில் பல்லிருபம் வருகிறது 2ம் மாதத்தில் பல்லிரூபம் தவளை ரூபமாக மாறுகிறது. 3ம் மாதம் குரங்கின் வடிவு கொண்டு பின் கருடரூபம் மாறி பின் இறகு கையுடன் இணைந்து மனித ரூபம் கிடைக்கிறது. இவையாவும் சுதர்ஷன சக்ரச் சுழற்சியின் மூலமே நடக்கிறது. இவையாவும் முடிந்த பின்பே ஆத்மா கூட்டை வந்து அடைகிறது. அதுவரை தாயின் வெப்பத்திலேயே வளர்கிறது.

இவையாவும் உண்மை என ஜீவனுக்கு தெளிவாகப் புலப்படுத்த பிறந்த குழந்தை 3ம் மாதம் வரை பாம்பு ரூபத்திற்கு பின் குப்புரக் கவிழ்ந்து நீஞ்சி பல்லி ரூபத்திற்கு, மதிப்பளிக்கிறது. தவழும்போது பின் கால் மண்டியிட்டு முன் கால் உயர்ந்து தவளை ரூபத்திற்கு மதிப்பளித்த பின் நடை வந்தபின் பலவிதக் குரும்புகள் செய்யும் போது வால் ஒன்று தான் இல்லை என்று குரங்கு ரூபத்திற்கும் மதிப்பளிகிறார்கள். சிலருக்கு மூக்கு பெரிதாக இருந்தால் கருடஆழ்வார் மூக்குப் போல் இருக்கு என்கிறோம் அந்த ரூபமும் சரீரத்தில் இணைந்து உள்ளதை அறியாமலேயே.

8 மாதக் குழந்தையாக இருக்கும் போது பெரியவர்கள் தன் மடியில் குழந்தையை உட்கார வைத்துக் கொண்டு காலை தரையில் ஊன்றச் செய்யும் போது குழந்தை காலைத் தரையில் ஊன்றி எழும்பிக் குதிக்கும். அப்போது யானை, யானை அழகர் யானை அழகரும் + சொக்கரும் ஏறும் யானை என்று கால் இடுப்பிலிருந்து சிவஸ்வரூபமும், முழங்காலிலிருந்து யானை முகத்தைக் கொண்டு துதிக்கை போலிருந்து பாதம் அமைந்து சிவ + விஷ்ணு இணைப்பை வினாயகர் ரூபத்தில் உள்ளபடி புலப்படுத்துகிறார்கள்.

இதையும் நம்பாத ஜீவனுக்கு யானைக்கால் வியாதி முத்தியவர்களுக்கு பாதம் யானையின் கால் போலவே உள்ளதைக் காட்டி நிரூபிக்கிறார்கள்.

ஆதிசேஷனாகிய நாகரை எல்லாத் தெய்வங்களும் மதிப்பளிக்கிறார்கள். ஆதிசேஷனை படுக்கையாக நாராயணரும், சிவன் தன் ஆபரணமாகவும், வினாயகர் பூணூல், அரைங்காள், கொலுசு என்றும் முருகன் திருவடியிலும் என எல்லாத் தெய்வங்களும் ஆதிசேஷனுக்கு மதிப்பு அளிப்பதுடன் அரச மரத்தடியில் நாகரைப் பிரதிஷ்டை செய்து வலம் வரும் பக்தர்களுக்கு குழந்தைச் செல்வம் அளிப்பதும் இதன் அடிப்படையே ஆகும்.

அரசுக்கும் வேம்புக்கும் திருமணம் செய்து அதன் அடியில் வினாயகருடன் கூடிய நாகரை பிரதிஷ்டை செய்வித்து வலம் வருவது மிகவும் விசேஷமாக இருப்பதின் காரணம் மும்மூர்த்தி கிருபையுடன் பிரம்மன் அருள் கிடைக்கவே ஆகும்.

இவ்விதம் சரீர தத்வத்தின் மூலமான நாகருக்கு மதிப்பளித்தபின் பல்லிக்கு காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆலயத்திலும் ஸ்ரீரெங்கம் வைகுண்ட வாசல் நுழையும் போது மேல் தளத்தில் ஆண் + பெண் ரூபமாக இருபல்லி ரூபத்திற்கும் மதிப்பளித்து ஜீவனை பிறப்பு முதல், மோட்ச்சம் வரை பாதுகாத்து அருள் கடாச்சமளிக்கிறோம் என்கிறார்கள்.

தவளை ரூபத்திற்கு மண்டுக மகரிஷி என்று ரிஷி ஸ்தானம் அளித்து மதிப்பளிக்கிறார்கள்.

குரங்கு ரூபத்திற்கு ஆஞ்சனேயராக ராமாயணத்தில் தூதுவனாக சிறந்த பணி ஆற்றச் செய்து அந்த ரூபத்திற்கு யாவரும் வணங்கும்

சிறந்த ஸ்தானம் உலகம் உள்ளவரை அளித்து மதிப்பளிக்கிறார்கள். ஆதியாக வினாயகரும், அந்தமாக ஆஞ்சனேயரும் மிருகருபத்தின் படி கௌரவிக்கப்படுவது இதனாலேயே ஆகும்.

கடைசியாக கருடரூபம் கையுடன் இணைக்கப்பட்டு இறக்கை செயல் படுவதை கைகளை விரித்து இறக்கை பறப்பது போல் செய்தால் புலனாகும்படி வைத்து கருடரூபத்திற்கு கல் கருடராக நாச்சியார் கோயிலில் மதிப்பதுடன் சகல ஆலயங்களிலும் கருடர் பகவான் முன்பாக அமர்ந்து ஸேவை சாதிக்கும் பாக்கியத்தை அளித்து மதிப்பை சதா தருகிறார்கள். நாச்சியார் கோயிலில் முதலில் கல்லில் கருடன் செதுக்கப்பட அது பறந்ததால் சிறகுகள் தரிக்கப்பட்டு கல் கருடனாக பூஜிக்கப் படுவதாக புராணம்.

இதில் ஜீவ சிருஷ்டியின் தத்வமே அடங்கி உள்ளது. கல்லிருந்து மண் நதி மூலம் கரைந்து புத்து மண்ணாகி ஜீவ சிருஷ்டி தொடங்குவதையும் கல்லே கடைசியாக கருடரூபம் அடைந்து மனிதருபம் அடைந்த வரலாற்றையே இங்கு இக்கல் கருடன் மூலம் ஜீவனுக்கு கூறுகிறார்கள்.

இங்கு இக்கல் கருடன் உத்ஸவ ஸமயம் நால்வரால் முதலில் தூக்கப்பட்டு பின் 8 பேராலும் பின் 16 பேராலும் தூக்கும் ஒரு பெரும் தத்வம் 4 தெய்வ ரூபத்தையும் பின் அஷ்டாச்சரத்தையும் பின் 16 வித சௌபாக்கியம் மூலம் பெருவாழ்வு வாழ வகையுமே ஜீவனுக்கு கூறுகிறார்கள்.

இவ்விதம் ஜீவனின் 5 ரூபங்கள் உள் அடங்கி இருப்பதையும் ஆரம்பமாகிய கரு முட்டை ரூபத்தில் உள் அடங்கி இருந்த 6 ரூபங்கள் வந்த பின்பு 7வதாக மனித ரூபம் வருவதாலேயே 7 பிறவி எனக் கூறப்படும் பொருள் ஆகும்.

இதை ஜீவனின் வெளிப்புற ரூபத்திலும் காட்டி உள்ளார்கள்.

ஸ்ரீமன் நாராயணனிடம் எல்லா தேவதைகளும் உள்ளார்கள் என்பதை பாதுகாஸகஸ்ரத்தில் 11வது ஸ்லோகம் தெளிவுபடக் கூறுகிறது.

பெருமாளின் இடப்புறம் சிவன் இருக்கிறார் என்னும் போது நாம் சிவனை நீக்கி பெருமாளை எவ்விதம் நமஸ்காரம் செய்ய முடியும்.

இதையே சரீர தத்வத்தில் வலப்பாகம் ஆணாகிய சிவமாகவும் இடப்பாகம் பெண்ணாகிய பார்வதி ரூபமும் இருப்பதாலேயே ராமர் கடைசியில் சரீர தத்வத்தில் அடங்கி உள்ள இந்த ரூபத்தைத் தரித்துக் காட்டுகிறார்.

முழங்கால் முதல் பாதம் வரை வினாயகரான விஷ்ணு ரூபம் உள்ளதாலேயே பெரியவர்கள், ஆசார்யர்கள், தெய்வங்களின் திருவடிக்கே முக்கியம் அளித்து வணங்கச் செய்துள்ளார்கள். சரீரத்திற்கு சிரஸ் பிரதானமாக இருந்தாலும் பாதத்தில் வணங்கி ஆசி பெருவதையே முக்கியம் அளிக்கப்படுவதின் காரணம் இதுவே.

இடுப்பு முதல் முழங்கால் வரை சிவலிங்கம் போல அமைந்து, முழங்கால் முதல் பாதம் வரை விஷ்ணு ரூபம் வைத்து சிவ - வைஷ்ணவ ஒருமைப்பாட்டைக் காட்டுகிறார்கள்.

இடுப்பு முதல் கழுத்து வரை ஆதிசேஷனின் 5 தலை ரூபத்தை வைத்து பஞ்சபூத வாஸலாக வைத்துள்ளார்கள்.

சென்றால் குடையாம், இருந்தால் சிம்மாஸனமாம், கிடந்தால் படுக்கை என எந்த ரூபத்தில் பகவான் இருந்தாலும் குடைபிடிப்பதால் ஹிருதயத்தில் பகவான் இருப்பதாலேயே ஆதிசேஷன் குடைபிடிக்கிறார் நம் சரீரத்திலும்.

வையம் தகளியாய், பாற்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காகச் செய்ய சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல் மாலை இடராழி நீங்குகவே என முதல் ஆழ்வார் கூறியபடி இந்த சரீரத்தில் ஜோதி ரூபத்தை வர்ணித்து புலப்படுத்துகிறார்.

நம் சரீர மார்பை உற்றுப் பார்த்தால் அகல் நடுவே தீபம் எரியும் தோற்றத்தை வெளிப்புறமே காணலாம்.

இவ்விதம் ஆத்ம ஜோதியை புலப்படுத்தியபின் எண் சாண் உடம்பில் சிரஸைப் பிரதானமாக வைத்து சரீரத்தை செயல்படுத்தும் விபரங்களைக் கூறுகிறார்கள்.

ஆதிசேஷன் பஞ்சபூதமாக சரீரத்தில் கழுத்துவரை செயல்பட அவர் சிரஸில் ஜீவனின் தலை தேங்காய் மட்டையுடன் கூடிய உருவாக அமர்ந்து சரீரத்துடன் இணைக்கப்படுகிறது. மட்டையின் நார்பாகம் நரம்பு மண்டலமாக ராகு, கேதுவின் மூலம் அமைந்து ரத்தம் பாயும் சரீர முக்கியமாக அமைக்கப்பட்டு செயல் படத்தொடங்குகிறது.

இதன் மூலம் ஹிருதயத் துடிப்பு இயங்கத் தொடங்குகிறது. பகவான் ஹிருதயத்தின் துடிப்பு ஓம் கார ரூபத்தில் செயல் படுத்த ஸ்ரீயாக முத்தேவியர் ஹிருதயத்தில் தாமரையின் மீது உள்ள அகல் விளக்கு ஜோதியின் மேல் அமர்ந்து ஹிருதய ரத்த நாளங்களை உயிர் உள்ளவரை செயல்படச் செய்கிறார்கள். இவ்விதம் இருப்பதால் காதுகளின் வெளிப்புறம் சக்ரம் போலவும், உள் அடுத்த பாகம் சங்கு ரூபத்திலும் அமைந்து பகவானை வணங்குகிறார்கள். அதற்கும் உட்பாகம் யானையின் காதுபோல் அமைந்து வினாயக ரூபத்தை உணர்த்தி அதனை நிருபிக்க காதைப் பிடித்துக் கொண்டு தோப்பு கரணம் மூலம் கால்வரை சரீரத்தை மடக்கி திருவடியையும் வினாயக ரூபத்துடன் இணைத்து பகவானை வணங்க வைக்கிறார்கள்.

மூக்கு ஓம் என்ற பிரணவ ரூபம் தலை கீழாக அமைத்து பிரணவ மூலம் மூவரும் இணைந்து ஜீவ்னை செயல் படுத்துகிறோம் என்று கூறியவர்கள்.

சிரஸிர்க்கு பிரதானமான கண்கள் சூரிய + சந்திர ரூபம் இணைந்து உள்ளதைக் காட்டுகிறார்கள்.

கறுப்பு + வெளுப்பு விழிகள் அம்மாவஸை + பௌர்ணமியை தன்வில் காட்டி சூரியனின் ஒளி கண்ணில் படுவதின் மூலம் கண பார்வை கிடைக்கும்படி செய்து சூரிய + சந்திர ரூபத்தை கண்ணின் மூலம் காட்டுகிறார்கள்.

இதை ஜீவன் உணர இரவில் கண்ணிற்கு இருட்டில் பார்வை கிடைப்பதில்லை கண்ணிருந்தும் குருடர்களாகவே இருக்கிறோம். தீப ஒளி கண்ணில் பட்டால் தான் கண் பார்வை கிடைக்கிறது.

இதன் பிறகு வாயே சிரஸின் முக்கிய வேலைகளைச் செய்கிறது. வாய் பேச, உணவை மென்று விழுங்கச் செய்து சரீரத்திற்கு வேண்டிய சத்துக்களைச் சேகரிக்க உதவுகிறது.

இந்த வாய் மேல்புற உதடு விஷ்ணுவாகவும், கீழ்புற உதடு சிவமாகவும் இருக்கிறது. உதடுகளின் ரூபமும் வில்லைப் போல அமைந்து காட்ச்சி தருகிறது. நாவிலிருந்து சொல்லும் வார்த்தைகள் அம்புடன் ஒப்பிடப்பட்டு இன் சொல் புஷ்பம் போல் இனிமையாகவும், சுடு சொல் அம்புதைத்த புண்போல் கடுமையாக துன்புறுத்துவதாகவும் உணரச் செய்கிறது.

சரீரத்தின் முக்கிய அங்கம் வகிக்கும் சிரஸின் ரூபங்களைச் சொன்ன பின் சரீரத்தின் நவத்துவாரங்குகளும் அதற்கான துவாரங்களை சின்ன ரூப எலிகளாலேயே அமைத்துத்தரப் படுகிறது. இதனாலேயே இந்தியாவில் எலிக்கும் கோயில் வைத்து பூஜிக்கப்படுவதுடன் வினயாகர் முஞ்சூரு ரூப எலியை தன் வாகனமாக ஏற்கிறார்.

சரீரத்தில் ஆதிசேஷன் இருப்பதின் அடையாளமாக நாகம் தன் தலையை விரித்துப் படம் எடுத்துக் காட்டுகிறது. ஏன் என்றால் ஜீவன் தலையை திருப்பி அசைக்க இந்த ரூபம் உதவுகிறது எனக் காட்டுகிறார்கள்.

வலக் கையின் ஐந்து விரல்களும் பகவானின் ரூபங்களைக் காட்டுகின்றன. வலக்கை நடுவிரல் விஷ்ணுவாகவும், ஆள்காட்டிவிரல் சிவமாகவும், மோதிரவிரல் பிரம்ம ரூபமாகவும் இருந்து சரீரப்பணிகளை ஒவ்வொரு வினாடியும் கவனிக்கிறார்கள். சுண்டு விரல் முருகனாகவும், கட்டைவிரல் வினயாகராகவும் இருந்து பிறப்பு முதல் இறப்புவரை சரீரத்தில் அமர்ந்து ஜீவனின் நல்ல, கெட்ட செய்கைகளின் கணக்கை எடுக்கிறார்கள். அந்த அந்த சரீரத்தில் இவ்விதம் இணைந்து செயல் பட்டாலும் அவர்கள் ஜீவனுக்கு மனத்தின் மூலம் ஒவ்வொரு வினாடியும் உபதேசித்தும் அதன் படிச் செயல்படுத்துவது ஜீவனே ஆகும்.

இதேபோல் இடக்கையில் நடுவிரல் லச்சுமியாகவும், ஆள்காட்டி விரல் பார்வதியாகவும், மோதிரவிரல் ஸரஸ்வதியாகவும் இருந்து செயல்படுகிறார்கள். சுண்டு விரல் வள்ளி, தேவயானையின் இணைப்பாகவும், கட்டைவிரல் சித்தி, புத்தி அம்ஸமாகவும்

உள்ளார்கள். இதனாலேயே வலப்பாகம் ஆண்மை நிறைந்த பாகமாகவும் இடப்பாகம் பெண்மை நிறைந்த பாகமாகவும் இருக்கிறது.

இடப்பாகம் தாய் தன் சேய்க்கு பிறந்தது முதல் ஐந்து வயது வரை வினாத் தெரியும் காலம் வரை செயல்படுவது போலவே இடக்கை ஜீவன் உயிர் உள்ள காலம் வரை ஒரு தாயாக தன் கடமைகளை செயல் படுத்துகிறது.

அதனால் நாம் வலப்பாகத்தை உயர்ந்ததாகவும் இடப்பாகத்தை தாழ்ந்ததாக நினைக்காமல் இருகரத்திற்கும் சமமதிப்பளிக்க வேண்டும் என்பதே அவர்கள் ஆவல்.

வலமும், இடமும் சேர்ந்தே செயல்படுகிறது. கையைக் கூப்பி மார்பின் மேல் வைத்துக் கூப்பும் போது ஜீவனின் உள்ளே உள்ள ஆத்மாவை வணங்குகிறோம். கையை கூப்பி பத்து விரல்களையும் சேர்த்து தலைக்கு மேல் கூப்பும் போது பகவானே இச்சரீரத்தை நற்செயல்களை செய்வித்து நற்பாதையில் நடத்திச் செல் என்று ஜீவன் பிரார்த்திக்கிறது.

ஜீவன் பிறப்பு ரகஸ்யங்களை புலனாக்கியபின் 10 வித தத்வங்களையும் உணர்ந்து நற்செயல்களை உணர்ந்து நற்பணிகளைச் செய்ய இராமாயண, மஹாபாரத இதிகாஸங்களை உணர்ந்து நடக்கும் மார்க்கத்தைக் காட்டி மற்ற அவதார தத்வங்களையும் எடுத்துக்கூறி சரீர தத்வங்களையும் புலனாக்கிய பின் கோயில்களில் நடக்கும் உத்ஸவ நோக்கமும் பண்டிகைகளில் அடங்கி இருக்கும் ரகஸ்யங்களையும் தெளிவாகக் கூறுகிறார்கள்.

## பிறப்பும், மோட்ச்சமும் ஸ்தலங்கள் மூலம் நடத்தப்படும் விபரம்.

இராமாயண சம்பந்தம் உடைய கலியில் கண்ணன் கோவிந்தனாக அமர்ந்து பத்மாவதியை திருமணம் செய்து கொண்டு தான் மலைமீதும், பத்மாவதியான தாமரைக்கு மதிப்பளித்து அவர்மேல் மங்காபுரத்தில் அமரச் செய்து இராமாயண சம்பந்தம் உடைய பூமிப்பிராட்டியான மண்ணிற்கு மதிப்பளிக்க ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் நந்தவனத்தில் துளஸிகள் அடர்ந்த வனத்தில் அவதரிக்கச் செய்கிறாள் ஆண்டாளாக.

கருடரே பெரியாழ்வாராக அவதாரம் செய்து பூமிப்பிராட்டியான ஆண்டாளை துளஸி வனத்தில் கண்டெடுத்து வளர்க்கிறார்.

குழந்தைப் பருவம் முதலே பக்திச் சூழ்நிலையில் வளர்ந்த ஆண்டாள் வடபத்ரஸாயியான சயனக் கோலத்தில் உள்ள நாராயணனைப் பூஜிக்கிறாள்.

பெரியாழ்வார் நந்தவனத்தலிருந்து வண்டு தீண்டி தேன் எடுக்கும் முன்பே மலர்களைக் கொய்து மாலை கட்டி வடபத்ரசாயி கோயிலில் பள்ளி கொண்டிருக்கும் நாராயணருக்கு சூட்டுவது வழக்கம்.

இம்மாலையை ஆண்டாள் தான் தரித்துக் கொண்டு அழகு பார்த்து கோயில் கிணற்றில் உள்ள நீரை கண்ணடியாகப் பாவித்து அதில் தன்னை மாலையுடன் பார்த்து மகிழ்ந்தபின் மாலையைக் குடலையில் வைத்து பகவானுக்கு அனுப்புவது வழக்கம்.

இம்மாலையை ஆண்டாள் தான் தரித்துக் கொண்டு அழகு பார்த்துக் கொடுத்த சமயம் அதில் தலைமுடி இருப்பதைக் கண்டு அம்மாலையை பகவானுக்கு சாத்தவில்லை. அன்று இரவு பகவான் அவருக்கு சொப்பனம் சாதித்து ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை தான் உகந்து அணிவேன் எனக்கூற அன்று முதல் ஆண்டாள் சூடிக் கொடுத்த சுடர் கொடி ஆகிறாள்.

1. இவ்விதம் ஆண்டாள் பூக்களுக்கு முதலிடம் கொடுப்பதில் உள்ள பொருள் பிரம்மா சிருஷ்டி பூவிலிருந்தே தொடங்குவதால் பூவிற்கு மதிப்பளித்து சகல ஆலயங்களிலும் பகவான் புஷ்பங்களுக்கு மதிப்புத் தருவதின் பொருளை ஜீவனுக்கு உணர்த்துகிறாள்.

2. மணப்பருவம் அடைந்த பின் பெரியாழ்வார் பெண்ணிற்கு வரன் தேட முற்படும் போது அதை ஆண்டாள் தடுத்து மணந்தால் ஸ்ரீரெங்க சேத்திரத்தில் பள்ளிக்கொண்டு இருக்கும் அரங்கனையே மணப்பேன் வேறு யாரையும் நான் மணாளனாக ஏற்க மாட்டேன் என உறுதியாகக் கூறிவிடுகிறாள்.

3. ஆண்டாள் தான் அணிந்த மாலையை கிணற்று நீரில் பார்த்ததின் உப்பொருள் பூ காயாகி, காய்கனியாகி, பூமி தானியங்கள் செழித்து நிரம்பி இருக்க நீரே பிரதானமாவதால் இந்த நீர் நிலைகள் என்றும் வற்றாமல் நிறைந்து இருக்க வருணபகவான் அருள் செய்ய வேண்டும் என ஜீவனுக்காக வேண்டி நிற்கிறாள்.

பின் வாரணமாயிரம் மூலம் தான் கல்யாணக் கோலமாக கனவு கண்டவற்றில் உள்ள பொருளை ஜீவனுக்கு கூறுகிறாள்.

மாப்பிள்ளை அழைப்பு விபரம் கூறியபின் கல்யாணத்தில் முதலில் மாப்பிள்ளை பரதேசிக் கோலம் என அமைத்துத் தந்துள்ளது. மணமக்கள் சூரியனின் குடையின் கீழ் 10 வித

நற்பண்புகளுடன் வாழ்ந்து 6வரின் கருணயும் பெற்று 16 நற்பலனையும் பெற அதன் வழி நடக்க காலிற்கு பாத ரட்ச்சை அணிவித்து கையில் ஊன்று கோலைக் கொடுப்பது ஜீவன் முதுமைப் பருவம் வரை இவைகளை அனுசரித்து வாழ வேண்டும் என உணர்த்துகிறார்கள்.

10 வித நற்பண்புள்ளதுடன் 6 வரின் கடாச்சமுடன் கூடி வாழ தாம்பூலத்துடன் தேங்காயை கையில் கொடுப்பது கூன் குருடு, செவிடு இல்லாத நல்ல ஆரோக்கியம் உள்ள மக்களைப் பெற்று வாழ வேண்டும் என்பதுடன் ஜீவ சிருஷ்டியில் தேங்காயே முக்கியமாதலால் இதனை மணமகன் கையில் வைத்து பரதேசம் அதாவது காசிக்கு போகும் மாப்பிளையை கங்கையின் பூர்ண ஆசி பெற்றபின் மணமகளுடன்ச் சேர்த்து வைக்கிறார்கள்.

மணம் முடிந்தபின் மைத்துனன் பொரி இட்டு தீவலம் வந்து அம்மி மிதிப்பது மணமக்கள் இன்ப, துன்பம் இரண்டையும் ஒன்றாகப் பாவித்து கல்லைப் போல் அசையாமல் தாங்கி ஏற்க வேண்டும் என்பதுடன் புத்து மண்ணின் ஆரம்ப நிலையான கல்லையும் போற்றி வழி நடக்கச் செய்கிறாள் ஆண்டாள்.

இவ்விதம் மணமக்களின் வாழ்க்கைத் தத்துவத்தை தான் கண்ட கனவாக வடித்துத் தந்தபின் தானே அரங்கனை அடைய திருப்பாவை என்னும் முத்தை தானே ஆழ்கடலில் குளித்து எடுத்துத் தருகிறாள் 4 வேதங்களின் சாரமாகவும் 12 ஆழ்வார்களின் பாசுரமாகிய 4 ஆயிரம் பிரபந்தத்தை உள் அடக்கியதுடன் ஆழ்வார்களையும் பாசுரங்கள் மூலம் போற்றுகிறாள் நாரயணனின் அவதாரங்களை உள் அடக்கிக் கூறியுள்ள மேன்மையை மனதில் கொண்டு கண்ணனுக்கு உகந்த மார்கழி மாதத்தின் முதல் நாளை தன் நோன்பிற்கு உகந்தநாளாக எடுத்துக் கொண்டு முதல் பாசுரத்திலேயே ஸ்ரீமந் நாராயணனே நமக்கு முதலும் மூலமுமான தெய்வம் அவனைச் சரண் அடைந்த எந்தக் காரியமும் தோல்வி அடையாது என்கிறாள்.

நாராயணன் என்னும் நாமத்தின் பொருளையும் நமக்கு உணர்த்துகிறாள்.

ஓம் - பிரணவஸ்வரூபமாக பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் ஒன்று இணைந்த ரூபத்தை உணர்ந்து

நமோ - நமஸ்கரிப்பவருக்கு

நா - நாத ரூபமாக எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளையும்

ரா - ராமாயணதத்வத்தையும் போதித்து

ய - ஸ்ரீயாகிய லச்சுமி மூலம் எம பயத்தைப் போக்கி

ணா - கிருஷ்ணானுபவம் அளித்து

ய - வைகுண்டம் அடைய

நம - நம்பிச் சரண் அடைந்த ஜீவனுக்கு நான் கட்டாயம் அளிக்கிறேன்

என்று நாராயணனின் திருநாமம் அளித்த விளக்கம் தந்தபின் அன்று இவ் உலகமளந்தாய் அடிபோற்றி என்ற மங்களாஸாஸனப் பாசுரத்தில் ஆண்டாள் ஸ்ரீமன் நாராயணனின் கையில் வேல் போற்றி என்று தைரியமாகக் கூறுகிறாள்.

சரீரதத்வத்திலும், பிரணவாகார ரூபத்திலும் அருவரும் இணைந்த ரூபம் உள்ளதால் வேலைக்கையில் கொடுக்கிறாள் எல்லாம் உன்னில் அடக்கம் என்று தெளிவாகக் கூறுகிறாள்.

ஆண்டாளின் அவதாரம் ஆடிப்புரம் அதே போல் அம்பாளின் அவதாரமும் திரு ஆடிப்பூரம். இவர்கள் அவதாரம் மூலம் இருவரின் இணைப்பைக் காட்டுகிறார்கள்.

பூமியே மண் நிறைந்த பூமிப்பிராட்டி அம்பாள் அதனில் உள்ள மலைக்கு அதிபதி. இவ்விதம் ஜீவனின் பிறப்பின் மூலமாக இருவரும் இணைந்தே செயல்படுவதை அம்பாள் பார்வதி மலையத்வஜனான பர்வதராஜனின் மகளாக மதிப்பளிக்கப்படுகிறாள். இவ்விதம் ஆண்டாளும், பார்வதியும் ஒன்றாக இருப்பதாலேயே மதுரை மீனாட்சி கையில் கிளியும் மரகதப்பச்சை நிறமும் கொண்டு இருக்கிறாள். ஆண்டாள் கையிலும் கிளி இவ்வித ஒற்றுமையுடன் அம்பாளின் திருவாடிப் பூரத்தன்று கண்ணாடி வளையலால் மாலை அணிவித்து அதனை சுமங்கலிகளுக்கு பிரஸாதமாக வழங்குகிறார்கள். கர்ப்பவதி 8 மாஸம் ஸ்ரீமந்தம் செய்யப்படும் போது கைநிறைய கண்ணாடி வளையல்களை அடுக்கி பிறக்கும் குழந்தை பூமிப்பிராட்டி, அம்பாள் அனுக்கிரகம் பெற்று சிரஞ்சீவியாகப் பிறக்க வேண்டும் எனப் பிரார்த்திக்கிறார்கள்.

இது எதனைக் குறிக்கிறது என்றால் பூமிப்பிராட்டிக்கு புத்துமண் ரூபத்திலும், அம்பாளை கண்ணாடி மண் ரூபத்திலும் பூமியின் மண் ரூபத்திற்கு மதிப்பளிக்கிறார்கள்.

இதனைக் கூறியபின் ஆண்டாள் ஸ்ரீரெங்கனாதருடன் ஸ்ரீரெங்கசேத்திரத்தில் ஐக்கியம் ஆகி அவனுடன் நித்தியவாஸம் செய்து இராமாயண தத்வதத்தின் மண் ரூபமாக சீதையிடம் இருந்த தத்வத்திற்கு அரங்கனால் மதிப்புப் பெற்று ஜீவனின் ஷேம நலன்களை அவனுடன் இணைந்திருந்து கண் காணிக்கிறாள் உபயநாச்சியாராக.

ஆழ்வார்கள், ஆண்டாள் முதலியவர்கள் இயற்றிய பாசுரங்கள் அத்யனம் செய்து பெருமாளை ஸேவிக்க அமைந்ததுடன் கீர்த்தனமாக பலராகங்களில் பாடும் படியாகவும் நடனத்திற்கும்

ஏற்றமாக அமைந்துள்ளது அவர்கள் ஜீவன்பால் கொண்டுள்ள அன்பே காரணம்.

63 நாயன் மார்கள் தோன்றி திருவாசகம், திருவந்தாதி, கந்தபுராணம், திருமூலம், சிவபுராணம் என்று தமிழில் போற்றி எழுதியபின் வடநாட்டில் சமஸ்கிருதமும் தென்னாட்டில் தமிழும் என இரு பிரிவாக இதிகாஸங்கள் எழுதப்பட்டபின்பே சிவம், வைஷ்ணவம் என இரு பிரிவாக மதம் அமைந்துவிட்டது.

இதே போல வைஷ்ணவத்தில் ஸமஸ்கிருத மொழியை பிரதானமாக்க கொண்டு வேதங்களை அத்யனம் செய்தவர்கள் வடகலையாகவும், தென்னாட்டில் தமிழைப் போற்றி தமிழ் பிரபந்தங்களை அத்யனம் செய்தவர்கள் தென்கலை என்றும் பிரிந்து விட்டனர். இவை எல்லாம் மொழியைக் கொண்டு ஏற்பட்ட கலாசாராங்களே மதப் பிரிவினைகளுக்கும் இடமளித்துவிட்டது.

கானம் நிருத்தியம் என்பன பகவானின் பணிகளை பூர்த்தி செய்வதற்காக ஜீவனும் உலகமும் வாழ பகவானாலேயே ஏற்படுத்தப்பட்டு அதை அவர்களே செய்து காட்டிய முறைப்படி ஜீவன் நடத்திவருகிறது.

இக்கலைகள் ஜீவனுக்கு பலன் அளிக்க சிதம்பரத்தில் ஆதிசேஷனே பதஞ்சலி முனிவராக அவதாரம் செய்து 108 கரணங்களை பரதசாஸ்த்திர முறைகளையும் ஏற்படுத்தி அதை சிதம்பர நடராஜரே தில்லையில் ஆடி ஈதராகிய ஆகாயத்தைக் கட்டுப்படுத்தும் இடத்தில் கனகசபையில் சிலா ரூபமாக அழியாமல் நிலைபெறச் செய்து வைத்துள்ளார்கள்.

திரேதாயுகத்தில் ராமர் கையால் விபீஷணாழ்வாரிடம் கொடுத்து ஸ்ரீரெங்கச் சேத்திரத்தில் வினாயகாரால் ஸ்தாபிக்கப்பட்ட பிரணவாகார ரூபத்துடன் 4 வேதங்களே 4 தங்கக் கலஸமாகக் கொண்ட ரெங்க விமானத்தின் கீழ் சயனக் கோலத்தில் துவாபரயுகத்திலிருந்து அழியாமல் நிலையாக பூலோக வைகுண்டமாக இருக்கும் கோயிலில் பெருமாள் அமர்ந்து துவாபரயுகத்தில் பல கண்டங்களாகப் பிரிந்து பல தேசமாகஇருக்கும் மக்களை ஒன்று படுத்தவும், இராமாயண காண்டத்தில் மங்களங்களை பூர்த்திசெய்யும் காலத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கும் சமயம்.

முதல் பணியாக ஆண்டாளின் ஐக்கியத்தை அளித்தபின் ஸ்ரீராமனுஜரை ஆதிசேஷனின் மற்றொரு அவதாரமாக ஸ்ரீபெரும்புதூரில் அவதரிக்கச் செய்து காஞ்சிவரதராஜர் மூலம் பல பணிகளை நிறைவேற்ற இவரை நியமிக்கிறார்.

காவேரியின் உற்பத்திஸ்தானமாக குடகு மலையிலிருந்து பாய்ந்து வரும் காவேரி மைசூரில் ஸ்ரீரெங்கபட்டணத்தில் ஸ்ரீரெங்கம்

போலவே கோயில் கொண்டுள்ள அரங்களை நமஸ்கரிக்கும் காவேரியின் அருகாமையிலேயே உள்ள திருநாராயணபுரத்திற்கு மதிப்பளிக்கிறார் இராமானுஜர்.

தேவலோகத்திலிருந்து பிரம்மனால் அளிக்கப்பட்ட வைரமுடி 107 திவ்ய தேசப் பெருமாளுக்கும் சூட்டிப்பார்த்து பொருந்தாமல் கடைசியில் திருநாராயணபுரத்தில் உள்ள உத்ஸவப் பெருமாளுக்கே பொருந்தியது. ஏன் என்றால் மோட்ச்சாத்தத்திற்கு முக்கிய அங்கம் வஹிக்கப்போவதால் இப்பெருமானே வைரமுடியை அணிந்து திருப்பதி ஸ்தானத்தைப் பெறுகிறார்.

இராமானுஜர் திருநாராயணாரின் உத்ஸவ மூர்த்திக்கு வைரக்கிரீடம் பொருந்தியதும் அவரை செல்லப்பிள்ளை என ஆலிங்கனம் செய்து கொள்கிறார்.

ஶ்ரீரெங்கத்தில் உள்ள அரங்கனின் உத்ஸவங்களின் நியமனங்களை முறைப்படி நடத்த அருகாமையில் உள்ள திருவெள்ளரை என்னும் திருத்தலத்தில் தங்கி இதற்கான வழிவகைகளைச் செய்கிறார்.

அவர் இந்த - இடத்தைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணம் கும்பகோணம் சாரங்க பாணி கோயிலைப் போலவே தட்ச்சணாயன, உத்திராயண என இருவாசல் ஜீவனின் சிருஷ்டியின் ஆரம்பஸ் ஸ்தலம் போலவே அமைந்து உள்ளதுடன் சிவஸ்தலமான திருவாணைக் கோயில் போலவே ஸ்தலத்தையும் அதேபோலவே இங்கும் அமைத்து சிவ - வைஷ்ணவ ஒருமைப்பாட்டு ஸ்தலமாக இருப்பதாலேயே இந்தஸ்தலத்தை தேர்ந்தெடுக்கிறார்.

திரு அரங்கனின் உத்ஸவ வழிமுறைகளை எழுதி அமைத்த பின் திருநாராயண சேத்திரத்தில் அவதரித்த ஒரு சன்நியாஸியை அஹோபிலத்தில் லஷ்சுமிநரஸிம்மராக பல ரூபங்களில் அமர்ந்திருக்கும் ஸ்தலத்தில் மடத்தை அமைத்து அதற்கு இவரை முதல் பட்ட ஜியராக பக்தி அழியாமல் காக்கப்படும் பணிக்கு அமர்த்துகிறார்.

இராமானுஜர் தான் அவதரித்த ஶ்ரீபெரம்புதூரில் தன் கையாலேயே தன்னுடைய மூன்று விக்ரகங்களைச் செய்து ஒன்றை அங்கு பிரதிஷ்டை செய்து திருநாராயணபுரத்தில் ஒரு முகூர்த்தத்தையும் கடைசியாக ஶ்ரீரெங்கசேத்திரத்தில் நித்திய உத்ஸவாதிகளை கண்காணிக்க தன்னுடைய சரீரத்தை என்றும் அழியாமல் அமரச்செய்து கொண்டு உத்ஸவ மூர்த்தியையும் பிரதிஷ்டை செய்கிறார் உடையவராக.

சைவ ஸ்தலங்களும் இது சமயம் 63 நாயன் மார்களால் முக்கியத்துவம் பெறுகின்றன, பாடல் பெற்ற 274 கோயில்கள் தேவாரம் பெற்ற கோயில்களாக சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் மதிப்படைகின்றனர்.

வைப்புத் தலமாக 200 திருக்கோயில்கள் தமிழ் நாட்டில் அமைந்துள்ளன.

திருப்புகழாக அருணகிரிநாதர் திருப்புகழ் பாடிப் போற்றிய முருகப் பெருமான் கோயில்கள் 100 என சிவஸ்தலங்கள் சிவாச்சார்யார்களால் புகழ் பெறுகின்றன.

பஞ்ச சபைக் கோயில்கள் திருவாலங்காடு இரத்தின சபையாலும், சிதம்பரம் கனகசபையாலும், மதுரை வெள்ளயம் பலத்தாலும், திருக்குற்றாலக்கோயில் சித்திரசபையாலும் இக்கோயிலகள் பிரகாசப்படுத்தப் படுகின்றன.

சங்கத் தமிழ் நூல்களும், நாலாயிரம் பிரபந்தங்களும் பிரபலமாகி வரும் சமயம் ஒன்று இணைந்திருந்த உலகம் பலதேசங்களாகப் பிரிந்திருந்த கண்டங்களில் கிருஸ்துவம், இஸ்லாமியம், புத்தம் என மதங்களும் தோன்றிவிட்டன.

ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனே யாவ ஜீவனிலும் இருப்பதால் மொழிகளும் ஆயிரமாகத் தோன்றிவிட்டன.

யாவ மொழிக்கும் சமஸ்கிருதமே மூலமாக இருந்தாலும் பிளவு பட்ட தேசங்களில் வசித்த ஜீவன்கள் அம்மொழியையே பல ரூபத்தில் பேசவும், எழுதவும் தொடங்கிவிட்டனர்.

பகவான் யாவ ரூபத்திலும் இருந்து செயல் படுவதால் இனி ஜீவனுக்கு என்ன செய்ய வேண்டும் என முற்படுகிறார்.

தான் தன்னுடைய சங்கு, சக்கரம், கதை, வைஜயந்திமாலை, பாதுகை முதலிய யாவற்றிற்கும் மதிப்பளித்து ஆதிசேஷனை ராமானுஜராக அவதாரம் செய்து பலநியமங்களை அனுஷ்டானத்திற்கு கொண்டு வந்த பின் தானே கலியில் கோவிந்தனாக திருமலையில் வீற்றிருந்து கலிபுருஷனாக செயல்படும் ஸ்ரீனிவாஸன் தானே ஸ்வர்ண கண்டாமணி மூலம் தூப்புலில் திவ்ய தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்து மக்களின் சேமநலன்களை வேதாந்த தேசிகராக செயல்படுகிறார்.

மணப் பருவத்தில் திருமங்கை என்ற மங்கையை பெற்றோர்கள் மண முடித்து வைக்கிறார்கள். திருமங்கை மன்னன் திருவரங்கத்தில் பெருமாள் கோயில் திருப்பணிகளை களவாடியும் பூர்த்தி செய்கிறார். இவரை சோதிக்க.

பகவானே பிராட்டியுடன் மணக்கோலத்தில் கானகத்தின் நடுவே வரும் போது திருமங்கை மன்னன் பகவானை வழிமரித்து சகல ஆபரணங்களையும் களவாடி கடைசியில் திருப்பாதத்தில் அணிந்திருந்த ஆபரணத்தை கழட்ட முடியாமல் பல்லால் கடித்து இழுக்க முயற்சி செய்யும் போது பகவானின் நிஜரூபத்தை உணர்ந்து மெய்சிலிர்க்கிறார் பச்சைக் கற்பூர வாஸனை கண்டு.

அப்பேர்பட்ட கலியனான திருமங்கை மன்னனையே திருவேங்கடமுடையானான வேதாந்ததேசிகர் அவருடைய பணியைப் போற்ற அவரையே மங்கை என்ற பெண் ரூபத்தில் மனைவியாக ஏற்கிறார்.

இது மட்டும் அல்ல திருவஹீந்திபுரத்தில் தங்கி தேவாதிராஜனின் திருப்பணிகளையும் ஹேமாம்புஜத்தாயாரின் மகிமையை மேற்கொண்டு ஆதிசேஷனான நாகருக்கு கிணறு அமைத்து அந்த நீருக்கு மருத்துவ குணத்தை எடுத்துச் சொல்லி கருடனை மதிக்க கருட நதியை நிர்மானித்து புத்தியின் அதிபதியாக ஸ்யம்பூவாகத் தோன்றிய ஹயககிரீவனைப் பிரதிஷ்டை செய்த தேசிகருக்கு் தேவாதிராஜனே திருக்குமாரனாக அவதரிக்கிறார் வரதராஜன் என்ற திருநாமம் கொண்டு.

ஜீவனுக்கு பிரயோஜனமான 116க்கும் மேற்பட்ட ஸ்லோகங்களையும் இயற்றித் தந்ததில் கோதாஸ்துதியும், ஸ்ரீஸ்துதியும, பூஸ்துதியும் பகவானாலேயே இம்மூவரையும் புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்த ஸ்துதியாகும்.

நம்மாழ்வார் பகவானின் திருவடியான பாதுகையே ஆவதால் அவரைப் புகழ்ந்து ஒரே இரவில் 1000 ஸ்லோகங்களை பாதுகாஸகஸ்ரம் ஸ்தோத்திரம் செய்ததின் மகிமைக்கு அளவே இல்லை.

இவர் அவதரித்த சமயத்தில் வெளிகண்டத்திலிருந்து முகமதிய மக்கள் இந்தியாவில் பிரவேசிக்க படையெடுத்து வந்து பல தொல்லைகள் மக்களுக்கும், கோயில் சிலைகளுக்கும் மிகவும் கொடுமையாக செய்து வந்தனர்.

இதில் ஸ்ரீரெங்கசேத்திரம் மட்டும் அல்ல பல கோயில் விக்ரஹங்களையும் கொள்ளையிட்டு கோயில் சிற்பங்களையும் உடைத்து வந்தனர்.

அரங்கனின் விக்ரஹம் காணாமல் போனதும் கோயில் சம்பிரதாயங்களுக்கு விக்னம் ஏற்பட்டது.

டில்லியை அது சமயம் ஆண்டுவந்த முகமதிய அரசனின் அரண்மனையில் பல விக்ரஹங்கள் குவிந்திருந்தன. அதிலிந்து ஒரு விக்ரஹத்தை எடுத்து அரசனின் மகள் மிக அன்புடன் அலங்காரங்கள் செய்து பூஜித்து வந்தாள்.

கோயிலில் அரங்கனைத் தேடி பல திசைகளிலும் சுற்றி வந்தவர்கள் ஒரு வண்ணான் தோய்த்த வஸ்திரத்தில் அரங்கனின் கஸ்தூரியுடன் கூடிய் பரிமள வாஸனை வருவதைக் கண்டு அவனிடம் இவ்வஸ்திரங்களை யார் சலவைக்குப் போடுகிறார்கள் எனக் கேட்க அவன் டில்லி பாதுஷாவின் அரண்மணையிலிருந்து

என்று சொல்ல அவர்கள் டில்லி பாதுஷாவைச் சந்தித்துக் கேட்கிறார்கள். அவர் தான் குவித்து வைத்திருக்கும் விக்ரகக் குவியலைக் காட்டியும் அதில் கிடைக்காமல் மனம் வருந்தி திரும்பும் சமயம் பாதுஷாவின் மகள் கையில் விக்ரஹம் இருக்கக் கண்டு அதனை மிகவும் பிரயாசையுடன் அவளிடம் இருந்து பாதுஷாவின் அனுமதியுடன். திரும்பப் பெற்று வருகிறார்கள்.

அவர்கள் அதனை பெற்றுத் திரும்பியதும் பாதுஷாவின் மகள் அரங்கனைப் பிரிந்து வாழத்தன்னால் முடியாது எனக்கூறி குதிரையில் அரங்கனைத் தொடர்ந்து வருகிறாள்.

அவள் பின் தொடர்ந்து வருவதைக் கண்டு சிப்பந்திகள் அதிவிரைவாக ஸ்ரீரெங்கத்தை அடைந்து கோயில் உள்ளே சென்று விடுகிறார்கள்.

பின் தொடர்ந்து வந்த பீபி கோயில் வாஸலை அடைந்து அப்படியே மூர்ச்சித்து வாஸலில் சரிந்து விழுகிறாள்.

அரங்கனிடமிருந்து அசரீரியாக நான் துல்கநாச்சியாராக அவளை ஐக்கியம் செய்து கொண்டு விட்டேன், அதனின் நினைவாக நான் உடுத்திக்களைந்த பீதகவாடை தீர்த்தம் முக்கிய இடம் பெறவேண்டும் எனக் கூறி மறைந்தார்.

இச்சம்பவம் நடந்ததின் மூலக் காரணம் ராமாயணத்தில் சீதையின் சரீரத்தில் கங்கையாக இருந்த நீளாதேவிக்கு சிவஸ் சம்பரதாயத்தைப் போற்றி ராமர் கையாலேயே காசியில் கங்கைக்கும் தங்கச் சிலா ரூபத்தில் அன்ன பூரணிக்கும் மதிப்பளிப்பவர்கள் ஸ்ரீமன் நாராயணனாக ராமாயண காலத்திலேயே பூலோக வைகுண்டமாக ராமரால் அளிக்கப்பட்ட ஸ்ரீரெங்கசேத்திரத்தில் விஷ்ணுருபமாக நீளாதேவியான கங்கைக்கும் மண்ருபமாக பூமிப்பிராட்டிக்கும் ஐக்கியம் அளித்து மதிப்பளிக்கிறார்கள்.

ஜீவனுக்கு இதன் சாட்ச்சியாக வண்ணார் குலத்தவரால் பிரிக்கப்பட்ட சீதா, ராமரின் பிரிவை வண்ணார் குலத்தவரால் பீதகவாடை வஸ்திர இணைப்பை வைத்து இதன் நிஜ ரூபத்தை வெளிப்படுத்துகிறார்கள்.

ஸ்ரீரெங்கத்தில் பூமிப்பிராட்டியையும் நீளாதேவியையும் தன்னில் ஐக்கியம் செய்து கொண்டு இருவரையும் உத்ஸவமூர்த்தியான நாச்சியாராக அந்தஸ்தளித்து இவர்கள் துணையுடன் ஜீவனுக்கான பணியைத் தொடங்கிகறார்.

இவருடன் மோட்ச்சார்த்தமாக சம்பந்தப்பட்ட திருநாராயணப்புரத்திலும் அதே போல ஒரு சம்பவத்தை நடத்தி திருநாராயணர் திருவடியிலும் துலுக்க நாச்சியார் ஐக்கியமாகி உள்ள கோலத்தை வைத்துள்ளார்கள்.

இவ்விரு சம்பவத்திற்கும் நீளாதேவியே துலுக்க வம்ஸத்தில் பிறந்து இவ்விரு பணியிலும் துலுக்கநாச்சியாராக இருந்து ஐக்கியமாகி உள்ளது அரங்கனிடம் இருப்பது நீரால் உலகை சதா வாழவைக்கவும் திருநாராயணபுரத்தில் இருப்பது ஜீவனின் மோட்ச்சமார்கத்தைக் காட்டவும் என இரு ரூபத்தில் உள்ளார். இதற்கு துலுக்கநாச்சியார் என ரூபம் வைத்துள்ளது. இருவரும் நீளாதேவியான கங்கை எனக் காட்டவே.

இதுதவிர நீளாதேவி துலுக்கவம்ஸத்தில் வந்துள்ளது துலுக்கரும் நம் வம்ஸத்தவரே என நிருபிக்கவே ஆகும்.

இதனாலேயே அரங்கனும் காலை லுங்கிகட்டி ரொட்டி, வெண்ணை உண்டு நிருபிக்கிறார்.

கர்நாடகாவில் கன்னட மொழி தோன்றியதும் மத்வாச்சாரியார் மூலம் உடுப்பியில் துவாரகையில் ருக்குமணியின் கையால் பூஜிக்கப்பட்ட கண்ணனை (சாளக்கிராம) பிரதிஷ்டை செய்து வைத்து மத்வ குலத்திற்கு பெருமை சேர்க்கிறார். கண்ணன் கையில் மத்துடன் இருப்பது விசேஷம். திரௌபதியே மத்தாக சரீர தத்வத்தில் இருப்பதாலேயே மஹாபாரதத்தில் பஞ்சபூததத்வமான பஞ்சபாண்டவருக்கு திரௌபதி மனைவி ஸ்தானம் வகித்து சரீரதத்துவத்தில் மத்தாக இருந்து ஐந்து பிரிவையும் கடைந்து அனுப்பும் ரூபத்தில் விளக்கப்படுகிறது.

இக்குலத்தில் தானே ராகவேந்திரராக அவதாரம் செய்து இராமாயண, மஹாபாரத நாயகர்களுக்கு மதிப்பளிக்கும் பலசெயல்களைச் செய்து கோதாவரி தீர்த்தத்தில் தன் பிருந்தாவனத்தை அமைத்துக் கொண்டு மக்களுக்கு கூப்பிட்ட குரலுக்கு ஓடிவந்து கிருபை செய்யும் ஜீவனுக்கான சேமப் பணியை ஏற்கிறார்.

நாரதரே புறந்தரதாஸராக அவதாரம் செய்து கண்ணன் மேலும் நாராயணர் மேலும் பல கீர்த்தனைகளை இயற்றி சங்கீதத்தின் மூலம் பகவானை துதிக்கும் வழிகளை வகுத்துதருகிறார் கன்னடத்தில்.

இராமாயண காவ்ய நாயகியான சீதையின் பணிகள் நிறைவேறியபின் திருவஹீந்திபுரத்தில் வேதாந்ததேசிகர் வந்து அமர்ந்து மேலும் பகவானின் பணிகளைக் கவனிக்கிறார். இச்சமயம் ஒரு போட்டிக்காக தன் கையாலேயே தன் விக்ரஹத்தைச் செய்து போட்டியில் ஜெயித்தபின் தன் சரீரத்துடன் அந்த விக்ரஹத்தை ஒற்றி திருவஹீந்திபுரத்திலேயே தெய்வநாயகனான தேவனாதன் திருக்கோயிலிலேயே பிரதிஷ்டை செய்கிறார்.

துலுக்கர்கள் படையெடுப்பால் இராமானுஜர் வகுத்துத்தந்த ஸ்தல உத்ஸவ சம்பிரதாயங்கள் ஸ்தம்பித்து இருந்ததால் திரும்ப

ஸ்ரீரெங்கம் வந்து இராமானுஜர் வகுத்துத்தந்த முறைகள் தவறாமல் அதேவழி நடத்திக் கொடுக்கிறார். இது சமயம் கம்பரால் தமிழில் ராமாயணம் இயற்றப்பட்டு ஸ்ரீலச்சுமி நரஸிம்மரால் தாயார் ஸன்னதி முன் மண்டபத்தில் அரங்கேற்றம் ஆகி அங்கீகரிக்கப்பட்ட இடத்தில் அருகிலேயே தன் ஸன்னதியையும் நிர்மாணித்தபின் திரும்ப திருவஹீந்திபுரம் வருகிறார்.

இங்கு ஒன்று கவனிக்க வேண்டும் இராமாயண காலத்திற்கு முன்பே லச்சுமி நரஸிம்மர் பூலோக வைகுண்டமாக அமையப் போகும் ஸ்தலத்தில் சிங்கப்பெருமாள் கோவிலில் வந்து அமர்ந்தவர். அப்பேர்பட்ட நரஸிம்மராலேயே கம்பராமாயணம் அங்கீகரிக்கப்படுவது பெரும் விசேஷம் அதனுடன் இராமாயண மங்கள காண்டத்தை இயற்றவே திருமலையில் ஸ்ரீனிவாஸர் திருவேங்கட முடையானின் கண்டாமணியாக அவதரித்து வேதாந்ததேசிகராக வந்து இராமாயண சகலப்பணிகளையும் பூர்த்திசெய்து ஸ்ரீரெங்கத்தில் இராமானுஜர் உடையராகவும் நித்தியவாஸம் செய்யும் ஸ்ரீரெங்கத்திலேயே தாயார் ஸன்னிதி முன் அமர்ந்து உள்ளது மிகமிக விசேஷமாகும்.

தேசிகர் திருவஹீந்திபுரத்திற்கே திரும்ப வருவதின் காரணம் ஆதிசேஷனே நிர்மாணித்த ஸ்தலம் ஆவதால் ஆகும். ஆதிசேஷன் பாதாள கங்கை தீர்த்தத்தையும் கருடன் விரஜாநதி தீர்த்தத்தையும் தேவனதனுக்கு ஸமர்ப்பித்த ஸ்தலம் திருவஹீந்திபுரம் தேவனதப் பெருமாள் நெற்றியில் கண்ணுடன் பிரம்மா, விஷ்ணு சிவன் மூவரும் கூடிய ரூபத்துடன் ஸேவை சாதிப்பது சிவ - வைஷ்ணவ ரூபம் தன்னில் அடங்கி உள்ளதைக் காட்டவே ஆகும். அப்பேர்பட்ட தேவனாதனுக்கு ஆதிசேஷன் குடைபிடித்தபடி பாதாள கங்கை தீர்த்தம் சேஷ தீர்த்தமாக திருமஞ்னம் செய்விக்கப்பட்டு பிணி நீக்கும் நீராக மதிப்புப் பெறுகிறது.

ஜீவனின் மூலமான ஆதிசேஷனும் முடிவான கருடனும் இருப்பதால் ஜீவனுக்கு வேண்டிய யாவும் இங்கு நிறைந்த இந்த ஸ்தலத்தை ஸ்ரீனிவாஸரின் ஸ்வர்ணகண்டாமணி ரூபத்தில் வந்திருக்கும் வேதாந்த தேசிகரான ஸ்ரீனிவாஸர் தேர்ந்தெடுத்து அமர்கிறார். இங்கு 40 வருஷம் வாஸம் செய்து ஜீவனுக்கு பிரயோஜனமான 160க்கும் மேற்பட்ட பல ஸ்லோகங்களை இயற்றித் தருகிறார். ஜீவன் ஆரோக்கியத்துடன் இருந்தால் மட்டும் போதாது என்று ஹயக்ரீவரை ஔஷதகிரி ஸ்வயம் பூவாகத் தோன்றியவரை ஜீவன் எப்போதும் புத்திவந்தராக கல்வி ஞானத்துடன் இருக்கப் பிரார்த்தித்து கரையேற்றம் மார்க்கத்தையும் காட்டியும் பின் எக்காரணத்திற்காக திருமலையிலிருந்து வந்தாரோ அங்கேயே கண்டாமணியாக மாரி அந்தர்தியானதம் ஆகிவிடுகிறார்.

ஆதிசேஷன் இராமானுஜராக வந்தது போலவே மணவாள மாமுனிகளும் ஸ்ரீரெங்கத்தில் புத்து மண்ணிலிருந்து தோன்றி புத்து மண்ணிலிருந்து ஜீவனின் தொடக்கம் என்பதை உணர்த்தி ஸ்ரீரெங்கநாதரே இந்த ரூபத்தில் வந்து ஜீவனை சிரஞ்சீவியாக வைக்கும் பணியில் ஈடுபடுகிறார்.

திருப்பதிப் பெருமாளே வேதாந்ததேசிகராக வந்து திருவஹீந்திரபுரத்தில் ஆதிசேஷன், கருடர், ஹயக்கிரீவர் ஆகிய ஜீவதத்வத்திற்கு முக்கியத்துவம் அளிக்கும் ஸ்தலத்தில் மணவாள மாமுனியாக ஸ்ரீரெங்கநாதரே இந்த சேத்திரத்தில் வந்து தங்கி மதிப்பளிக்கிறார்.

ஸ்ரீரெங்கசேத்திரத்தை அடுத்து திருவஹீந்திபுரம் ஜீவனின் சிருஷ்டித் தத்துவத்துடன் ஜீவனின் ஆரோக்கியம், புத்தி, ஞானம் யாவற்றிற்கும் முக்கியத்துவம் அளிப்பவர்களாக ஹேமாபுஜத்ததாயாரும், வேதனாதப் பெருமாளும் இணைந்து செயல்படுகிறார்கள்.

பிரணவாகார ரூபவிமானத்தின் மூலம் மூவரும் இணைந்தே உள்ளோம் என்ற தத்துவத்தை கூறும் அரங்கன் இங்கு தேவனாதனாக மூவரும் இணைத்து ஒருவராக உள்ளதே நெற்றியில் கண்ணுடன் ஸேவை சாதித்து சிவ - வைஷ்ணவ ஒற்றுமையை கூறும் புண்ணிய சேத்திரமாக விளங்க வைக்கிறார்கள்.

உலகிற்கு மூலமாக கலியில் ஸ்ரீனிவாஸராக வந்து அமர்ந்திருக்கும் கண்ணனும், துவாபரயுகத்தில் வைகுண்டத்தில் உள்ளது போலவே ஸ்ரீரெங்கத்தில் வந்து அமர்ந்துள்ள அரங்கனும் ஜீவனுக்காக கூறி உள்ளதை ஏற்று நடந்தால், உலகில் நன்மையே நிறைந்திருக்கும்.

பக்திக்கு அஹோபிலத்தில் லஷ்மிநரஸிம்மரை அமர்த்தி பக்தர்களுக்கு ஆசார்யர் மூலம் மோட்ச்சம் அளிக்கும் மடத்தை அமைத்து ஆசாரியரையும் அமைத்தது போல எள் மூலம் கிடைக்கும் நல்லெண்ணை ஜீவனுக்கு எல்லாவிதத்திலும் சிறந்த ஔஷதமாக இருப்பதை வானமாமலையில் ஆசாரிய ஜீயரை மணவாள மாமுனிகளால் நியமித்துத் தரப்பட்டு தோத்தாரிநாதப் பெருமாள் நல்லெண்ணைக்கு கிணறு அமைத்து அதைப் பக்தர்களுக்கு மருந்தாக அளித்து ஜீவனுக்கு பிரயோஜனமான எண்ணைக்கு மதிப்பளிக்கிறார்கள்.

கசப்பிற்கு வேம்பிலும், துவர்ப்பிற்கும் மதிப்பளிப்பவர்கள் காரத்திற்கு எங்கும் மதிப்புத் தராததால் கோபம் என்பதை காரமான வார்த்தை எனப் பிரித்துவிடுகிறார்கள்.

சரீர தத்வத்தில் நாகர், பல்லி, தவளை, குரங்கு, கருடன் என ரூபத்திற்கு பிறந்த குழந்தை மூலமே மதிப்பளிப்பதுடன் ஸ்தலங்களிலும் தவளையைத் தவிர மதிப்பு அளிக்கிறார்கள்.

தவளைக்கு மண்டுகமென மகரிஷி மூலமே தனிப்பட மதிப்பளிக்கிறார்கள். அதாவது நாகருக்கு ஆதிசேஷனாக, பல்லிக்கு காஞ்சீபுரத்திலும், ஸ்ரீரெங்கத்திலும் கோயில்களில் மதிப்பு உயர்ந்த ஸ்தானத்தில் அளிக்கப்படுகிறது. குரங்கு ரூபத்திற்கு ராமாயண கதாநாயகனாக ஆஞ்சனேயருக்கு உலகம் உள்ளவரை மதிப்பு. கருடரூபத்திற்கு கருடாழ்வாராக கோயில்களில் மதிப்புத் தருவதுடன் கல்கருடனாக நாச்சியார் கோயிலில் மதிப்பு என கோயில்களில் சரீர தத்வத்திற்கு மதிப்புத் தருபவர்கள் மண்டுக மகரிஷி எனத் தவளை ரூபத்திற்கு ரிஷியாகவே மதிப்பளிக்கிறார்கள்.

பகவானுக்காக உதவிய ஒவ்வொரு பொருளுக்கும், ஜீவனுக்கும் மதிப்பளிப்பதுபோல நாகரூபத்தில் சிரஸில் படமாக உள்ளபோது உள் வளைந்த ரூபத்தை திருமண்காப்பாக சிரஸில் ஜீவன் திருமண், ஸ்ரீசூர்ணமாக ரத்ன நிரத்தையும் இடும்படி வைத்து அதனை மதிக்க பௌண்டரீகபுர ஆஸ்ரமத்தை அமைத்து பகவானை ஆராதிக்கும் ஆஸ்ரம ஜீவரை அமைத்துத் தந்துள்ளார்கள்.

வடகலாச்சாரம், தென்கலாச்சாரம் என ஸமஸ்கிருத, தமிழ் மொழிக்காக திசையை ஒட்டி வடகலை, தென்கலை என்ற பிரிவு ஏற்பட்டாலும் பக்தர்கள் திருமண்காப்பில் இப்பிரிவை ஏற்படுத்தி அதன் மூலம் மதத்தில் பிளவு ஏற்படத்திக் கொள்வது தவறாகும்.

காஞ்சியில் வடகலை நாமத்திற்கு மதிப்புத்தருவது ஸமஸ்கிருத வேதங்களை அழியாமல் காக்க என்றும் ஸ்ரீரெங்கத்தில் பெருமாள் தென்கலை நாமத்திற்கு மதிப்பளிப்பது ஆழ்வார்கள் இயற்றிய நாலாயிரப் பிரபந்தம் அழியாமல் காக்கவே தவிர பகைமைக்கு அல்ல.

இவ்விதம் பக்தி, ஆகாரம் மூலம் ஆரோக்கியம் தரும் எண்ணை, கரும்பு, உப்பு இவைகளைப் போற்றி பௌண்ட ரீகமாக திருமண்காப்பு ஆகியவற்றிற்கு மதிப்பளித்து ஜீவனை ரட்ச்சிக்கும். ஆச்ரமம் அமைத்து ஜீயர்களை ஏற்படுத்திய பின் திருவடியான பாதுகையைப் போற்றி நம்மாழ்வாராக அவதரித்தவரை வேதாந்ததேசிகராக தாங்களே 1000 பாசுரங்கங்கள் மூலம் பெருமைப்படுத்தியதுடன் ஸ்ரீரெங்கம் கோயிலின் பாரம்பர்யத்தை போற்றி உத்ஸவாதிகளை கிரமமாக கவனிக்க கோயிலுக்கு ஒரு ஜீயரையும் திருவடியான பாதுகையை சதா போற்ற அதற்கு ஆண்டவன் ஆஸ்ரமத்தை அமைத்து அதற்கும் ஒரு ஜீயரை நியமித்து ஜீவனை நற்செயலில் ஈடுபடுத்தும் மார்க்கத்தை அளிக்கும் ஆசார்யர்களாக நியமிக்கிறார் பகவான்.

தானும் வளர்ந்து தாங்கள் படைத்த ஜீவன்களும் செழித்து வளரும் மார்க்கங்கள் காட்டியபின் கர்னாடக தேசத்தில் புறந்தாரதாஸராக நாரதர் தோன்றி கன்னடத்தில் கானங்கள் இயற்றியது போல் தெலுங்கில் இராமாயண காவ்வியத்தை கானமாக இயற்ற தும்புருவே தியாகய்யர்வாளாக அவதரிக்கிறார்.

சிவஸ்வருபமும் ராமரிடமும், சீதையிடமும் இருப்பதால் கைலயங்கிரியில் சிவ - பார்வதிக்கு கானம் செய்யும் தும்புருவே இராமாயண காவ்யத்தை வால்மீகி லவ, குசருக்கு பாடம் கற்பித்த பாணியை தனதாக்கி அதன்படி கிர்த்தனங்கள் அமைத்து மக்களிடையே ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் கிருபா கடாச்சத்துடன் பரவச் செய்கிறார் தெலுங்கில்.

இவ்விதம் புதிதாகத் தோன்றிய மொழிகளிலும் இராமா்யண, மஹாபாரத இதிகாஸங்கள் அழியாமல் மக்களிடையே ஜீவனுக்கும், ஜீவன் உண்ணும் உணவுப் பொருள்களும் செழித்தோங்கும் மார்க்கத்தை அமைத்துத் தருகிறார்கள்.

தீட்ச்சதர், சாமா சாஸ்திரிகள் நாராயணதீர்த்தர், அன்னமாச்சாரியர் போன்ற மகான்கள் தென்னாட்டில் தோன்றி சமஸ்கிருத, தெலுங்கு, கன்னட முதலிய மொழிகளில் பகவத்விஷயமாக கீர்த்தனைகள் இயற்றியது போல மலையாளத்தில் ஸ்வாதி திருநாள் மஹாராஜா ஸமஸ்கிருதத்திலும், மலையாளத்திலும் இராமாயண மஹாபாரதத்தை கீர்த்தனையாக கானம் செய்யும் வகையில் தொகுத்து வழங்கி இதிகாஸம் மலையாள தேசத்திலும் பரவி அழியாமல் காக்கும் மார்க்கத்தைக் காட்டி உள்ளார்.

வடக்கே பக்திக்கு மீரா, உதாரணமாக விளங்கியதுடன் கண்ணனையே பதியாக நினைத்து அவனுடன் ஐக்கியமாகிறாள். கலியில் இவள் ப்ராச்சீன் ஹிந்தி மொழியில் தோஹாக்கள் இயற்றி பக்தி வளர்த்த பெருமைக்கு முதலிடம் வகிக்கிறாள்.

ஜயதேவர் அஷ்டபதியை கிருஷ்ண கானமிருதமாகவும், நாராயண பட்டாத்திரி என்ற நம்பூதிரி நாராயணிய மென்ற பகவானின் 10 வித அவதாரங்களையும் சமஸ்கிருதத்தில் எழுதி பக்தியை வளர்த்த மஹான் ஆவார். மஹாராஷ்டிர மாநிலத்தில் பண்டரீபுரத்தில் சாந்த சக்குபாயும், சாந்த துக்காராமும், விட்டோபாவும் கண்ணனை கலியிலும் நேரில் கண்டு அவரின் லீலைகளை அனுபவித்த பக்கதர்கள்.

பகவான் ஒவ்வொரு நிமிஷமும் கலியிலும் பல ரூபங்களில் தோன்றி குழப்பங்களையும் கலவரங்களையும் கட்டுப்படுத்தியே வருகிறார் என்பதற்கு சாட்ச்சி துங்கபத்திரா நதி தீரத்தில் ராகவேந்திரராக பக்தர்களின் கோரிக்கைகளை பூர்த்தி செய்வதாகும்.

பின் சாயிபாபாவாக வந்து பக்தர்களின் குறைகளை போக்கிவருகிறார்.

முகலாயரும், ஆங்கிலேயரும் இந்தியாவை ஆட்சி செய்ய வைத்தது அவர்களும் அவனுடைய குழந்தைகளே என்பதாலேயே.

ஹைதராபாத்தில் நவாப்பிடம் பணி செய்த பக்த கோபண்ணா கஜானா பணத்தை அபஹரித்து ராமர் கோயிலை கட்டியதால் அவரை சிறைபிடித்து கோல்கொண்டாவில் வைத்த சமயம் ராம்சிங், லட்ச்சுமணசிங் என மாறுவேஷத்தில் வந்து பணத்தைக் கட்டி கோபண்ணாவை மீட்கிறார்கள் ராமரும், லட்ச்சுமணரும்.

பகவான் ஜீவன்களிடம் எவ்வளவு பாசம் வைத்து நடத்துகிறார் என்பதற்கு பலவித சாட்ச்சியங்கள் வைத்துள்ளார்கள்.

முஸ்லீம் ஆட்சி முடிந்து கிறிஸ்துவர் ஆட்சி தொடங்கியபின் நாட்டில் மதங்களையும், கோயில்களையும் முஸ்லீம் போல அழிக்காவிட்டாலும் பக்தி குறைய ஆரம்பித்த சமயம் கல்கத்தாவில் ராமகிருஷ்ண பரமஹம்ஸராகவும், சாரதாதேவியுமாகவும் வந்து ராம + கிருஷ்ண பக்தியை நிலைநாட்டி விவேகானந்தர் மூலம் நம் நாட்டில் மட்டும் அல்ல சிக்காகோ முதல் பல வெளிநாட்டிலும் பக்திப் பிரச்சாரம் செய்து இந்தியாவின் கலாச்சாரம் குறையாமல் காத்து ராமகிருஷ்ண மடத்தை அமைத்து ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பேலூரிலும், விவேகானந்தர் கன்னியாகுமரியிலும் கோயில் அமைத்துக் கொண்டு கீதையின் தத்வங்கள் அழியாமல் காத்து வருகிறார்கள்.

வேதம் போல் சாஸ்திரங்களாக வகுக்கப்பட்டு, கல்வி, விஞ்ஞானம், பரதம், சங்கீதம், ஜோதிடம், மருத்துவம் என ஜீவனுக்கு வேண்டிய பல விஷயங்கள் விஸ்வவித்யாலயாவிலும், நாலந்தாவிலும் போற்றி காக்கப் பட்டு வந்தன. இதனை அறிந்து இக்கலாசாலையில் வெளிநாட்டவர் கல்வி கற்க வந்தார்கள். இவர்களில் முக்கியமானவர்கள் யூவான்ஸாங், பாஹியான் என இருவர் மிக முக்கியமான சீன நாட்டவர்கள் ஆகும்.

வெளிநாட்டுப் படை எடுப்புகளால் இவைகளில் பல சூறையாடப்பட்டு கொண்டும் செல்லப்பட்டு விட்டன. வடக்கே காசிவிஸ்வவித்யாலயாவும், தெற்கே ஸரஸ்வதி மஹாலில் தஞ்சையில் பல ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வந்தாலும் மொழிப் பிரச்னையில் பல மறைந்தே இருக்கின்றன.

இவ்விதம் ஜீவனுக்கு தாங்களே காலம், காலமாக காப்பாற்றி வரும் பகவான் ஆங்கிலேய ஆட்சியின் முடிவில் பலவித துன்பங்களைக் கட்டுப்படுத்த சூரியனின் காந்தியாக மகாத்மா காந்தியையும், அரங்கனின் கஸ்தூரி திலகத்தையே

கஸ்தூரிபாயாகவும் படைத்து ஆங்கிலேய ஆட்சிக்கு அவர்கள் மூலம் இந்திய நாட்டிற்கு விடுதலை வாங்கித் தருகிறார்கள்.

இக்காலத்தில் பாரதி தேசபக்திப் பாடல்கள் இயற்றியது இன்றும் மக்களாகிய ஜீவனுக்கு பலன் கொடுப்பவைகளாகவே அமைந்துள்ளன.

வடக்கே வங்காளக் கவியாக தாகூர் தேசபக்தியையும், வீரத்தையும் வளர்க்கும் கவிதைகளை இயற்றி மக்களை விழிப்புணர்ச்சிக்கு அடிமையாக்குகிறார்.

1928ல் ராம்சிங், லட்ச்சுமணசிங்காக வந்து ராமதாஸரை காப்பாற்றிய பத்ராஜலத்தில் ஆஞ்சனேயர் சுயம்புவாகத் தோன்றி சிறிய ரூபத்தில் வந்தவர் வருஷாவருஷம் வளரும் நிகழ்ச்சி இன்றும் பிரத்தட்சமாக உள்ளது.

தெற்கே பாபநாசம் சிவன், பல தெய்வங்கள் மேல் பக்தி பாடல்களை இயற்றி தமிழில் பக்தியை வளர்த்தார். அருணாச்சலக்கவி தமிழில் ராமாயணத்தின் சாரத்தை பாடலாக இயற்றி காவ்வியம் தமிழில் கானமாகப் பாட வழி வகுத்துத் தந்துள்ளார். ஊத்துக்காட்டு சுப்பையர் கிருஷ்ண லீலைகளை கானமாக தமிழில் பாடி கிருஷ்ண பக்தியை வளர்த்துள்ளார். தஞ்சையில் நாராயண தீர்த்தர் ஸ்ரீனிவாஸரின் பக்தியை தமிழில் வளர்க்க கானங்களை இயற்றித் தந்துள்ளார்.

அதனால் பகவான் நம்மை விட்டு சிறிதும் அகலாமல் நம் கூடவே இருந்து கண்காணிக்கிறார் என்பதை ஜீவன் இது சமயம் நன்றாக உணர்ந்து இருக்க முடியும்.

இது எப்படி என்றால் சூரிய, சந்திரர் உலகம் தோன்றிய நாள் முதல் உலகப் பணிகளை ஒரு நொடி கூடத் தவறாமல் செயல்படுத்தி வரும் நிகழ்ச்சி மூலம் நாம் கட்டாயம் உணர முடியும்.

இன்றும் காந்திஜியும், விவேகானந்தரும் குடியேறியுள்ள கன்னியாகுமரி முனையில் கண்ணனே திருவள்ளுவராகத் தோன்றி திருக்குறளை இயற்றித் தந்துள்ளதை மக்கள் புரிந்து கொள்ளக் குடியேறியுள்ளார். இதை இன்னும் உறுதியாகக் கூற 133 அடியாக திருவள்ளுவர் சிலையை அமையச் செய்து 1+3+3=7 என்ற எண்ணை வைத்து 7 லோகம், 7 பிரகாரம், 7 மலை என்று எதையும் ஏழாக அமைத்துக் கொண்டுள்ள கண்ணன் இங்கு 7 அடையாளமாக வைத்து சூரிய, சந்திர இணைப்பு ஸ்தலத்தில் வைத்துள்ளார்.

பண்டிகைகள் மூலமும், உத்ஸவங்கள் மூலமும் பகவான் ஜனன, மரண, மோட்ச்சத்தை அளிப்பதை விளக்கிக் கூறுகிறார்கள்.

இராமாயண காவ்ய நாயகனான ஸ்ரீராமர் தன் கையால் அளித்த ஸ்ரீரெங்க விமானத்தின் கீழ் பள்ளிக் கொண்டிருக்கும் ஸ்ரீமந்நாராயணன் கலியில் இராமாயண காவ்யத்தை பூர்த்தி செய்து வைக்கும் நோக்கத்துடன் திருப்பதியில் ஸ்ரீனிவாசராக துவாபரயுகம் முடிந்து கலி ஆரம்பத்தில் வந்து பத்மாவதிபரிணயம் பண்ணிக் கொண்டு இராமாவதாரத்தில் சீதையிடம் தாமரையாக இருந்த கமலத்திற்கு பத்மாவதியாக மதிப்பளித்து கௌரவிக்கிறார்கள்.

நீளாதேவி, பூமாதேவிக்கும் மதிப்பளித்தபின் ஸ்ரீரங்கத்திலும், திருப்பதியிலும் மகாலச்சுமி பகவானை பிரிந்தே இருப்பதின் அடையாளத்தை வைத்து அதனை நிருபிக்க பத்மாவதியின் கல்யாணத்தைச் செய்து கொள்ள தான் குபேரனிடம் கடன் பட்டிருப்பதாக சாட்ச்சி வைத்து அக்கடனை அடைக்க வட்டிக் காசு ஜனங்களிடம் வாங்குவதாக வைத்து வட்டிக்காசு வாங்கும் கோவிந்தனாக உள்ளார் கோவிந்தன்.

கோவிந்தன் என்பதன் பொருள்:-

-கோ - காமதேனுவாகிய கோமாதாவிடம் திருப்பாற்கடல் பாலை வைத்து பசு முதல் தாய் வரை சகல கோடி ஜீவராசிகளிடமும் அப்பாலை வைத்து ரட்ச்சிக்கும் ராஜகோபாலா

விந்- உன் விஸ்வருப தரிசனம்

தா - கொடுத்து அருள் புரிவாயாக

என்னும் பொருள் கொண்டதாகும்.

இப்பேர்பட்ட கோவிந்தனே கலியில் ஜீவனின் பிறப்பையும், இறப்பையும் கண்காணித்து சனி பகவானின் கருணைக் கடாச்சத்திற்கு எப்போதும் பாத்திரர் ஆகி சகலச் சேமங்களுடன் வாழ வேண்டும் என்ற நோக்கத்துடன் சனிக்கிழமையே தன்னுடைய முக்கியமான தினமாகக் கொண்டு அருள் பாலிக்கிறார்.

பிரம்மாவும், சிவனுமே பசுவும், கன்றுமாக வந்து சீனிவாசரை புத்தின் நடுவிலிருந்து வெளிக் கொண்டு வந்து ஸ்ரீனிவாஸர் கல்யாணத்திற்கு வழிவகுக்கிறார்கள். கலியின் ஆரம்பத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் ஒன்று இணைந்து வந்து அருள்பாலித்த ஸ்தலம் திருப்பதி ஆகும். இந்த ஸ்தலத்திலுள்ள உத்ஸவங்களை பிரம்மாவே நேரில் வந்து அமைத்து தருவதே சகல கோயில் உத்ஸவத்திலும் கடைப்பிடிக்கப்படுகிறது.

உத்ஸவத்தின் ஆரம்பத்தில் 7 தலை கொண்ட பெரிய நாகமும், இரண்டாவது தினம் சின்ன நாக ரூபமான ஐந்து தலை ஆதி சேஷனுக்கும் மதிப்பளிக்கப் படுகிறது திருப்பதி உத்ஸவத்தில்.

ஆதிசேஷன் ஸப்தப்பிரகாரமும், ஸப்தமலையும் தனதாகக் கொண்ட அரங்கனையும், ஸ்ரீனிவாஸரையும் ஒன்று இணைந்து இராமாயண மங்கள காண்டத்தை முடிக்கும் அவதாரத்தை மதிக்க 7 தலை நாகமாகவும், ஜீவனின் சரீர தத்வமாக 5 தலை நாகரையும் முதலிலேயே மதிப்புத் தருகிறார்கள்.

பின் சூர்யப்பிரபை, சந்திரப்பிரபை வாகனம் என்று சரீர தத்வத்தில் ஆரம்பம் முதல் இருவரும் இணைந்து குளுமை, உஷ்ணம் என இரு தத்வத்தையும் ஜீவன் உண்ணும் உணவுப் பொருள்கள் அமோகமாக விளையவும், வானத்திலிருந்து மழை நீரைக் கொண்டு தரும் இவ்விரு ரூபங்களுக்கும் மதிப்புத் தருகிறார்கள்.

யானை வாகனம் வினாயக ரூபத்திற்கு விஷ்ணுவான நாராயணரே அந்த ரூபத்தை எடுத்து வந்து பிரயோஜனப் படுத்திக் கொண்டு உள்ளதால் சிரஸ்யாவரும் வணங்கும் ரூபத்தை அடைந்து விட்டதால் சரீரத்திற்கு முதலையால் பிடிக்கப்பட்டு ஆதி மூலமே எனதன் நாமத்தை சொல்லி அழைத்த யானைக்கு மோட்ச்சம் அளித்து வாகன அந்தஸ்த்துடன் விஸ்வருபதரிசனம் முதல் சகல கோயில்களிலும் முன் நின்று விழாக்களை நடத்தும் அந்தஸ்து அளித்துள்ளார்கள். தசாவதார ரூபத்திற்கு முதலாக யானை முகம் மூலம் வினாயக ரூபத்தை மதிப்பும் யானை வாகனத்தில் உள்ளது.

ஹம்ஸ வாகனம் ஜீவன் நல்லது எது கெட்டது எது என அறிந்து மனப்பக்குவத்துடன் நடக்க உதவ வேண்டும் என பாலையும், நீரையும் பிரித்து உதவும் ரூபத்தைக் காட்டுகிறது. ஜீவ சிருஷ்டிக்கு பாலும், நீரும் சரீர தத்வத்தில் இருப்பதையும் உணர்த்தி பிரம்மனான படைப்புக் கடவுளிடம் சதா இருந்து அவர் பணிக்கு உதவுவதால் வாகன அந்தஸ்து அளிக்கிறார்கள்.

கற்பக விருட்ச்ச வாகனம் பிரம்ம ரூபமாக இருந்து தென்னையாகிய கற்பகத் தருவாக ஜீவனின் சரீர தத்வத்தில் சதா இருக்கும் விருச்சத்திற்கும் மதிப்பளித்து ஜீவ சிருஷ்டிப் பணி சரிவர நடக்க அமைத்து தரப்பட்ட மகத்தான பெருமை கொண்டதை வாகனமாக அந்தஸ்து அளிக்கிறார்கள். இதில் முதலில் ஆதிசேஷன் கற்பக விருட்ஷமான தென்னையை சுற்றியபின்பே ரூபம் வந்த தத்வமும் அடங்கி உள்ளது.

குதிரை வாகனம் ஹயக்கிரீவராக வந்து ஜீவன் கல்வியிலும், சாஸ்திர ஞானத்திலும் சிறந்து விளங்க வைக்கும் ஹயக்கிரீவருக்கும், ஸரஸ்வதிக்கும் மதிப்பளிக்கும் வாகனம்.

ஹனுமந்த வாகனம் மிருக ரூபமான ஜீவனின் சரீர தத்வத்தில் உள்ளதாலும் ஆதி ரூபம் வினாயகரும் அந்த ரூபம் ஹனுமந்த

ரூபமாகவும் உள்ளதையும் போற்றி வாகனம் அந்தஸ்து அளிக்கப்படுகிறது.

கருட வாகனம் சரீர தத்வத்தில் கடைசி அம்ஸமாவதால் பகவான் கருடனுக்கு வாகன அந்தஸ்த்துடன் தன் முன்பு கோயில்களில் அமர்ந்து சகல உலகப் பணிகளையும் கண்காணிக்கும் அந்தஸ்த்துடன் கோயில் உத்ஸவ ஆரம்பத்தில் துய ஸ்தம்பத்தில் கொடியாக ஏறி அமரும் அந்தஸ்த்தை அளிக்கிறார்கள்.

இவ்விதம் எல்லா ரூபத்திற்கும் மதிப்பளித்து தேரில் அதாவது மரத்தேரில் அமர்ந்து சிருஷ்டியின் ஆரம்பப் பணியுடன் சகல மதத்தவரும் ஒன்று இணைந்து தேங்காய் நாரால் செய்யப்பட்ட வடமாகிய கயிற்றை ஜீவன் இழுக்கச் செய்து தேங்காய்களை உடைத்து கற்பூரம் ஏற்றி வணங்கச் செய்து சம நோக்குடன் சமத்துவத்துடன் வாழ வேண்டும் என வாழ்த்தி ஆசிர்வதிக்கும் உத்ஸவமாக அமைத்துத் தருகிறார் பிரம்மன்.

கடைசியாக தீர்தவாரி என்று திருக்குளமாகிய புஷ்கரணியில் சக்ரத்தாழ்வார் என்னும் சுதர்ஷன சக்ரத்தை நீளாதேவி, பூமாதேவி இருவரின் கிருபை நிறைந்து ஜீவனுக்கு இருக்க வேண்டும் என இருவருடன் வராஹக் குளக்கரையில் அமர்ந்து அவர் அருள் ஆசியுடன் பூமியில் ஜீவ சிருஷ்டியும் அதன் தேவைகளும் பூர்ணமாக நிறைந்து இருக்க வேண்டி சக்ரத்தை நீராட்டி உத்ஸவத்தை முடிவடையச் செய்கிறார்.

இதன் உட்பொருள் ஸ்ரீசக்ரமாகிய சுதர்ஷன சக்ரமே ஜீவனின் சிவ + வைஷ்ணவ இணைப்புடன் சிருஷ்டி செய்வதால் நீராகிய நீளாதேவி, பூமியாகிய பூமிப்பிராட்டியின் அனுக்கிரஹம் பெற்று சகல சம்பத்துடன் வாழ வேண்டும் என்னும் உட்பொருளை அடங்கியுள்ளது. ஜீவனைப் படைத்தது மட்டும் அல்ல அவர்களது சேம நலனை ஒவ்வொரு வினாடியும் உத்ஸவங்கள் மூலம் பெருமைப்படுத்துகிறார் பிரம்மன்.

இவைகளை அனுசரித்தே ஸ்ரீமத் இராமானுஜரால் ஸ்ரீரெங்க சேத்திர உத்ஸவங்கள் அமைத்துத் தரப்படுகின்றன.

கோயில் உத்ஸவ நியமங்களை வழி வகுத்துத்தரும் முன் திருவள்ளரையில் இரண்டு வருஷம் தங்கியிருந்தே உத்ஸவ சம்பிரதாயங்களை நிர்ணயிக்கிறார்.

ஸ்ரீரெங்க சேத்ரத்தின் சமீபம் அமைந்துள்ள இந்த ஸ்தலம் மூன்று வித விசேஷங்கள் கொண்டதாகும்.

முதலாவதாக கும்பகோண சேத்திரத்தின் ஜீவ சிருஷ்டியின் ஆரம்பமாக அமைந்துள்ள சாரங்கபாணிக் கோயில் போலவே

இங்கு உத்திராயண, தட்ச்சிணாயன வாசல் கொண்ட புண்ட ரீகாக்ஷர் திருத்தலம்.

இங்கு பஞ்சப்பிரகாரமாக ஒவ்வொரு சுற்றிற்கும் ஒவ்வொரு விசேஷமாக அமைந்துள்ளதால் முக்கியமானது முன் கோபுர வாசல் படிகள் 18 என கீதையின் 18 அத்யாயமாக சபரியில் ஐயப்பன் கோயில் படிகள் போலவே அமைந்துள்ளது. ஜீவனை சுலபமாக நல்வழிப்படுத்தும் மார்க்கமாக உள்ளது விசேஷம். மூன்றாம் திருச்சுற்றுக்கு செல்லும் நுழைவாயில் படிகள் நான்காக (4) அமைந்து 4 வேதங்களைக் கொண்டு ஜீவனை நற்பாதைக்கு அழைத்துச் செல்வதாக அமைந்துள்ளது.

புண்டரீகாக்ஷரின் சன்னதிக்கு செல்லும் நுழைவாயில் 32 படிகளைக் கொண்டதாக அமைந்து ஜீவனுக்கு காயத்திரி மந்திரங்களைப் போதித்து சூரிய தேஜஸை வளர்த்து ஜீவன் வாழும் வகைகளையும் போதிப்பதாக உள்ளன. இராமாயண காலத்தில் ஸ்ரீராமரும் தன் வாயாலேயே ஆதித்யஹிருதயம் யுத்த பூமியில் சொல்லி சூரிய வந்தனம் செய்துள்ளார்.

சிவனுக்குப் பஞ்சப்பிரகாரம் உண்டு. இதை திருவானைக் கோயில் புலப்படுத்துகிறது. திருவள்ளரையில் பஞ்சப் பிரகாரம் அமைத்துக் கொண்டு சிவ + வைஷ்ணவ ஒருமைப்பாட்டை புலப்படுத்துவதுடன் திருவானைக் கோயில் போலவே இங்கும் ஜம்புலிங்கேஸ்வரர் கோயில் அமைந்துள்ளது ஒரு விசேஷம்.

திருவள்ளரையிலிருந்து ஒரு யானை தினம் ஒரு தாமரைப் பூவை எடுத்துக் கொண்டு காவேரி ஆற்றைக் கடந்து ஜம்புலிங்கேஸ்வரரை ஆராதித்து திரும்பியதாகவும் ஒருநாள் காவேரியில் வெள்ளம் வரவே யானையால் ஆற்றைக் கடந்து போக முடியாமல் போனதால் ஜம்புலிங்கேஸ்வரரே அகிலாண்டேஸ்வரியுடன் வந்து காட்சி தந்ததால் திருவானைக் கோயில் போலவே இங்கு கோயில் அமைந்ததுடன் ஜீவசிருஷ்டியில் வெள்ளையானைக்கு இங்கு மதிப்பளிக்கிறார்கள். கறுப்பு யானை ஆதி மூலமே என கூவி நாராயணரால் மோட்சம் பெறுவதுடன் கோயிலில் விஸ்வரூபத்திற்கும் கோயில் மரியாதைக்கும் முதலிடம் பெருவது போல இங்கு வெள்ளை யானைக்கு மதிப்பளித்து உச்சிகாலத்தில் அம்பாளால் நித்தியம் பூஜிக்கப்படும் அந்தஸ்தைப் பெறுகிறது.

ஸ்ரீரெங்கம் தோன்றுவதற்கு முன் யானை வனமான காரணம் முன்பே கூறப்பட்டது. யானை வனமான இடத்தில் லட்சுமி நரசிம்மர் வந்து கோயில் கொண்டதுடன் ஜீவ சிருஷ்டிக்கு நீரின் அவஸியமாக ஜம்புலிங்கேஸ்வரரின் திருவடியிலிருந்து நீர் சதா வரும்படி நீருக்கு

மதிப்புத் தரும் ஆலயமான திருவானைக் கோயில் பஞ்சப் பிராகரத்துடன் அமைத்துக் கொண்ட அதே அத்தனை ரூபங்களும் திருவள்ளரையில் ஒரே இடத்தில் அமையச் செய்து கொண்டு ஜீவ சிருஷ்டிக்கும், ஜீவன் வாழும் சகல தத்வங்களும் அடங்கியுள்ள இந்த ஸ்தலத்தில் இராமானுஜரை இரண்டு வருஷம் தங்க வைத்து ஸ்ரீரெங்க சேத்திர பூஜா முறைகளையும், உத்ஸவ முறைகளையும் ஜீவனுக்கு உணர்த்தவே சிவ + வைஷ்ணவ ஒற்றுமையையும் உணர்த்தவே ஆகும்.

இராமானுஜரான ஆதிசேஷனும், திருமலை கண்டாமணி ரூபத்தில் வேதாந்த தேசிகராக ஸ்ரீனிவாஸனே வந்தவரும் இருவரும் தேர்ந்தெடுத்து சிவ + வைஷ்ணவ ஒருமைப்பாட்டு ஸ்தலங்களையே என்பதை ஜீவன் நன்கு உணர்ந்து செயல்பட்டால் உலகிற்கு ஷேமமே கிடைக்கும்.

இராமாயண காலத்தில் ஆதி சேஷன் ஆயில்ய நட்ச்சத்திரத்தில் இலட்சுமணனாக அவதரித்துள்ளார்.

ஆதிசேஷனே சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவராகத் தோன்றி நாட்டிய சாஸ்திரத்தை எழுதி அதனைச் சிற்ப வடிவத்தில் 108 கரணங்களாக வடித்துத் தந்து தில்லை நடராஜரின் நாட்டிய ரூபங்களை மக்கள் அனுசரிக்கும் வழிவகைகளை வகுத்துத் தருகிறார்.

இராமாயண காலத்தில் லட்சுமணனாக அவதரித்த ஆதிசேஷனே சிதம்பரப் பணிகளை முடித்துத் தந்த பின் இராமாயண மங்கள காண்டத்தை பூர்த்தி செய்யும் ஸ்ரீரெங்கச் சேத்திர வைபவங்களை பிரபலப்படுத்த ராமானுஜராக ஸ்ரீபெரும்புதூரில் ராமர் அவதரித்த அதே சித்திரை மாதத்தில் திருவாதிரை நட்ச்சத்திரத்தில் அவதரிக்கிறார்.

ஆதிசேஷனான இராமானுஜர் இவ்விதம் இராமரையும், நடராஜரையும் இணைத்து சித்திரை மாத ஆயில்ய நட்ச்சத்திரத்தில் லட்ச்சுமணனும் இராமானுஜராக திருவாதிரையிலும் அவதரித்து சிவ + வைஷ்ணவ ஒருமைப்பாட்டைக் கூறுகிறார்.

இராமானுஜர் ராமாயண காவ்யத்தின் மங்கள காண்டத்தை பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் பூலோக வைகுண்டத்தில் பூஜா, உத்ஸவங்களை திருவள்ளரையிலிருந்து புறப்பட்டு வந்த பின் சித்திரை மாதம் முதல் பங்குனி மாதம் வரை பிரம்மனால் திருப்பதியில் துவங்கி வைக்கப்பட்ட உத்ஸவ ஸம்பிரதாயங்களை அதே முறையில் ஸ்ரீரெங்கத்தில் பிரம்மோத்ஸவம் சித்திரையில் தொடங்கி வைக்கிறார்.

பங்குனியுடன் ஜீவனின் பிறப்பு, இறப்பு கணக்குகள் முடிவெடுக்கப்பட்ட பின் மோட்ச்சார்த்தமாக ஐந்து கருட

ஸேவையாக ஸ்ரீவில்லிபுத்தூரிலும், 9 கருட ஸேவையாக நவ திருப்பதியிலும், 11 கருட ஸேவையாக திருநாங்கூரிலும், 12 கருட ஸேவையாக அட்சய திருத்திகை அன்று கும்பகோணத்திலும் புண்ணியம் செய்து மோட்ச்சம் அடையும் ஜீவன்களை கரையேற்றியபின் திரும்ப பூமியில் பிறக்க வேண்டிய ஜீவனின் கணக்குப்படி பூவுலகில் சித்திரை முதல் சிருஷ்டியை துவக்க ஆரம்பிக்கிறார் பிரம்மன் என்பதையே பிரம்மோத்ஸவம் ஜீவனுக்குக் கூறுகிறது.

சித்திரைத்தேர் உத்ஸவத்தின் போது பிரம்மனால் படைக்கப்பட்ட சகல ஜீவன்களும் பங்கேற்று தேங்காய் நாரினால் பின்னப்பட்ட வடத்தை இழுக்கிறார்கள். இதில் ஜாதி, சமய பேதம் தவிர்க்கப்படுவதுடன் மொட்டை அடித்துக் கொண்டு தங்கள் தலையில் தேங்காயை உடைத்துக் கொள்ளும் பாமர மக்களும் இறைவன் பால் ஜீவ சிருஷ்டியின் தத்வம் புரியாமலேயே பக்தியை காணிக்கையாக வழங்குகிறார்கள். இதனில் ஜீவ சிருஷ்டியின் தத்வம் இருப்பதை பலருக்கும் அதாவது கற்று அறிந்த ஞானிகளுக்கும் அக்யானத்தைப் போக்கும் ஒரு சிறந்த தத்வத்தை கூறுகிறார்.

இதே சமயம் கேரள தேசமான திருச்சூரில் சித்திரைப் பூரத்தில் குடை மாற்ற உத்ஸவம் கொண்டாடப் படுகிறது.

இந்த உத்ஸவத்தில் முதலில் தாரை, தப்பட்டை, பேரி, தாளம் என பல வாத்தியங்கள் ராகலயத்துடன் தாளம் தவறாமல் வாஸிக்கப் படுவது ஜீவ சிருஷ்டியை துவங்கும் சித்திரை மாதத்தில் அம்பாளுக்கும் ஆண்டாளுக்கும் உகந்த பூர நட்ச்சத்திரத்தை தேர்ந்தெடுத்து முதல் கட்டமாக சிவனிடம் ஒப்படைக்கும் பணியே வாத்திய கோஷம்.

அதன் பின் குருவாயூர் அப்பன் மையமாக யானை மேல் அமர்ந்து வர இருபுறமும் 7, 7 என மொத்தம் 15 யானைகளை வரிசைப்படுத்தி இதன் மேல் பாகர்கள் அமர்ந்து வண்ணக் குடைக்கு முக்கியம் அளிப்பதுடன் வெண் சாமரம் ஆலவட்டமான மயில் இறகு என மூன்று வித மரியாதை செய்யப்படுகிறது.

இதே போல எதிரில் பவானி அம்மன் மையமாக அமர்ந்துவர இருபுறமும் 7, 7 என 15 யானைகள் வரிசைப்படுத்தி குடை, சாமரம், ஆலவட்டம் ஆகிய மூன்றிற்கும் மரியாதை அளிக்கப் படுகிறது. இவ்வித இவ்விரு ருப மரியாதையும் ஜீவ சிருஷ்டிக்கான தொடக்கமே.

எவ்விதம் கையில் அரங்கன் மாரியம்மனிடம் சிருஷ்டிக்கான பணிகளை ஒப்படைக்கிறாரோ அதே போலவே குருவாயூர் அப்பன் பகவதி அம்மனிடம் ஒப்படைக்கிறார். அரங்கன் செய்வது அமைதியான முறையில் உள்ளது.

ஆனால் கண்ணன் வெளிப்படையாக யானைமேல் அமர்ந்து விநாயகரிடமும், ஆலவட்டமான மயில் இறகு மூலம் முருகனிடமும் வெண்சாமரம் மூலம் சிவனிடமும், வண்ணக் குடைகள் மூலம் பிரம்மனிடமும் ஜீவ சிருஷ்டிப்பணிகளை ஒப்படைப்பதுடன் பவானி அம்மனிடம் பூர நட்ச்சத்திரத்தில் சகல மரியாதைகளுடன் ஒப்படைப்பதே பூரநட்ச்சத்திர குடை மாற்று விழா என திருச்சூரில் கொண்டாடப்படுவதாகும்.

இதன் மூலம் பூமிப்பிராட்டி, அம்பாள், விநாயகர், முருகன், பிரம்மா, சிவன் யாவருக்கும் ஜீவ சிருஷ்டியை சரிவர நடந்து முடிக்கும் பணிக்கான மரியாதை மன மகிழ்வுடன் அளிக்கப்படுகிறது.

பாமரமக்களான விவசாயிகள் செய்யும் தொழிலை தெய்வமாக மதித்து சகல ஜீவகோடியும் வாழ வழி கோரும் பக்தியாகும் தேர்.

அச்சயதிருதிகை அன்று பத்திரியிலும் கைலாசத்திலும் கோயில் திறக்கப்பட்டு ஜீவனின் சிருஷ்டிப் பணியை கண்காணிக்கிறார்கள்.

மதுரையில் மீனாட்ச்சி, சுந்தரேஸ்வரர் திருக்கல்யாண வைபவமும் சித்திரை மாதத்தில் தொடங்கப்பட்டு ஜீவனின் கல்யாண நலன்களை ஏற்கிறார்கள்.

கள்ளழகர் வைகை ஆற்றில் குதிரை வாகனத்துடன் இறங்குவது நீராகிய நீளாதேவி ஜீவனுக்கான சகல சுகத்தையும் அளிக்கவேண்டும் என்பதுடன் தசாவதார காட்ச்சி தந்து ஜீவன் 10 வித நற்பண்பு நிறைந்தவராக இருக்க அருள் ஆசி வழங்குவதுடன் கல்வி ஞானக்த்திலும் சிறந்து விளங்க வேண்டும் என்கிறார். இவ்விதம் சித்திரையில் ஜீவனின் சிருஷ்டியை புதிதாகத் தொடங்கும் வைபவத்தை வைத்துத் தருபவர்கள் வைகாசியில் விசாக நட்ச்சத்திரத்தில் நரஸிம்மாவதராத்தையும் வைகாசி விசாகத்தில் புத்தபௌர்ணமியையும் இணைந்து நடத்தி பக்தியுடன் பொருமையுடன் நடக்கும் மார்க்கத்தைக் காட்டுகிறார்கள்.

ஆனிமாதம் ஸ்ரீரெங்கத்தில் ஜேஷ்டாபிசேகம் என தாயார், பெருமாள் திருவா பரணங்களை காவேரியின் நீரையானை மேல் சகலமரியாதைகளுடன் அழைத்து வந்து நீராட்டி சுத்திகரிக்கிறார்கள்.

திரு ஆபரணங்கள் சுத்திகரிக்கப்படும் மூன்பு பக்தர்கள் கையினால் தொட்டு ஸேவிக்கும் பாக்கியம் கிடைக்கிறது. இதன் மூலம் பாமரமக்களும் பகவானின் ஸ்பரிசம் கிடைத்து மகிழும் பாக்கியம் கிடைக்கிறது.

பின்பு அன்னத்தை சகல கனிகளுடன் பகவானுக்கு நிவேதனம் செய்து பக்தர்களுக்கு அளிக்கப்படுவதின் உள் நோக்கம் ஜீவன் நேர்மையுடன் பக்தி செய்து பகவதானுபவம் பெற்று உண்ணும் உணவுப் பண்டங்கள் குறைவில்லாமல் கிடைத்து ஆரோக்கியத்துடன் வாழ வேண்டும் என்றும் உத்ஸவ மூலமாக சிவ + வைஷ்ணவ சகல ஆலயங்களிலும் கொண்டாடடப்படுகிறது இச்சிறந்த நோக்கத்துடன்.

ஆடி ஆண்டாளின் அவதார மாதமாகும் ஜீவனின் சிருஷ்டிக்கே மூலமான மண்ணாகிய புத்து மண்ணிற்கு அதிதேவதையான பூமிப்பிராட்டியே துளஸி நந்தவனத்தில் ஆண்டாளாக அவதரித்து இராமாயண காவ்யத்தில் சீதையிடம் சரீரமதத்வமாக இருந்து ஸ்ரீரெங்கத்தில் அறங்கனால் மதிப்பளிக்கப்படும் ஆண்டாள் ஜீவனுக்கான சகலதேவைகளையும் நாச்சியார் திருமொழி, வாரணமாயிரம், திருப்பாவை மூலம் கல்யாண நலன்களை குவித்து ர்த்னங்களாக அமைத்துத் தரும் பூமிப்பிராட்டி கலியில் ஜீவனுக்கு நற்கதி புகட்ட அவதரித்ததாகும்.

இந்த ஆடி மாதத்தின் முதல்நாளை ஜீவ-சிருஷ்டிக்கு மூலமான தேங்காய்க்கு மதிப்பளித்து தேங்காயின் பாலை பகவானுக்கு நிவேதனம் செய்யும் படி வைத்து பண்டிகையாக கொண்டாட வைத்துள்ளார்கள்.

இதே ஆடி மாதத்தில் அம்பாளுக்கு சிவாலயங்களில் ஆடிப்பூர உத்ஸவமாக கொண்டாட வைத்துள்ளார்கள். பூமியில் மலையாக இருக்கும் மலயத்வஜனுக்குப் புத்திரி என்ற ஸ்தானத்தை வைத்து மண்ணிற்கு மூலமான மலைக்கு மதிப்பளிக்கிறார்கள்.

அம்பாளுக்கு திருவாடிப் பூரத்தில் கண்ணாடி வளையல்களை சாத்துவது கண்ணாடி மண்ணின் சம்பந்தம் உடையதலால் அன்றைய தினம் உயர்வாக மதிப்பளிக்கப்பட்டு சுமங்கலிகளுக்கு பிரஸாதமாக அளிக்கப்படுகிறது.

சீதையின் சரீரத்தத்வமாக இருந்த அம்பாள் காசியில் ஸ்வர்ண அன்ன பூரணியாகவும், நீளாதேவியான கங்கை விஸ்வநாதரை அபிசேஷகம் செய்து இருவருக்கும் ராமர் காலத்திலேயே மதிப்பளிக்கப்படுகிறது.

இது உண்மை என ஜீவனுக்கு நிருபிக்க திரு ஆடிப்பூரத்தில் சகல சிவாலங்களிலும் மதிப்பளித்து கண்ணாடி வளையல் பிரசாதம் சுமங்கலிகளுக்கு அளித்து மதிப்பளிக்கிறார்கள்.

மீனாட்ச்சி, சுந்தரேஸ்வரர் மதுரையில் கல்யானைக்கு கரும்பு, புட்டிற்கு மண் சுமத்தல் ஆகியவற்றுடன் வளையல் வியாபாரியாக வந்து கண்ணாடி வளையல்களை விற்பதும் மண்ணிற்கும், மலைக்கும் மதிப்பளிக்கவே.

ஜீவன் மண்ணை உண்ண முடியாது என்பதால் புட்டாக அரிசிலிருந்து சமைத்து வழங்கப்படுகிறது. ஸ்ரீரெங்கத்தில் தாயார், பெருமாள் புட்டை இதனாலேயே பிரஸாதமாக வழங்குகிறார்கள்.

ஆண்டாளுக்கும், அம்பாளுக்கும் சம்பந்தம் உண்டு என்பதை திருவாடிப்பூரம் மூலம் நிருபித்து அதன் அடையாளமாக இருவர் கையிலும் கிளியை வைத்துக் காட்டுகிறார்கள்.

ஆவணிமாதம் காயத்திரி மந்திரத்திற்கு முக்கியத்துவம் அளித்து சூரியனின் தேஜஸ்ஸை விருத்தி செய்யும் நோக்கத்துடன் ஸ்ரீரெங்க சேத்திரத்தில் பவித்ர உத்ஸவமாக நடத்தி அரங்கனுக்கு பூச்சாண்டி வேஷம் எனப் பூணூலாலயே மந்திர உச்சாடனத்துடன் மூலவருக்கும் உத்ஸவருக்கும் புஷ்ப அங்கி போல அலங்காரமாகச் சாத்தி ஜீவன் அன்றைய தினம் பூணுலுக்கு மதிப்பளிக்கும் பண்டிகையாக காயத்திரியை மந்திர உச்சாடணத்துடன் கொண்டாடி சூரியதேஜஸையும், ஜீவனின் பிராணாயாமம் மூலம் தேக ஆரோக்கியத்தையும் அளிக்கச் செய்கிறார்கள்.

4 வேதத்தவரும் ஆவணி அவிட்டத்தன்று கொண்டாடும் போது வேதங்களும் பூஜிக்கப்படுகிறது.

இதேமாதம் அஷ்டமி ரோஹிணியில் கோகுலத்தில் கண்ணன் அவதார தினம் அமைந்திருப்பது விசேஷம்.

அன்னை வேளாங்கண்ணியின் அவதாரதினமும் இதே மாதத்தில் அமைந்திருப்பது கண்ணனுக்கும், கிருஸ்துவமதத்த வரும் உள்ள சம்பந்தம் இணைக்கப்பட்டுள்ளது. ஜீவனுக்கு பின் தோன்றிய மதத்திலும் நானே உள்ளேன் என்பதைக் காட்டுகிறார்.

ஆவணி மாதம் அல்லது புரட்டாசி மாதம் என இரு மாதங்களிலும் கலந்து வினாயக சதுர்த்தி வருவது கண்ணன் பிறந்த ஆவணியிலும் சரி கோவிந்தனாக கலியில் அவதாரம் செய்து கலிபுருஷனாக அமர்ந்துள்ள கோவிந்தனின் அவதார அமைத்துக் கொண்டு கண்ணனுக்கும், தனக்கும் சம்பந்தம் உண்டு என்பதை நிலைப்படுத்துகிறார் வினாயகர்.

8 சாண் உடம்பிற்கும் சிரஸே பிரதானம் என இருந்தாலும் திருவடியில் வணங்கி ஆசி பெறுவதே மங்களகரமாக இருப்பதின் காரணம் விஷ்ணு ரூபத்தில் வினாயகர் சிரஸில் இருப்பதை நிலைப்படுத்த சரீரத்தை தாங்கும் முழங்கால் முதல் பாதம் வரை வினாயகருபமான விஷ்ணுவே இருந்து பூமிப்பிராட்டியை ஸ்பர்ஸிக்கும் படி வைத்துள்ள தாலேயே ஜீவன் நின்று, நடக்க முடிகிறது. முகத்தில் காதில் சங்கு, சக்ர ரூபத்துடன் துவாரப் பகுதி வினாயகர் காது போல அமைந்துள்ளதாலேயே ஜீவன் காதைப் பிடித்துக் கொண்டு வினாயகருபம் உள்ள பாதம் வரை உடலை மடக்கி தோப்புக்கரணம் போடும் பழக்கத்தை வைத்தும் காட்டுகிறார்கள்.

புரட்டாசி மாதம் திருவோண நட்ச்சத்திரத்தில் கோவிந்தனின் அவதாரதினமாக இருக்கும் அதே தினத்தில் கோவிந்தனின் மறு அவதாரமாக ஸ்வர்ண கண்டாமணியில் வேதாந்த தேசிகராக அவதாரம் செய்து ஜீவனின் சேமநலத்தையும் கோயில் உத்ஸவ கைங்கர்யத்தையும் புனர்ப்பிக்கும் பணியைச் செய்யும் உத்தேசத்துடன் அவதரித்துள்ளார். இதில் மற்றொரு காரணமும் அடங்கி உள்ளது.

துவாபரயுகத்தில் ருக்குமணியை கண்டாமணியின் நாதருபமாக அவதரிக்கச் செய்தவர் கலியில் தானே கண்டாமணியாக வந்து கோயில் மணியின் இரு ரூபத்திற்கும் மதிப்பளிக்கிறார்கள். இதன் மூலம் ஜீவன் மணியை கையில் எடுக்கும் போதே ருக்குமணியையும் கண்ணனையும் இணைந்து ஸேவிக்கும் பாக்கியமாக.

பகவானின் பணிக்கு உதவும் யாவற்றிற்கும் ஆழ்வாராக மதிப்பளித்தவர்கள் முதலில் கோயில் மணிக்கே இவ்விரு சம்பவங்கள் மூலம் மதிப்புத் தருபவர்கள்.

திருவடியான பாதுகைக்கு அரசை ஆளும் மதிப்பு இராமாவதாரத்தில் தந்தவர்கள் கலியில் நம்மாழ்வாராகவே மதிப்பளிக்கிறார்கள். பகவான் பணிக்கு எத்துனை மதிப்பு என்று ஜீவன் இதன் மூலம் அறியமுடியும்.

இராமாயண காவ்யத்தின் மங்கள காண்டத்தை பூர்த்தி செய்ய கோவிந்தனாக அவதாரம் செய்துள்ள ஸ்ரீனிவாஸன் ஸப்தகிரிபோல 7 ஸ்ரீனிவாஸனாக தென்னாட்டில் அமர்ந்துள்ளார்.

திருப்பதிக்கு அடுத்து உப்பிலி அப்பனாக பூமிப்பிராட்டிக்கு வராஹாவதாரத்தில் மணக்கோலம் அளிக்காமலே குழந்தை பாக்கியமாக நரகாசுரனை மகனாக அளித்த குறையைப் போக்க மணக் கோலம் அளித்து பெருமைப்படுத்துகிறார்.

என்றும் 16 வயதாக உள்ள மார்க்கண்டேயர் உண்மையில் சமுத்திரராஜனே ஆவதால் இதனை நிரூபிக்க உப்பில்லா உணவை உண்டு, உப்பான சமுத்திரராஜருக்கு மதிப்பளிக்கிறார். ஜீவன் உப்பில்லா விரதம் இருந்து பக்தியுடன் சரீரநலத்தையும் பெரும் பாக்கியம் அளிக்கிறார்.

மூன்றாவதாக: குணசீலத்தில் ஜீவனுக்கு ஏற்படும் உடல் உபாதைகளைப்போக்கும் வைத்தியராக அமர்ந்துள்ளார்.

நான்காவதாக: தான்தோன்றி மலையில் தானே தோன்றி திருப்பதிக்கு வரமுடியாமல் தவிக்கும் ஜீவனுக்கு அருள்பாலிக்கும் ஸ்ரீனிவாஸனாக அமர்ந்துள்ளார்.

ஐந்தாவதாக: கல்யாணபுரத்தில் ஜீவனின் கல்யாண நலன்களை நடத்திக் கொடுக்கும் ஸ்ரீனிவாஸராக அமர்ந்துள்ளார்.

ஆறாவதாக: வரகூரில் ஸ்ரீனிவாஸராக திருப்பதியில் மலைமேல் பத்மாவதித் தாயாருக்கு சம அந்தஸ்த்து தராதவர் இங்கே பூமியின் சமதளத்தில் தன் மடிமேல் அமர்த்திக் கொண்டு தாமரையாக சரீரதத்வத்தில் ஆத்மஜோதியான ஸ்ரீயைத்தாங்கும் பத்மாவதிக்கு இராமாயண காலத்தில் சீதையாக அவதாரம் செய்த லட்ச்சுமியின் ஹிருதயத்திலும் தாமரையாக இருந்தவளுக்கு மதிப்புத் தருகிறார்.

ஏழாவதாக: திருமலை வையாவூரில் ஸ்ரீனிவாஸராக பத்மாவதியை சிறிய மலைமேல் தனக்கு சரிசமமாக அமரும் பாக்கியத்தை அளிக்கிறார். திருப்பதி, வரகூர், திருமலை வையாவூர், இம் மூன்று ஸ்தலமும் வராஹமூர்த்தி முன் வந்து ஏற்படுத்திய ஸ்தலமும். வராஹமூர்த்தி இராமாயணத்தில் சீதா, ராமருக்கு லவனாகவந்த லஷ்மிவராஹப் பெருமாள் என்பதாலேயே இராமாயண மங்கள காண்டத்தை முடிக்க இந்தஸ்தலங்கள் மூலம் தானே வந்து நடத்துகிறார்.

இராமரின் உடன் பிறப்பாக ஆதிசேஷனே லட்ச்சுமணனாக அவதாரம் செய்து அவருடைய சகல நடவடிக்கைகளயும் உடன் இருந்து பார்த்த அதே ஆதிசேஷன் இங்கு மலையாக உள்ளதுடன் ஸ்ரீனிவாஸருக்கும் குடைபிடித்து நிற்கிறார் சீதா, ராமர், லவ, குசருடன் இணைந்து உலகச் சேமத்தை நடத்தப் போகும் நாளை எதிர் நோக்கியபடி.

ஆதிசேஷராக அவதரித்த இராமானுஜர் தமிழுக்கு ஆழ்வார்கள் வடித்த நாலாயிரப் பிரபந்தத்திற்கு முதலிடம் தருகிறார்.

வேதாந்ததேசிகராக அவதாரம் செய்யும் கண்ணனோ தானே எல்லா மதத்திலும் எல்லா மொழிகளிலும் இருப்பதை உணர்த்தியபின் தமிழுக்கு முதலிடம் அளித்து தென்னாட்டின் சரணாலயமான வேடந்தாங்கல் அருகிலேயே சிறிய மலைமேல் 800 வருஷத்திற்கு முன்பே வந்து அமர்ந்து பெருமை தருகிறார் என்றால் சமஷ்கிருத மொழிக்கும் மேலாக தமிழை மதிப்பதுடன் ஆதிசேஷனார்க்கு குடையாக இங்கு அந்தஸ்த்து அளித்தது போல சரீர தத்வத்தின் கடைசி ரூபமான கருடரூபத்திற்கு உலகில் உள்ள சகல பட்ச்சிகளையும் இந்தியாவிற்கே வரும் சரணாலயங்களை அமைத்துக் கொடுத்து இருப்பதுடன் வேடந்தாங்கல் மூலம் கருடரூபமான பட்ச்சிக்கு உயர்ந்த ஸ்தானத்தை அளிக்கிறார். அதனுடன் மதுராந்தகம் ஏரிகாத்த ராமர் அருகில் அமர்ந்து அவர் பணிகளைக் கவனிக்கிறார்.

தென் தமிழ்நாட்டில் திருமலை வையாவூருக்கு முதலிடம் அளித்து இராமாயண காவியத்தின் மங்கள காண்டத்தை பூர்த்தி செய்யும் பணியை கலியில் முக்கியதம்பதியராக சீதாராமா ஸ்வாமிகளையும் தாரா அம்மையாரையும் இப்பணியில் ஈடுபட வைத்துள்ளார்கள்.

ஐயனும், அப்பனுமாக ஐயப்பனே ஸ்வாமிகளிடம் ஸ்ரீனிவாஸரின் ஜன்ம நட்ச்சத்திரத்தில் ஸ்ரவணத்தன்று தீப தரிசனமாக திருநாவில் கற்பூர ஜோதியாகவும், திருக்கைகளில் நெய்தீப ஜோதியாகவும் அமர்ந்து பக்தர்களுக்கு அருள் வாக்கு அளித்து ஜீவனை ரட்ச்சிக்கும் பணியை ஏற்கிறார்கள்.

புரட்டாசி மாதத்தில் 48 நாள் ஆவணி முதல் புரட்டாசி வரையில் விரதம் இருந்து பாதயாத்திரையாக 5 நாள் சென்னையிலிருந்து திருமலையாவூருக்கு பக்தர்களை அழைத்துக் கொண்டு செல்லும் ஐந்தாவது நாள் புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமை முடிவடையச் செய்கிறார்.

மௌனமாக ஆடம்பரமில்லாமல் பகவானின் பணியை ஏற்று நடத்தி வரும் ஸ்வாமிகள் 25வது பாதயாத்திரை ஆரம்பம் முதலே இராமாயண மங்கள காண்டப் பணியை செயல்பட ஸ்ரீனிவாஸர் எதிர்பாராத ஒரு திருப்பத்தை ஏற்படுத்தப் போகும் இரண்டாயிரம் ஆண்டு ஜீவனுக்கு ஒரு பொன்னான ஆண்டாகவே அமையும்.

இதற்கு தம்பதிகளின் பெயரிலேயே சீதாராமர் என்று இராமாயண காவிய நாயகர் பெயரை ஸ்வாமிகளிடமும், தாரா-என ராதாவான ராமபக்தி, கிருஷ்ணபக்தியை இணைக்கும் பெயரை திருப்பி தாரா என அம்மையாரின் பெயரை வைத்து நிரூபிக்கிறார்கள்.

ஏன் என்றால் ஸ்வாமிகள் முதலில் கோவிந்ததாஸராக இருந்து கோவிந்தனான கிருஷ்ணபக்திக்கு முதலிடம் அளித்த பின்பே ராமபக்தியான இராமாயண மங்கள காண்டத்தை முடிக்கும் பணியை ஏற்பதையே இப்பெயர் உணர்த்துகிறது.

இதனை ஜீவன் உணர்ந்து அவரின் பணியை பூர்த்தி செய்து வைப்பவர் முன் வந்து அமர்ந்துள்ள வராஹப் பெருமாள் என்பதில் சந்தேகமே இல்லை.

விநாயகர், வீர ஆஞ்சநேயர், நரஸிம்மருடன் கூடிய சக்கரத்தாழ்வாருடன் கருடாழ்வாரும் இப்பணியை நடத்திக் கொடுத்துவரும் போது மங்களமாக முடிவடையும் நாள் சமீபத்திலேயே உள்ளது என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

புரட்டாசியில் மிக முக்கியமான பண்டிகையாக வைத்துள்ளது நவராத்திரி புரட்டாசி நவராத்திரியில் லச்சுமி, ஸரஸ்வதி, பார்வதி மூவரும் இணைந்து ரூபம் கொண்டு துர்க்கையால் மகிஷாசுரன் வதம் செய்யப்படும் பெரும் பண்டிகை.

முதல் மூன்று நாள் பார்வதியாகவும் பின் மூன்று நாள் லச்சுமியாகவும் கடைசி மூன்று நாள் ஸரஸ்வதியாகவும் பூஜிக்கப்படும் உள் நோக்கம் ஜீவனின் நல்ல, தீய செயல்களின் கணக்கெடுக்கவே ஆகும்.

நவராத்திரி உத்ஸவம் ஆரம்பிப்பதற்கு முன்பாக ஆவணியில் கிருஷ்ண ஜயந்தியும், பின் சுக்ல பட்ச்சத்தில் சதுர்த்தி தினம் வினயாகர் சதுர்த்தியும் கொண்டாடியபின் புரட்டாசியில் பௌர்ணமி முதல் அமாவாஸை வரை மாளய பட்ச்சமாக வைத்து இதில் இறந்த பித்ருக்களுக்கு ஸ்ரார்த்தம் கொடுப்பது விசேஷமாக வைத்து அமாவாஸை, பௌர்ணமி இரண்டிற்கும் மதிப்பளித்து சூரிய, சந்திரர்கள் மூலம் பிறந்த ஜீவனின் புண்ய, பாப கணக்கையும் எடுக்கிறார்கள். இவ்விதம் கணக்கெடுத்தபின் நவராத்திரி 9 நாளிலும் பார்வதி, லச்சுமி, ஸரஸ்வதிக்கு மதிப்பளிப்பதுடன், அந்த, அந்த வருஷம் இறந்த ஜீவனின் சிருஷ்டிக்கான ஜனன, மோட்ச்சக் கணக்கையும் எடுக்கிறார்கள்.

வினாயக சதுர்த்திக்கு முன்பாக திருச்செந்தூர் முருகனுக்கு புனர்பூசம், பூசத்தில் காலை வெள்ளை சாத்தி ருத்ராம் ஸருபமாகவும் மதியம் பச்சைசாத்தி விஷ்ணு ரூபமாகவும் சிகப்பு சாத்திபிரம்மா ரூபமாகவும் தரிசனம் அளிக்கும் உத்ஸவம் நடத்தப்படுகிறது. முருகனில் சிவ + வைஷ்ணவ ஒற்றுமையும் ஜீவ சிருஷ்டியின் தத்வத்தையும் ஜீவனுக்கு இதன் மூலம் வெளிப்படுத்துகிறார்கள்.

கிருஷ்ண ஜனனம், முருக சிவ+ வைஷ்ணவ ரூபம் இணைப்பு உத்ஸவம், வினாயக சதுர்த்தியாகிய மூன்று உத்ஸவமும் நடத்திய பின்பே நவராத்திரி உத்ஸவம் நடத்தப்பட்டு இவர்கள் மூலமே ஜீவனின் பிறப்பும், இறப்பும் நடத்தப்படும் பெரும் பண்டிகையாக அமைத்துத்தந்து ஜீவனின் வாழ்வை மகிழ்ச்சி கூடியதாக நடத்துகிறார்கள.

ஸ்ரீரெங்கத்தில் ஸ்ரீரெங்காச்சியர் நவராத்திரி 9 நாளும் அஷ்டலச்சுமி மண்டபத்தில் கொலு இருப்பது அஷ்டலச்சுமியும் தன்னில் அடங்கி உள் ரூபத்தை வெளிக்காட்டவே ஆகும்.

1. ஆதிலச்சுமி - ஸ்ரீரெங்கம் ரெங்கநாயகித்தாயார்
2. சந்தானலச்சுமி - சங்கரன் கோயில் கோமதி அம்மாள்
3. தனலச்சுமி - கொல்லூர் முகாம்பிகை
4. தையர்லச்சுமி - அன்னை அபிராமி
5. தான்யலச்சுமி - காசி அன்னை அன்னபூரணி
6. வித்யாலச்சுமி - மதுரை மீனாட்சி அம்மாள்
7. விஜய லச்சுமி - காஞ்சி காமாட்ச்சி அம்மாள்
8. கஜலச்சுமி - மன்னர்கும ருக்குமணித்தாயார்.

இவ்விதம் தானே எல்லா ரூபத்திலும் உள்ளதைக் காட்டி இந்த அஷ்டலச்சுமி மண்டபத்தில் தானே நவமாக நவராத்திரிசமயம் அமர்ந்து தரிசனம் தருகிறாள் மகாலட்சுமி தாயார்.

நவராத்திரி கொலு சமயம் உலகத்தில் உள்ள சகல ஜீவனும் மண்ணிலிருந்து உண்டானதை சுதர்ஷன சக்ர சுழச்சி மூலம் உருவங்கள் உருவாக்கப்பட்டு 9 நாளும் தெய்வ ரூபங்களுடன் பூஜிக்கப்பட்டு ஜீவ சிருஷ்டி குறைவில்லமால் நடக்க வேண்டப்படுகிறது.

10வது நாள் நடக்கபடபோகும் விஜயதசமி உத்ஸவத்தில் பெருமாள் குதிரை வாகனத்தில் வருவது ஹயக்கிரீவருக்கு மதிப்பளிக்கவே

குதிரை முகத்துடன் ஹயக்கிரீவர் ஸ்யம்பூவாக அவதாரம் செய்ததால் குதிரைக்கு தாயார் அனுக்கிரஹத்துடன் தனிப்பட்ட மரியாதை அளிக்கப்படுகிறது.

ஸ்ரீரெங்கநாதர் குதிரை வாகனத்தில் புறப்பட்டு வன்னிமரத்தில் அம்புபோடுதல் பிரம்மனால் படைக்கப்படும் ஜீவன்கள் ஹயக்கிரீவர் அருளுடன் ஸரஸ்வதிகாடாச்சம் பெற்று 10வித நற்பண்புகள் நிறைந்து நவக்கிரஹ அருளும் பெறவேண்டும் என ஆசி வழங்குகிறார்கள்.

தென்னாட்டில் நவக்கிரஹங்கள் தனிப்பட கோவில்கள் அமைத்துத் தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | - | சூரியனார் கோயில் |
| சந்திரனுக்கு | - | திங்களூர் |
| வைதீஸ்வரன் கோயில் | - | செவ்வாய்க்கு |
| புதனுக்கு | - | திருவெண்காடு |
| குருவாகிய வியாழனுக்கு | - | ஆலங்குடி |
| சுக்கிரனாகிய வெள்ளிக்கு | - | கஞ்சனூர் |
| சனிபகவானுக்கு | - | திருநள்ளாறு |
| இராகுவிற்கு | - | திருநாகேஸ்வரம் |
| கேதுவிற்கு | - | கீழ்ப்பெரும்பள்ளி |

என நவக்கிரஹங்களுக்கு சரீர சம்பந்த உடையவனாக இருப்பதாலும் ஜீவனின் வாழ்க்கை இக் கிரஹங்களை ஒட்டியே இருப்பதால் தனிப்பட்ட கோயில்கள் அமைத்து வழிபடும் தெய்வங்களாக வைத்துத் தந்துள்ளார்கள்.

நவராத்திரியில் குங்குமம், சந்தனம், புஷ்பம், தேங்காய்க்கு மதிப்பளிப்பது போலவே நவக்கிரஹங்களை நவதான்யங்களைக் கொண்டு வழிபட வைத்துள்ளார்கள்.

சைவம், வைஷ்ணவம் என கலியில் பிரிந்து செயல்படும்போது நவக்கிரஹ ஸ்தலங்களாக மேல் கூறிய ஸ்தலங்கள் சிவ

வழிபாட்டுச் ஸ்தலமாகவும் வைஷ்ணவ நவக்கிரஹ ஸ்தலங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | ஸ்ரீவைகுண்டம் |
| சந்திரன் | - | வரகுணமங்கை |
| செவ்வாய் | - | திருக்கோளூர் |
| புதன் | - | திருப்புளியங்குடி |
| வியாழன் | - | ஆழ்வார்திருநகரி |
| வெள்ளி | - | தென்திருப்பேரை |
| சனி | - | திருக்குளந்தை |
| இராகு | - | இரட்டைத்திருப்பதி |
| கேது | - | இரட்டைத்திருப்பதி |

என நவதிருப்பதி ஸ்தலங்கள் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணித் தீரத்தில் உள்ள வழிப்படவும் பிரிக்கப்பட்டுள்ளன.

இவ்விதம் பிரிந்திருந்தாலும் நவக்கிரஹங்களில் மதத்தை காணமுடியாது. அவர்கள் ஜீவ தத்வத்தில் யாவரிடம் ஒரே சீராகவே செயல்படுகிறார்கள்.

ஓம் என்ற பிரணவமும் ஸ்ரீ என்ற சொல்லும் யாவ நாமாவளிக்கு முன்பும் வரும் படி உள்ளது.

இதன் மூலம் யாவ நாமாவளிகளிலும் மூவரும் கலந்தே வருகிறார்கள். இவ்விதம் இரு ரூபத்தையும் இணைத்து 6வராக ஜீவனின் வாழ்வை நடத்துகிறோம் என்பதே ஆகும்.

நவராத்திரி உத்ஸவத்தின் மூலம் ஜீவனின் பிறப்பு, இறப்புக் கணக்குகளை கவனிப்பவர்கள் ஐப்பசி முதல் தேதியிலிருந்து நீரான நீளாதேவிக்கு மதிப்பளிக்கிறார்கள்.

ஸ்ரீரெங்கத்தில் ஐப்பசி முதல் தேதியிலிருந்து காலை காவேரிக்கு சென்று நீராடி தங்கக் குடத்தில் காவேரி நீரை யானை மேல் சகல மரியாதையுடன் கொண்டுவரப்பட்டு அரங்கனின் விஸ்வருப தரிசனத்தில் ஜீவனுக்கு காட்ச்சி அளிக்கிறார்கள்.

ஏகாதசி, ரேவதி, அம்மாவாஸை முதலிய தினங்களுடன் ஊஞ்சல் உத்ஸவ ஸமயத்திலும் அரங்கனின் திருமஞ்சனம் யாவும் தங்கத்தினாலேயே தங்கவட்டில் தங்கச்சங்கு, சக்கரம், தங்கச்சல்லடை என்று ஜீவனின் சிருஷ்டிக்கான மதிப்பு தரப்படுகிறது.

நீளாதேவியான கங்கை ஸ்வர்ண அன்னபூரனியாக இருந்து ஜீவனுக்கு வேண்டிய உணவுப் பண்டங்களை அளிப்பதால் நீளாதேவியான கங்கைக்கும், அவள் ரூபமாக உள்ள ஸ்வர்ண

அன்னபூரணிக்கும் மதிப்பு அளித்து மண்வளம் பெருகி நீர் நிலைகள் நிரம்பி ஜீவனுக்கு வேண்டிய சகலமும் குறைவில்லாமல் கிடைக்க பிரார்த்திக்கிறார்கள்.

கங்கை தன் பாவத்தை போக்கிக் கொள்ள ஐப்பசி மாத்தில் காவேரியில் வந்து நீராடுவதாக உள்ளதின் உள்நோக்கம் திருவேணி சங்கமத்தின் மூலம் ஆத்மாவை கரை சேர்த்து கன்னியா குமரியின் மூன்று கடல் சங்கமம் மூலம் வெளிக் கொண்டுவந்து ஜீவனின் மோட்ச்ச, ஜனனப் பணிகளை ஏற்பதால் அதனை மூலமாகக் கொண்டு அரங்கனிடம் இப்பணிகளை ஒப்படைக்கவே கங்கை ஐப்பசி மாதம் ஸ்ரீரெங்கம் வருகிறாள்.

ஐப்பசி தீபாவளி அன்று காசியில் ஸவர்ண அன்ன பூரணியை லட்டுனாலேயே செய்த தேரில் அமரச்செய்து சகலவித காய்கனிகளாலும் பூஜை செய்த பின் சகல சிவாலங்களிலும் சிவனுக்கு அன்னாபிசேகம் செய்து நீளாதேவியான கங்கைக்கும் மதிப்பளிக்கப்படுகிறது ஜீவனுக்கு நீரும், உணவும் வருஷம்பூரா நிறைந்து இருக்க வேண்டும் என்று.

இதே போல் நீரான காவேரி தன்னை சதா பூஜிக்கும் காவேரியையும் பட்டுபுடவை, கருகமணி, காதோலை கண்ணாடிவளையல் முதலியவைகளுடன் தன்னுடைய கஸ்தூரி திலகத்தையும் யானைமேல் வைத்துச் சென்று காவேரியை பூஜிக்கிறார் அவள் செய்யும் பணிக்காக அரங்கன்.

நரகசதுர்த்தி அன்று வராஹப்பெருமானுக்கு பூமிப்பிராட்டிக்கும் பிறந்து ஜீவனுக்கு பலதுன்பங்களை விளைவித்துவந்த நரகாசுரனை சத்யபாமா ரதத்தை ஓட்டி வர கண்ணன் அதில் அமர்ந்து வதம் செய்த தினத்தை அவன் வேண்டுகோளுக்கு இணங்க வதம் செய்ததினத்தை தீபாவளிப் பண்டிகை ஐப்பசியில் கொண்டாடப்படுகிறது.

இதல் அடங்கி உள்ள தத்வம் ஜீவனுக்கு துன்பங்களை கொடுத்து தீமைகள் செய்யும் யாவற்றையும் அழிப்பதுடன் தீபாவளி தினம் உஷத் காலத்தில் கங்கைக்கும் நல்லெண்ணைக்கும் முக்கியத்துவம் அளித்து கங்காஸ்னானமாக குதூகலத்துடன் மங்கள ஸ்னானமாக வைத்து வணிகத்துறை வாணிபத்துறை நெசவாளர்கள் யாவருக்கும் மதிப்பளிக்கப்படுகிறது.

இதன் மூலம் புது வஸ்திரம் அணிந்து இனிப்பு உண்டு மக்கள் கூடி வாழவேண்டிய நோக்கம் அடங்கியுள்ளது.

இவ்விதம் எல்லாச் சிறப்புகளும் ஐப்பசியில் வைத்து சிவ - வைஷ்ணவ ஒற்றுமையுடன் இம்மாதம் சிறப்பாக வைத்துள்ளார்கள். இதனை ஜீவன் புரிந்து கொண்டு நடந்தால் வாழ்க்கை இன்பமாகவே இருக்கும்.

வருஷத்தில் 11 மாதம் வெள்ளிச்சல்லடையும் ஒரே மாதமான ஐப்பசியான 12வது மாதத்தில் மட்டும் தங்கச் சல்லடையில் நீளாதேவியான கங்கைக்கு மதிப்பளிக்கும் மாதத்தில் திருமஞ்சனமாகிய நீராட்டம் செய்வது ஜீவனுக்கு மழையாக கங்கையான நீர் பூமியில் இறங்கி பூமிப்பிராட்டியான மண்மங்கை ஸ்வர்ண அன்னபூரணியாக அமர்ந்து அன்னமளிப்பவளின் பணி சிறப்புற கிடைக்கச் செய்ய வேண்டும் என பிரார்த்தித்து ஜீவனின் பிறப்பும் கூன், குருடு, நீங்கிப்பிறந்து செவி சங்கநாதம் போல் கேட்கும் ஒலி பெற வேண்டும் என்ற தத்வம் சங்கு, சக்ரத்தில் அடங்கியுள்ளதால் இதனைக் கொண்டே சல்லடையில் நீர் வார்த்து நீராடி உடுத்துக்களைந்த பீதகவாடை தீர்த்தத்தை யாவருக்கும் வழங்கி நீளாதேவியை ஐப்பசியில் கௌரவிப்பது விசேஷமாகும்.

ஜீவனின்பால் அவர்களின் பாசத்தை இவையாவும் திறம்படக் கூறுகின்றன.

கார்த்திகை மாதம் அக்னியான தீபத்திற்கு அளிக்கும் மதிப்பு திருவண்ணமாலையான அக்னிஸ்தலத்தில் கார்த்திகை மாதம் நடக்கும் மலை தீபத்திற்கு முன்பு ஸ்ரீரெங்கசேத்திரத்தில் கௌசிக ஏகாதசி தினத்தில் இரவு 365 போர்வை வருஷம் பூரா உள்ள நாளைக்கும் ஒன்றாகத் தோன்றினாலும் பகவான் இன்றைய வருஷம் பூரா ஜீவன்கள் நடத்திய நல்லது கெட்டதை கணக்கு எடுக்கிறார்கள். வைகுண்ட ஏகாதசி தினம் இவர்களுக்கு மோட்ச்ச, ஜனன கணக்கை பூர்த்தி செய்ய.

பின் மறுநாள் அதிகாலை கற்பூர ஏத்த ஸேவை என நடக்கும் ஸேவையில் பகவான் பக்தர்களின் சேமநலன்கள் அமையவும், மணமுடன் உயரவும் ஆசி வழங்குகிறார் அரங்கன்.

கார்த்திகை மாதம் திருவண்ணாமலை தீபம் முதல் நாள் நடத்தி மறுநாள் ஸ்ரீரெங்கத்தில் கொண்டாடப்பட்டாலும் இதில் சொக்கர் ஆகிய சிவதத்துவமே பனையில் நிறைந்து உள்ளதை நிருபிக்க பனைமரமும் பனை ஒலைகளையும் உபயோகப்படுத்தி பஸ்மமாக்கி மரணம் அடைந்த மக்களின் மோட்ச்ச - ஜனன கணக்குளை எடுக்கிறார்கள் வைகுண்ட ஏகாதசியில் இவர்களின் மோட்ச்சம் ஜனன தீர்ப்பை தெளிவாக்க.

பனை ஜீவனுக்கு பல தத்வங்களை தன்னுள் அடக்கி ஜீவனை நர்க்கதியில் வாழ்வில் நடக்கும் பாதையைக் காட்டுவதாக அமைந்துள்ளது. பனங்காயில், நீல நிறத்தை வைத்து விஷமாகிய பாபத்தைச் செய்யாதே. பனை நீரை பதனியாக அருந்து. கள்ளாக அருந்தி உடலைக் கெடுத்துக் கொள்ளாதே என்பதுடன் பனைவெல்லம், பனங்கற் கண்டு என குளுமையான வஸ்துகளை உணவில் சேர்த்து உடலைக்காப்பாற்றிக் கொள் என ஜீவனுக்கு

வேண்டிய நற்பாதையைத் தந்தாலும் ஜீவன் அதனை ஏற்காமல் அழிவுப் பாதையில் செல்லுவதை தனதாக்க கொண்டு கெடுகிறது.

கார்த்திகையில் லட்ச்சுமி நரஸிம்மனுக்கும் உகந்தமாதமாக வைத்து ஜீவன் பக்தியை தனதாக்கி நல்லவைகளையே செய்யும் மார்க்கத்தை காட்டுகிறார்.

பக்தி என்ற சொல்லிலும்

| | | | | |
|---|---|---|---|---|
| ப | - | பரமசிவன் | - | பார்வதி |
| க் | - | பிரம்மா | - | ஸரஸ்வதி |
| தி | - | திருமால் | - | திருமகள் |

என 6 ருபமும் உள்ளதையே சொல்லுகிறது. பக்தியாக தன்னில் அடக்கி. இவ்விதம் பக்தி மூலம் 6 வரை ஜீவன்னு அறியாமைலேயே துதிக்கும் வழியை காட்டியுள்ளார்கள்.

மார்கழிமாதம் கண்ணனுக்கும் சிவனுக்கும் உகந்தமாதம்.

ஆண்டாளின் திருப்பாவையும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் மார்கழிக் குளிரையும் பாராமல் மக்கள் அதிகாலையில் எழுந்து நீராடி பஜனை செய்து வீதிவலம் வந்து கானமாகவும், நாமாவளியாகவும் கதாகாலச்சேபமாகவும் கண்ணனையும், சிவனையும் மனமுருகப் பிரார்த்திக்கிறார்கள்.

இம்மாதத்தில் வைகுண்ட ஏகாதசியும் திருவாதிரையில் நடராஜப் பெருமானின் நடன திருக்கோலமும் மிகவும் விமரிசையாக கொண்டாடப்படுகிறது.

மார்கழியில் சூரிய நாராயணருக்கும் சந்திரனுக்கு அதிபதியான பனிக்கும், பனிமலைக்கும் சிவருபத்தில் மதிப்பளித்து பகவத் ஆராதனைகள் மூலம் ஜீவனுக்கு வேண்டிய சகல ஆகாரப் பொருள்களும் நிரம்பக்கிடைக்கும் வழியை சுலபமாக்கியுள்ளார்கள். இதற்கான மூலமான பூமிப்பிராட்டியான ஆண்டாளையும், சிவஸ்வருபமான பார்வதியையும் இருபாவை மூலம் வழிபட வைத்துள்ளார்கள்.

மார்கழியில் வைகுண்ட ஏகாதசியில் ஸ்வர்க்கவாஸல் திறக்கப்பட்டு அரங்கன் ஜீவனின் மோட்ச்ச ஜனன கணக்கைப் பூர்த்திசெய்கிறார்கள்.

ஸ்வர்க்க வாஸல்திறக்கும் வைபவத்திற்கு முன்பாக பகல் பத்து என்று ஆழ்வார்களுக்கும் மோட்ச்சம் என்னும் வைபவம் நடத்தப்படுகிறது. இதில் ஒவ்வொரு நாளும் ஒரு ஆழ்வாருக்கு மோட்ச்சமாக நடத்தப்படும் வைபவத்தில் உள் அடங்கி இருக்கும் நோக்கம்.

அரங்கன் ஆழ்வார்கள் இயற்றிய நாலாயிரப் பிரபந்தங்களை அறையர் ஸேவை மூலம் அனுபவித்து அதன் மூலம் தன்னுடனேயே உடன் இருந்து பணிபுரியும் சங்கம், சக்கரம், கதை, வைஜயந்தி, வாள் என தன்னுடன் இணைந்து பணி புரிந்தவர்களை ஆழ்வார்களாக அவதரிக்ககச் செய்துள்ளதால் அவர்கள் மூலம் ஜீவனின் பிறப்பு, இறப்புக் கணக்குளை சரிவர கணக்கெடுத்து ஸ்வர்க்கவாஸல் தினம் நேர்மை தவறாமல் தீர்ப்பளிக்கிறார்.

இதை எதற்கு ஒப்பிடலாம் என்றால் ஒரு நீதிபதி வாதி, பிரதிவாதி, சாட்சிகளை சரிவர விசாரித்தபின்பே நீதி வழங்குவது பகவானின் நீதியை ஒட்டியே ஆகும் என்பதையும் காட்டுகிறது. இராப்பத்து பகல் பத்து சமயம் இராவண, கம்ஸ வதம் ஆழ்வார்கள் பிரபந்தம் மூலமாகத் தொடுத்து அரையர்கள் அபிநயமாக நடத்திக்காட்டுகிறார்கள்.

ஜீவன் 10 வித நற்பண்புகள் கொண்டு 10 வித தீய செயல்களை நீக்கி புதிதாகத் தோன்றும் ஜீவன்கள் கடைப்பிடிக்க வேண்டும் என இதன் மூலம் புலப்படுத்துவதுடன் மோட்சார்த்த ஜீவன் இதை எவ்விதம் கடைப்பிடித்துள்ளார்கள் என்பதையும் கணக்கெடுக்கிறார் பகவான்.

நவராத்திரியில் வடக்கே ராம் லீலா என 10வது நாள் கொண்டாடி இராவண கும்பகர்ண, இந்திரஜித்தை உருவமைத்து தீயிட்டுக் கொளுத்தி வழிபடுகிறார்கள்.

இதன் அர்த்தம் இராவண வதம் மூலம் 10 வித தீயவைகளையும், கும்பகர்ணன் மூலம் சோம்பலாக நித்திரையை தனதாகக் கொண்டு சோம்பலாக வாழ்வைக் கழிக்காமலும், இந்திரஜித் போல தீய குணங்களுக்கு உடந்தையாக இராமல் நல்லவைகளைப் பின் பற்ற வேண்டும் என ஜீவனுக்கு உயர் பண்புகளைப் போதிக்கிறார்கள்.

பகல் பத்தில் கடைசியாக மோகனாவதாரம் என்று ஸ்ரீமன் நாராயணன் பெண்ணாக ரூபம் கொண்டு காட்ச்சி தருகிறார். தானே, ஆணும், பெண்ணும் என்று இதன் மூலம் ஜீவனுக்கு கூறுகிறார்.

மோகனாவதாரத்தின் போது பகவான் கையில் தங்கக் கிளியுடன் இருப்பதுடன் மாலை புஷ்பத்தால் ஆன மாலையில் பச்சைக்கிளி வைத்துக் கட்டி அலங்கரிக்கப்பட்டதை தரித்துக் கொள்கிறார்.

இவ்வதம் பல கிளிகளைக் கொண்டு கட்டப்பட்ட பச்சைக்கிளிமாலையை முதல் நாள் மோகனாவதாரத்தின் போது தரித்துக் கொண்டதையே மறுநாள் காலை ரத்னாங்கியை தரித்துக் கொண்டு ஸ்வர்க்கவாசல் திறக்கும் போதும் அதே பச்சைக்கிளி மாலையை போட்டுக் கொண்டு ஸேவை சாதிக்கிறார்.

இதன் உட்பொருள் பூமிப்பிராட்டியும், உமையும் ஒன்றே என மக்களுக்கு நிச்சயமாகக் கூறுகிறார்.

ஸ்வர்க்கவாஸல் ஸ்ரீமகாலச்சுமியே ஆகும். அதாவது வாஸல் நிலையை ஸ்ரீலச்சுமியாகவே தினமும் வீட்டு வாசலை பூஜிக்கிறோம். மஞ்சள் குங்குமம் இட்டு மதிப்பளிக்கிறோம்.

இதையே கோயில், மடம், வீட்டு வாசல் நிலையிலும் கஜலட்சுமியை வைத்து பூஜிக்கப் படுகிறாள் லச்சுமியாக.

எல்லா வாசலும் லட்ச்சுமியாக இருந்தாலும் வருஷத்திற்கு ஒரு நாள் மார்கழி வைகுண்ட ஏகாதசியில் ஸ்வர்க்கவாசலாக திறந்து சர்வ வைஷ்ணவ ஆலயங்களிலும் மஹாலட்ச்சுமி மூலம் மோட்சார்த்த பணிகள் நடத்தப்படுவதையே இது நிருபணம் செய்கிறது. ஸ்ரீ மஹாலட்ச்சுமி மூலமே ஆத்மாவின் ஜனன, மரண கணக்கெடுக்கும் தத்வம் அடங்கி உள்ளது.

ஐம்பூதம் போல ஐந்து தத்வமாக மண்மகள், மலைமகள், நீர்மகள், கலைமகள், திருமகள் என ஐந்து தத்வம் அடங்கி இருந்தாலும் முடிவாக ல்ட்சுமிக்கே ஆரம்பமும், முடிவுமான அந்தஸ்து அளிப்பதாலேயே ஸ்ரீயில் மூவரும் அடங்கி இருந்தாலும் ஸ்ரீ என்றால் லட்ச்சுமி என்றே கூறப்படுகிறது.

ஸ்வர்க்க வாஸல் திறக்கப்பட்டு ஸ்ரீமன் நாராயணன் வெளியேறியதும் பக்தர்கள் ஸ்வர்க்க வாஸல் முன்பாக உள்ள மேல்தளத்தில் ஆணும், பெண்ணுமாக உள்ள பல்லிகளை தரிசித்துக் கொள்ள வேண்டும் என்ற ஐதீகம் உள்ளது. இதன் உட் பொருள் காஞ்சியில் வரதாராஜர் சன்னதி முன் சூரிய ஸ்ரீ சந்திரன் இணைந்து மத்தியில் பல்லி ரூபம் உள்ளதை இங்கும் கொண்டு வ்ந்து ஜீவனின் பிறப்பின் ரகஸ்யத்தை வெளிப்படுத்துகிறார்கள். இந்த பல்லி ரூபத்தை தரிசிப்பதால் மறுபடி ஜீவன் ஜனனம் எடுக்கும் போது எவ்விதக் குறைகளும் இல்லாமல் பிறப்பு அமைய வேண்டும் என உணர்த்தவே ஆகும்.

இங்கு ஸ்ரீயாகிய முத்தேவியருடன் லச்சுமிக்கு மதிப்பளித்த அரங்கன் ரத்ன அங்கியுடன் ஸேவை சாதித்து மக்களின் சிறந்த ரத்தினங்களை மகிழ்ச்சியுடன் ஆசி வழங்குகிறார்.

இந்த ரத்ன அங்கிக்கு இன்னொரு சிறப்பும் உண்டு. பகவானுக்கு முதலில் ரூபம் உண்டாகிய தத்வத்தை சயனக் கோலத்தில் காட்டும் நாராயணன் தனக்கு முதலில் நடை அழகு வந்த ரூபத்தை புறப்பாட்டின் போது சிம்மநடையாக சிம்மகதியில் வருகிறார். புறப்பாடு முடிந்து ஆஸ்தானத்திற்கு திரும்பும் போது சர்ப்பகதியில் ஆதிசேஷ ரூபத்தை வணங்குகிறார். இவ் இரு ரூபமும் வருஷம் பூராவும் புறப்படும் சமயத்தில் நடந்தாலும் வைகுண்ட ஏகாதசி தினம் ரத்னாங்கியுடன் இவ்விரு ரூபத்திற்கும் மதிப்பளிப்பது மிகுந்த விசேஷமுள்ள ஜீவரத்தினங்களை மதிக்கிறார்.

பகல் பத்து முடிந்து இராப்பத்து முடியும் சமயம் எல்லா ஆழ்வார்கள் மூலம் கணக்கெடுத்தாலும் பாதுகையான நம்மாழ்வாரிடம் முடிவான தீர்ப்பை ஒப்படைக்கிறார். நம்மாழ்வாருக்கும் மோகானவதாரம் கொடுத்து அதன் மூலம் ஆண், பெண்ணாகிய ஜீவனின் கணக்கை ஏற்கிறார்.

இவருக்கு கைத்தல ஸேவையாக மூன்று பட்டாச்சார்யாள் அரங்கனை கையில் ஏந்தி அந்த ரூபத்தில் காட்ச்சி தருகிறார்.

இதனில் அடங்கி உள்ள பொருள் பிரம்மா, சிவன், விஷ்ணுவாக நானே மூன்று ரூபமாக இருந்து ஜீவனின் பணிகளை நடத்துகிறேன் என்பதுடன் இம் மூவரின் மூலமும் ஜீவனின் ஜனன, மரண விபரங்களை ஒப்படைத்து மோட்ச்ச ஜனனத்திற்காக கணக்கையும் நம்மாழ்வாரிடம் ஒப்படைக்கிறார்.

கடைசியாக நம்மாழ்வாரான பாதுகையை பகவான் திருவடியில் சார்த்திக் கொண்டு துளசியால் அர்ச்சனை செய்து உமாதேவி, பூமிபிராட்டி மூலம் சிருஷ்டியை தொடங்கப்போகும் இருவருக்கும் மதிப்பளிக்கிறார்.

இவ்விதம் மோட்ச்ச ஜனனம் யாவருக்கும் மதிப்பளித்து புத்துமண்ணிற்கு மணவாளமாமுனியாகவும், ஆதிசேஷனுக்கு ராமானுஜரான உடையவராகவும், பாதுகையான நம்மாழ்வாருக்கும் மதிப்பளித்து அவர்கள் மூலமே மேல்சபை, கீழ்சபை, மக்கள் சபை என ஜீவனுக்கான சகலவிதப் பணிகளையும் தீரகேட்டு அறிந்து ஒப்படைக்கிறார்.

இதன் பிறகு மார்கழியில் தாயாருக்கு 10 நாள் வைகுண்ட ஏகாதசி கொண்டாடப்படுகிறது.

பெருமாள் கொஞ்சம் கண்டிப்பானவர் தயா, தாட்ச்சண்யம் அவரிடம் காண முடியாது. ஆனால் தாயார்தயை நிறைந்தவர்.

அதனாலேயே பெருமாள் பூர்ணமாக தீர்பப்ளிக்கும் முன் தாயாரிடமும் ஆழ்வார்கள் விண்ணப்பிக்கிறார்கள்.

தாயாரின் அன்பை பூனையுடன் ஒப்பிடலாம். குட்டியை கடுவனிடம் இருந்து காப்பாற்றி பாதுகாப்பான இடத்திற்கு எடுத்துச் சென்று மாற்றி, மாற்றி வேறு இடங்களில் வைப்பது போல தாயாரும் ஜீவனைக் காக்க பலவித உபாயங்களை கை ஆள்கிறாள்.

ஜீவன் மதில் மேல் பூனைப் போல பகவத் பக்தி செய்த உடனே தான் நினைத்த பலன் கிடைக்காவிட்டால் உலக அஞ்ஞானத்தில் மூழ்கி ஞான மார்க்கத்தை விட்டு அஞ்ஞானப் பாதையில் செல்ல ஆரம்பிக்கிறது.

மனம் ஒரு குரங்கு போல் ஒன்றை விட்டு ஒன்றைத் தாவும் இயல்புடையது. ஹிருதயத்தில் அமர்ந்திருக்கும் ஸ்ரீ ஆகிய லட்ச்சுமி நல்ல பாதையில் நடக்கும் வழிகளைக் காட்டுகிறாள். அப்படி

நடக்காமல் தன் இஷ்டம் போல நடக்கும் ஜீவனை அதன் குற்றம் சிறியதாக இருந்தால் மன்னித்தும், பெரியதாக இருந்தால் குற்றத்திற்கேற்ப தண்டனைகளையும் அளித்து அதற்கான மறுபிறப்பை அளிக்கிறாள்.

மனம் ஒரு வீடியோ காஸட் போன்றது. பிறப்பு முதல் வாழ்வில் நடந்தவைகளை நினைத்தவுடன் டெக்கில்லாமலேயே கலரிலேயே போட்டுக்காட்டும் திறன் கொண்டது.

இவ்விதம் தாயாரிடம் ஆழ்வார்கள் விண்ணப்பிக்கும் விஷயங்களை தாயாரின் வைகுண்ட ஏகாதசி முதல் 5 நாள் பங்குனி உத்திர சேர்த்தி மண்டபத்தில் தாயார் அமர்ந்து முடிவான தீர்ப்பைக் கூற ஸரஸ்வதி, பார்வதி, லட்சுமி மூவரும் இணைந்து விவாதித்து முடிவெடுக்கிறார்கள்.

பின் ஐந்து தினங்களில் ஆஸ்தான இடத்தில் அமர்ந்து முடிவெடுத்து கடைசிநாள் திருவடியில் துளஸியால் பூஜை செய்து துளஸி மூலம் பூமிப்பிராட்டியிடமும், பார்வதியிடமும் சிருஷ்டிப்பணிகளை ஒப்படைக்கிறாள் மகாலட்சுமி.

பார்வதி பச்சை துளஸியாகவும், பூமிப்பிராட்டி கருந்துளஸியாகவும், லட்சுமி வில்வமாகவும் இருந்து ஜீவனின் ஹிருதயகமலத்தில் அமர்ந்து பணிகளைத் தொடங்குகிறார்கள்.

ஹிருதயகமலமாகிய தாமரை மூன்று ரூபத்தில் பார்வதி, ஸரஸ்வதி, லட்சுமியாகவும் பூமிப்பிராட்டி வெள்ளை, சிகப்புத் தாமரையாகவும் இருந்து சரீரத்தில் அமர்கிறார்கள்.

இதற்கு ஹிருதயகமலக் கோலம் விளக்கம் தரும். ஸ்ரீவித்யா, ஸ்ரீதுர்க்கா கோலமும் இதில் அடக்கம்.

மார்கழி மாதத்தில் சிவ - வைஷ்ணவ ஆலயங்கள் மூலம் ஜீவ சிருஷ்டியின் பணிகளை பலவித ரூபங்களில் உத்ஸவமாகவும் பண்டிகைகளாவும் நடத்திக்காட்டி சுலபமாக புரிய வைத்து விடுகிறார்கள் ஜீவன் அறியாமலேயே.

திருப்பாவை மூலம் ஆண்டாளுக்கும், திருவெம்பாவை மூலம் அம்பாளுக்கும் மதிப்பளித்து ஜீவ சிருஷ்டியை தைமாதத்தில் இணைந்து நடத்தும் பணியை ஒப்படைக்கிறார்கள்.

மகாலட்சுமி வில்வமாக இருப்பதுடன் தினமும் ஸ்ரீரெங்கசேத்திரத்தில் வினாயகரை அருகம்புல்லால் அதிகாலை பூஜை செய்கிறாள். ஸ்தல விருட்ச்சமாக உள்ள வில்வமரத்தின் அருகில் உள்ள மண்டபத்தில்.

மகாலட்சுமியே ஆரம்பமும், முடிவுமாக இருப்பதாலேயே எல்லா கோயில்களிலும் எல்லா மூர்த்திக்கும் பாலே, திருமஞ்சன, அபிசேஷக சமயம் முதல் இடம் வகிக்கிறது. பிறப்பிலும்

ஆரம்பமும், முடிவும் பாலிலேயே இருப்பதும் மகாலட்சுமியே முடிவும் ஆரம்பமுமாக இருப்பதை தெளிவாகக் கூறுகிறது.

கருந்துளசி, ராமதுளஸி, வில்வம் மூன்றும் இணைந்து ஜீவனின் சிருஷ்டிப் பணிகளைச் செய்வது போல ஜீவனின் பிணிகளையும் அகற்றும் அருமருந்தாகவும் அமைந்துள்ளன. நான்காவதாக அருகம்புல்லும் மருத்துவ குணம் நிறைந்ததாக அமைந்ததுடன் ஜீவ சிருஷ்டியின் ஆரம்பமும் முடிவும் வினாயகர் கையிலேயே இருப்பதையும் உணர்த்துகிறார்கள்.

சமயபுரத்தாளாக மகாமாயையான துர்க்கையை தன் உடன் கிருஷ்ணாவதாரச் சகோதரியாக வந்தவளை அமர்த்தி அவளை பலவித ரூபங்களிலும் தன் அருகிலேயே அரங்கன் சமயபுரத்தாளாக அமரச்செய்கிறார்.

இவள் மூலம் வெக்காளி அம்மனாக உறையூர் அருகில் அமரச் செய்து பூமியில் ஏற்படும் வெக்கையை தணிக்கிறாள். இல்லாவிட்டால் பூமி வெக்கை தாங்காமல் வெடித்துவிடும்.

இதையே பூமியின் மீது வெடிகுண்டு, அணுகுண்டு, பெட்ரோல் கிணற்றில் தீ என அதிக வெப்பம் பூமிக்கு ஏற்படுவதை எரிமலை மூலம் வெளிக்கொண்டு வந்து பூமியைக் காப்பாற்றுகிறார்கள் வெக்காளி அம்மன் மூலம். இதனாலேயே இவள் கூரை இல்லாமல் இருக்கிறாள் இன்றும் என்றும் இருப்பாள்.

தெப்ப உத்ஸவங்கள் மூலம் ஜீவனுக்கு நீர் நிலை என்றும் வற்றாமல் நிறைந்து ஜீவனுக்கு வேண்டிய குடி நீர், உணவிற்கு வேண்டிய பயிர்கள், காய்கறி, பழங்கள் நிறைந்து இருக்கப் பிரார்த்திக்கிறார்கள்.

மார்கழியில் திருப்பாவை, திருவெம்பாவை மூலம் சிவ - விஷ்ணுவை துதிப்பதாக வைத்து சூரியனையும், சந்திரனையுமே துதித்து ஜீவ சிருஷ்டியின் மூலமாக ஆராதிக்கிறார்கள், மார்கழி மாத அம்மாவாஸை தினம் மூலம் நட்ச்சத்திரம் ஆஞ்சனேயர் பிறந்த நாளும் அமைந்துள்ளது விசேஷம்.

தைமாதம் பிறந்ததும் மகரசங்கரார்தி சமயம் ஐயன் - அப்பனாக சபரிமலையில் அமாந்திருக்கும் ஐயப்பன் கார்த்திகை முதல் தை வரை ஒரு மண்டல விரதம் இருந்துவரும் ஜீவனுக்கு 18 படியான கீதையை உபதேசித்து ராமாயண கதாநாயாகர்களின் சீதா, ராமரின் வழி நடக்கவும் உபதேசிக்கிறார்கள். மகரஜோதி மூலம் வாழ்க்கை பிரகாசமுள்ளதாக அமைய வாழ்த்துகிறார்கள்.

ராமாயண காலத்தில் ஸ்ரீராமர் தம்பியுடன் இங்கு வந்த இடமாதலால் தன் பக்தையான சபரியின் பெயரையே வைத்து சபரிமலை என பக்தையை மேன்மை படுத்துகிறார்.

மகாபாரதத்தில் கீதையயின் அத்தியாயமான 18டை 18 படிகளாக வைத்து 10வித நற்பண்புகளை தனதாக்க 6வரின் கிருபையுடன் அஷ்டலச்சுமி அனுக்கிரஹத்துடன் வாழ வழிகாட்டுகிறார் ஐயப்பன்.

ஸ்ரீராமரும் அரசைத்துறந்து குடிசையை ஏற்கிறார் மனைவியுடன் 14 வருஷம். அதேபோல பஞ்சபாண்டவரும் திரௌபதியுடன் அரண்மனையைத் துறந்து குடிசையை ஏற்கிறார்கள் 13 வருஷம்.

ஜீவனின் வாழ்வும் இது போல பலவித இன்ப, துன்பங்கள் நிறைந்ததாவே இருக்கும். இருந்தாலும் இவர்கள் போல இரண்டையும் ஒன்றாகப் பாவித்து நற்பாதையில் நடந்தால் மேல் கூறிய ஐயப்பனின் 18 படிகள் மூலம் நற்கதி அடையலாம் என கலிபுருஷனாக ஜீவனுக்கு வழி காட்டுகிறார் ஐயப்பன்.

பக்தர்கள் இங்கு எடுத்துச் செல்லும் நெய் நிரப்பிய தேங்காய்க்கே முக்கியத்துவம் அளிக்கிறார் ஐயப்பன், ஜீவ தத்துவத்துடன் பாலில் தயிர், நீர், மோர், வெண்ணை யாவும் உள் அடங்கி அருபமாக இருந்து வெளிப்படுவது போல ஜீவன் பக்தியின் மூலம் மெய்யான தெய்வதரிசனம் பெறுவார்கள் என்ற தத்துவத்தையும் ஜீவ சிருஷ்டித் தத்வத்தையும் ஒன்று இணைந்துக் காட்டுகிறார்கள்.

இதனாலேயே கண்ணன் வெண்ணையை திருடியாவது உண்ண வேண்டும் என ஜீவன் பக்தி செய்வதால் என்ன பழிகள் ஏற்பட்டாலும் அதனிடமிருந்து வழுவாமல் பக்தி செய்ய வேண்டும் என்பதையே உணர்த்துகிறார். அப்படிச் செய்தால் தெய்வமே அவர்களுக்கு பிரத்தியட்ச்சம் ஆவார் என்பதில் சந்தேகமில்லை.

ஐயப்பன் சிவ + வைஷ்ணவ ஒற்றுமையுடன் இஸ்லாமிய, கிருஸ்துவ மதங்களையும் ஒன்று இணைந்து பக்தி செய்யும் மார்க்கத்தை காட்டுகிறார் சபரி கிரி யாத்திரை செய்யும் பக்தர்களுக்கு.

மகர சங்கராந்தி இந்தியா பூராவும் கொண்டாடப்படும் பண்டிகை. வடக்கே மகர சங்கராந்தி என்றும் தெற்கே பொங்கல் பண்டிகை என்றும் கொண்டாடப்படுகிறது. இவை ஜீவனின் நன்மைக்கே. நம் சரீரம் பஞ்சதத்வம் அடங்கியது. நீர், நெருப்பு, ஆகாயம், வாயு இந்த நான்கு ரூபமும் இயற்கை மூலம் அப்படியே நமக்குக் கிடைத்து விடுகிறது.

ஆனால் மண் ரூபமான பிருத்வியை ஜீவன் அப்படியே உண்ண முடியாது என்பதால் மண்ணிலிருந்து விளையும் நவ தான்யங்கள் நெல், கோதுமை, காய், பழம், கீரை, மூலிகைகள் இவையாவும் சரீரம் உயிர் உள்ள வரை உண்டு வாழ பகவானால் அமைத்துத்

தரப்பட்ட வரப் பிரஸாதமாகும். ஆகாரத்தில் ஒரு சிறுகல் கிடைத்து விட்டால் அதைக் கடித்து ஜீரணிக்க முடியாது. நாவில் அறுசுவை பட்டாலும் அதனை பிரித்து ருசித்துத் தந்து உமிழ் நீரை மட்டும் சதா நாவில் தங்கச் செய்யும் பகவானின் கருணையை ஆகாரம் மூலம் உணரலாம்.

பூமியில் விளையும் இவையாவும் சூரிய + சந்திர காந்தியினாலேயே ஆகும். ஜீவனின் சரீரதத்வமும் குளிர் என்ற பனித்தன்மையும், உஷ்ணமாகிய வெப்பமும் இணைந்தே இயங்குவதால் இவ்விரு கதியிலும் சதா ஜீவனுக்கு சந்திர, சூரியனிடமிருந்து கிடைத்துக் கொண்டே இருக்கிறது. இவ் இரு தன்மைகளும் இல்லை என்றால் பூமியில் ஜீவன் வாழவே முடியாது.

தீபாவளியின் போது ஜீவனுக்கு தேவையான நீர், எண்ணை, வஸ்திரங்களுக்கு மதிப்பளித்து, மார்கழியில் கானம், பஜனை, மந்திரம், யஞ்யம் என பல பக்திருபத்திற்கு மதிப்பளித்து தையில் தான்யங்கள் அமோகமாக விளைந்து ஜீவன் வாழ வழிவகைகளை அமைத்துத் தருகிறார்கள்.

சங்கராந்திப் பண்டிகையின் போது பூரியில் மக்கள் 5 நாள் பொங்கல் திருநாளாகக் கொண்டாடுகிறார்கள். அப்போது அவர்கள் பூமியை தெய்வமாக வழிபடுவதுடன் பூமிக்கு நோகாமல் இருக்க கலப்பை கொண்டு உழாமலும், மண்வெட்டி கொண்டு வெட்டாமலும் பூஜிக்கிறார்கள். பூரிபோல் ஒரிஸ்ஸா மாநிலம் பூராவும் இம்முறை அனுசரிக்கப் படுதிறது.

நவதான்யங்களை இவர்கள் துர்க்கா பூஜையின் போது உபயோகிக்காததால் சங்கராந்தி சமயம் நவதான்யங்களை ஒன்று சேர முளைக்கட்டி கூட்டாக வைத்து இத்துடன் நம் நாட்டில் விளைந்த கறிகாய்களையும் சேர்த்து புளிப்பிற்கு மாங்காய் சேர்த்து செய்து குடும்பத்தாருடன் கூடி பகவானுக்கு அளித்து உறவினர்களுக்கும் அளித்து உண்கிறார்கள்.

மகாராஷ்டிரா, ஆந்திரா, கர்னாடகா முதலிய இடங்களில் கரும்பு, சர்க்கரைப் பண்டத்திற்கு முக்கியம் அளிக்கிறார்கள்.

தென்னாட்டில் இப்பண்டிகை மூன்று நாளாக கொண்டாடப்படுகிறது. முதல் நாள் போகி என பழையவைகளை நீக்கி புதியதாக மண்பாண்டம் முதல் யாவற்றையும் மாற்றி வீட்டை புதுப்பிக்கிறார்கள்.

பொங்கல் அன்று மண்பானைக்கு கரும்பு, மஞ்சள், தேங்காய், வாழைத்தார்களை வைத்து பொங்கல் இட்டு பூஜித்து சூரியனை உச்சிகாலத்தில் வழிபடுகிறார்கள். இவையாவும் ஜீவனின் தேவைகளை பூர்த்தி செய்து வைக்கும் சூரிய பகவானை வணங்கும் சிறந்த பண்டிகையாகும்.

மூன்றாம் நாள் எருதாக ஏர் உழவும், பசுவாக பாலைக் கொடுக்கும் இருவரையும் போற்றும் மாட்டுக்கு பண்டிகையாக மாட்டுப் பொங்கல் எனக் கொண்டாடப்படும் பொன்னான நாளாகும். உழவிற்கு உதவும் காளைக்கும், பாலைச் சொரிந்து பிறப்பு முதல் இறப்பு வரை ரட்ச்சிக்கும் பசுவையும் பூஜித்து மதிப்பளிக்கும் நாள்.

இப்போது இது திருவள்ளுவர் நாளாகவும் கொண்டாடப்படுகிறது. காக்கை, குருவி எங்கள் ஜாதி. உணவு ஒருவருக்கில்லை எனில் ஜகத்தை அழித்திடுவோம் என பாரதியின் குரல் போல் காக்கை, குருவியும் பூஜித்து மகிழப் படுகிறது.

இதன் பின் ரதசப்தமி என சூரியன் திசை திரும்பும் நாளை தட்ச்சிணாயத்திலிருந்து உத்திராணயத்திற்கு வரும் பொன்னான நாளை கொண்டாடியபின் அரங்கனுக்கு தைத் தேர் உத்ஸவம் புனர்வஸி நட்ச்சத்திரத்தில் பிரதி வருஷமும் ராமரால் அரங்கனை ஆராதிக்கப்படும் நாளாக நடத்தப்படுகிறது. பிரம்மனால் ஆரம்பிக்கப் படும் சித்திரைத்தேர் பிரம்ம சிருஷ்டிக்கு ஆரம்பம் போல தைத் தேர் ராமரால் அரங்கன் ஆராதிக்கப் படுவதாக வைத்து அன்றைய வருஷ சிருஷ்டியின் பொறுப்பை சிவனிடம் ஒப்படைக்கும் நாளாகும்.

இதனை ஒட்டி சமயபுரமாரியம்மனும் உத்தமர் கோயில் பிட்ச்சாண்டாரும் அரங்கனின் அந்த வருஷ பொறுப்பினை காவேரிக் கரையில் வந்து தங்கி ஏற்றுச் செல்லுகிறார்கள். உத்தமர் கோயிலில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் ஒன்றாக குடி கொண்டு ஒற்றுமையை புலப்படுத்துகிறார்கள்.

தை பூசத் தெப்பத்தில் பிறப்பையும், இறப்பையும் நீரின் மூலம் நடத்துவதால் குளத்தில் தெப்பத்தில் இருந்து ஆரம்பிக்கிறார் முருகன். முருகனே பவ சாகரத்தைக் கடக்க தோணியில் ஏற்றிச் சென்று திருவேணி சங்கமமான கங்கை, யமுனை, ஸரஸ்வதி மூவரும் முக்கோணமாக அமைந்து இருக்கும் துவாரம் மூலம் அனுப்பி ஜீவன் திருப்பாற்கடல் அடைந்து வஷ்மி, நாராயணனை வணங்கி அவரவர்கள் பாவ புண்ணியத்திற்கேற்ப மறுபிறவியோ, மோட்ச்சமோ அடையும் ஆசிபெற்று கன்னியாகுமரி சந்திர + சூரிய உதய, அஸ்தமனம் ஒன்று இணைந்து நடத்தப்படும் மூன்று சாகரமான அரபிக்கடல், வங்கக்கடல், இந்துமகா சமுத்திரம் என மூன்று கோணமாக பிரம்மா, விஷ்ணு, சிவனாக அமைந்துள்ள வாசல் வழி வெளியேறி அவரவர்களுக்கு ஏற்ற ஜன்மத்தை ஏற்கிறார்கள். இவ்வறுவரும் இணைந்த ரூபமே முருகன்.

சரவணபவ என்னும் நாமத்திற்கான பொருள்:

ச - சத்தியத்தை
ர - ரட்ச்சித்து
வ - அதன் வழிநடப்பவருக்கு
ண - மரண பயத்தைப் போக்கி
ப - பரமபதம் அடையும்
வ - வழியைக் காட்டுகிறோம்

என்று பெயரின் மூலமே நீதியை போதிக்கிறார்கள்.

தையில் சகல வித பொறுப்புகளையும் ஒப்படைத்தபின் கும்பகோண மகாமககுளத்தில் எல்லா தெய்வங்களும் மாசியில் மகநட்ச்சித்திரத்தில் கூடி சக்ரபாணி மூலம் ஜீவனை படைக்கும் பணியை சக்ரச் சுழற்சியின் மூலம் பிரம்மாவின் கட்டளைப்படி தொடங்குகிறார்.

மாசியில் அம்மாவாஸை தினம் சிவராத்திரி என சூரியனுக்கு தையில் மதிப்பு அளித்தது போல சிவானுக்கிரகத்துடன் சந்திரனான பனிமலைக்கு மதிப்பளிக்கிறார்கள். உலகம் ஒன்றுபட்டு ஒரே கோளமாக இருந்து பின் பிரிந்து சென்றாலும் சூரியனும் + சந்திரனும் உலகம் பூரா இணைந்து பணிபுரிவது போல பனி மலையும் உலகம் பூரா நிறைந்தே இருப்பது ஜீவனுக்கு தேவையானவைகளை பூர்த்தி செய்யவே.

உலகம் பூரா பனிமலை இருந்தாலும் இந்தியாவில் ஹிமயமலையே உயர்வாகவும் கைலயங்கிரியாகவும் சிவனும் + விஷ்ணுவும் வாஸம் செய்யும் இடமாகவும் உள்ளதால் உலகிலேயே இதன் மூலமே இந்தியாவின் உயர்வின் காரணத்தை சுலபமாக்குகிறார்கள்.

கங்கையின் உற்பத்தி ஸ்தானம் ஆகாயத்திலிருந்து இறங்கி கோமாதாவின் முகம் வழியாகவே வெளியேறி புனித நதியாக இருப்பது இந்தியாவிலேயே. ஏன் என்றால் உலகில் உள்ள எல்லா ஜீவன்களின் பிறப்பின், இறப்பின் பணிகளும் இந்தியாவிலேயே நடப்பதாலேயே இவ்வளவு முக்கியத்துவங்களும் உள்ளன.

உலகம் பூரா பல நதிகளும் பனிமலைகளும் இருந்தாலும் இந்தியாவில் உள்ள நதிகளே புண்ணிய நதிகளாக இருக்கும் காரணம் இதனாலேயே.

சிவராத்திரி தினம் சிவலிங்கத்திற்கு வில்வ தளத்தால் அர்ச்சிப்பது மிகவும் மகத்துவம் நிறைந்ததாக இருப்பது ஜீவ சிருஷ்டிக்கு முக்கிய அதிபதியான மகாலட்சுமியை பூஜித்து ஜீவ சிருஷ்டியின் துவக்கம் சிவனால் சிறப்புற நடத்த வேண்டும் என்பதற்கே.

மாசியில் காமதகனம் சிவனாலேயே நடத்தப்பட்டு சிருஷ்டியின் மூலமான காமன் தன் பணிகளை அருபமாக இருந்து நடத்த வேண்டும் என்பதற்காகவே ஆகும்.

இப்பேற்பட்ட காமன் மகாலட்ச்சுமி, மகாவிஷ்ணுவின் புதல்வனாகும்.

மகாலட்ச்சுமி மூலமே சிருஷ்டியின் ஆரம்பமும், முடிவுமாக இருந்து விஷ்ணு மூலம் மோட்ச்ச ஜனனம் இருப்பதையே காமன் இவர்களின் புதல்வனாக இருக்கிறார்.

சிவன் மூலமே ஜீவன் வாழும் காலமும், முடிவடைந்து தகனம் செய்யும் பணிவரை பார்வதி, பரமசிவன் கையில் இருப்பதையே இச்சம்பவம் நமக்குக் கூறுகிறது.

காமதகனம் ஹோலிப் பண்டிகையாகவும், ரட்ச்சாபன்தனம் என கணவன், மனைவி தவிர மற்ற யாவரும் ஒருவருக்கொருவர் சகோதர, சகோதரியே என பண்டிகைகள் மூலம் உணர்த்துகிறார்கள். ரட்ச்சாபன்தனம் ஆவணி வெள்ளிக்கிழமை கொண்டாடப்படுகிறது.

காமதகனம் சிவனின் நெற்றிக் கண்ணில் உண்டான அக்னிச் ஜீவாலை மூலமே நடக்கிறது. இச்சம்பவம் காமனின் மூலம் ஜீவ சிருஷ்டியின் ஆத்ம ப்ரவேஸமும், வெளிப்படுவதும் ஜீவனின் நெற்றியின் மூலமே என்பதையே இதனால் தெரியப் படுத்துகிறார்கள்.

காமன் அருபமாகவே தன் பணிகளைச் செய்வதால் ஆத்மா உட்புகுந்து வெளியேறும் நிகழ்ச்சியும் கண்ணிற்கு புலப்படாமலேயே செயல்படச் செய்துள்ளார்கள்.

இதனை விபூதிப் பட்டை தெளிவாகக் கூறுகிறது.

நெற்றியில் விபூதி இடும் போது வலது கை விரல்களாலேயே இட்டுக் கொள்ளப் படுகிறது. இம்மூன்று விரலில் நடு விரல் விஷ்ணுவாகவும், ஆள்காட்டி விரல் சிவனாகவும், மோதிர விரல் பிரம்மாவாகவும் இருப்பதால் இம்மூவர் மூலமே விபூதி நெற்றியில் இடப்படுகிறது.

விபூதி பசுவின் சுத்தமான சாணியிலிருந்து பட்ச்ச காலத்தில் ஆசாரத்துடன் மந்திர உச்சாடனத்துடன் பஸ்மம் ஆக்கப் படுகிறது. விபூதியும் லட்ச்சுமி, வில்வமும் லட்ச்சுமி.

அறுமுருகனும் சிவனின் நெற்றிக் கண்ணில் இருந்தே வெளியேறிய அக்னிச் ஜீவாலை, இவ்விரு சம்பவமுமே ஒன்று காமனின் மூலம் சிருஷ்டி என்றும், இரண்டாவதாக அறுவரும் இணைந்து 6 முருகனான ஜீவ சிருஷ்டியின் ஆரம்பத்தையும் முடிவையும் ஏற்கிறார்கள் என்பதையே.

விபூதிப் பட்டையை ✡ இவ்விதம் இணைத்தால் 6 கோண வடிவம் கிடைக்கிறது. அறுகோணம் சக்கரத்தாழ்வாருக்கும்,

முருகனுக்கும் உள்ள இணைப்பாகும். இவ்விதம் சக்ரத்தாழ்வார் மூலம் சக்ரச் சுழற்சியில் ஜீவன் தன் பாப, புண்ணியத்திற்கு ஏற்ப உருவாகியதும் ஆத்மா உட்புகும் நெற்றிப் பாகம் மூலம் 6வராலும் ரட்ச்சிக்கப்பட்டு பின் ஜீவ முடிவில் வெளியேறும் வரை 6வரும் காப்பாற்றி நெற்றியில் உள்ள திலக பாகம் மூலமே வெளியேறுகிறது. திலகம் லட்ச்சுமியாக இருக்கிறாள். இவ்விதம் பார்வதி, ஸரஸ்வதி, லட்ச்சுமி மூவரும் இணைந்து ஸ்ரீயாக இருந்தாலும் லட்ச்சுமி மூலமே ஸ்ரீமன் நாராயணனிடம் ஆத்மா ஒப்படைக்கப்படுவதால் லட்ச்சுமியே மூலமாக இருக்கிறாள்.

ஓம் நமச்சிவாய நம என்னும் போது ஓம் என்று மூவரும் இணைந்த ரூபத்தையும்

ந - நல்ல காரியங்களைத் தொடங்கும் போது

ம - மந்திர உச்சாடனத்துடன் என்னைத் தியானிப்பவருக்கு

சி - சகல சித்திகளையும்

வா - வாரி வழங்கி

ய - யம பயத்தைப் போக்குகிறேன்.

நம - நலம் அனைத்தையும் மூவரும் இணைந்து தருகிறோம்.

இம்மைக்கும், மறுமைக்கும் என்று திடமாக கூறும் மந்திரம். முருகா என்ற சொல்லிலும்

மு - முகுந்தன்

ரு - ருத்திரன்

கா - பிரும்மன்

என மூவரும் இணைந்தே உள்ளதை கூறுகிறார்கள்.

இதையே மாசி மகத்திற்கு முன் வளர் பிறையில் புனர்வசு பூச நட்ச்சத்திரத்தில் சிகப்பு, வெள்ளை, பச்சை சாத்திக் கொண்டு பிரம்மா, ருத்திரன், விஷ்ணு ரூபம் முருகனிடம் உள்ளதைக் காட்டி ஆவணியில் இறப்பையும், மாசியில் பிறப்பையும் ஜீவனுக்காக ஏற்பதைக் காட்டுகிறார்கள்.

பங்குனியில் முடிவான பணிகளைச் செய்கிறார்கள்.

நாச்சியார் கோயிலில் ஜீவனின் கடைசி ரூபமான கல்கருட ரூபமாக அமைந்துள்ளதின் பொருள் கூறப்பட்டுள்ளது.

மேதாவி முனிவர் தனக்கு மகாலட்ச்சுமி குழந்தையாக பிறக்க வேண்டும் என தவம் இருக்க ஒரு நாள் நதியில் நீராடும் சமயம் காலில் ஏதோ தட்டுப்பட்டது. அது ஒரு சிலை எனக் கண்டு அதை கையில் எடுக்க அச்சிலை அழகு கொஞ்சும் சக்ரபாணி சிலையெனக் கண்டார்.

அப்போது அசரீரி முனிவரே இவர் நரஸிம்மருடன் கூடிய சக்ரத்தாழ்வார். இவரை பிரதிஷ்டை செய்து பூஜித்து வந்தால் நீர் நினைத்த காரியம் கை கூடும் எனக் கூறவே மேதாவி முனிவரும் அதே போல் செய்து வந்தார்.

காலப் போக்கில் பெரியாழ்வாருக்கு பூமிப்பிராட்டி ஆண்டாளாக வந்தது போல வஞ்சி மரத்தடியில் அழகு ததும்ப சிரித்த முகத்துடன் ஒரு சிறுமி நிற்பதைக் கண்டு அவளுக்கு வஞ்சுளவல்லி எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார்.

ராமாயண காலத்தில் சரீர தத்வத்தில் குரங்கு ரூபத்தை மதிப்பளிக்க ஆஞ்சனேயராக அவதரிக்கச் செய்து அவருக்கு வானர அந்தஸ்து அளித்தது போல சரீர தத்வத்தில் கடைசி அங்கமான பட்ச்சி ரூபமான கருட ரூபமாக மதிப்பளிக்க நாச்சியார் கோயிலில் கல்கருடராக பறக்கும் சக்தியுடன் இருந்த கருடரின் இறக்கையை வெட்டிவிட இங்கு கல் கருட ரூபத்துடன் இருந்து காட்சி தருகிறார். சரீர தத்வத்தின் கல் ரூபமே முதல் என சதா மதிப்பளிக்க ஸ்ரீரெங்கத்தில் அரங்கன் ஆண்டாளுக்கு ஐக்கியம் தருவதை ஸ்ரீனிவாஸர் உப்பிலி அப்பனாக பூமிப்பிராட்டியை திருமணம் செய்து கொண்டு இராமாயணத்தில் சீதையின் சரீர தத்வத்தில் மண் ரூபத்திற்கு மதிப்பளிப்பது போல சீதையின் சரீரத்தில் நீராக இருந்த கங்கையான நீளாதேவிக்கு துலுக்கநாச்சியாராக ஐக்கியம் மட்டுமே தந்த நீருக்கு நாச்சியார் கோயிலில் ஸ்ரீனிவாஸராக வந்து வஞ்சுளவல்லியான நீளாதேவிக்கு மணக்கோலம் தந்து மதிப்பளிக்கிறார்.

நீளாதேவியே வஞ்சுளவல்லி என ஜீவனுக்கு தீர்மானமாகக் கூறவே ஓடும் நதியில் மேதாவி முனிவருக்கு நரஸிம்மருடன் கூடிய சக்கரத்தாழ்வாராக கிடைக்கும் படி செய்து நிருபணம் செய்து உள்ளார்கள்.

இராமாயண கால சம்பவத்தை கலியில் மங்களமாக பூர்த்தி செய்வதை ஜீவனுக்குக் காட்டவே ஸ்ரீரெங்க சேத்திரத்தில் நீளாதேவிக்கும், பூமிப் பிராட்டியான ஆண்டாளுக்கும் ஐக்கியத்தைத் தந்து பின் உப்பிலி அப்பன் கோயிலில் ஆண்டாளான பூமிப் பிராட்டிக்கு மணக்கோலம் ஸ்ரீனிவாஸராகத் தந்து பின் நீளாதேவியான நீருக்கு வஞ்சுளவல்லியாக ஸ்ரீனிவாஸர் மணக்கோல வைபவத்தை நடத்தி பூர்த்தி செய்கிறார். இவ்விதம் சீதாதேவியின் சரீரத்தில் அமர்ந்திருந்த தாமரையான ஹிருதய கமலத்திற்கு பத்மாவதியாக திருப்பதியில் மணக்கோலம் அளித்து மூன்று ரூபத்திற்கும் முக்தி தந்து விட்ட பகவான் இன்னும் மகாலட்ச்சுமியான சீதைக்கு முக்தி தரவில்லை என்று புலப்படுத்துகிறார்.

கல் கருட ரூபத்திற்கு தன்னுடைய நட்ச்சத்திரமான ச்ரவணத்தன்று மோதகம் பிரஸாதமாக அளித்து ஆதி முதல் மிருக ரூப தத்வம் அடங்கிய வினாயகருக்கு மதிப்பளிக்கிறார்.

இங்கு ஸ்ரீனிவாஸர் திருவாழி, திருச்சங்குடன் அமர்ந்து கையை சிறிது முன் நீட்டி பஞ்ச சமஸ்காரம் செய்வது திருமங்கை ஆழ்வாருக்கு மட்டும் அல்ல பகவானின் திருவடியை பக்தியுடன் அடைந்த பக்தர்கள் யாவருக்குமே ஆகும்.

மேலக்கோட்டை திருநாராயணபுரம் காவேரி பாய்ந்து வந்து ஸ்ரீரெங்கப்பட்டிணம் என்னும் இடத்தில் ஸ்ரீரெங்கம் போலவே அரங்கன் பள்ளிக் கொண்ட திருக்கோலத்துடன் அமர்ந்துள்ள கோயில் அருகிலேயே மலை மேல் அமைந்துள்ள இங்கு இராமானுஜர் கையால் அளிக்கப்பட்ட தேவலோக வைர முடி பங்குனி மாதத்தில் ஒருநாள் உத்ஸவத்தில் சாத்தப்படுவது அரங்கனால் மோட்ச்சம் கங்கையின் மூலம் அளிக்கப்படுவதை கரைசேர்க்கும் பணியை ஏற்பதையே காட்டுகிறது.

பக்வான் திருவடியில் துலுக்க நாச்சியாராக நீளாதேவி இருந்து இப்பணிக்கு உதவுகிறாள். காவேரியுடன் இச்சம்பவம் ஜீவனுக்கு புலப்படுத்தப்படுகிறது.

நாச்சியார் கோயிலில் ஸ்ரீனிவாஸர் நீளாதேவியை திருமணம் செய்து கொண்டு மதிப்பளிப்பது போலவே அரங்கன் நீளாதேவியை உறையூர் நாச்சியாராக தன் அருகில் அமரச் செய்துள்ளார். ஸ்ரீரெங்கத்தில் துலுக்கநாச்சியாராக ஐக்கியம் செய்து கொண்டு உள்ளதை வெளிப்படுத்தவே உறையூரில் கமலவல்லி நாச்சியார் என பெயரின் மூலம் ஜீவனுக்கு வெளிப்படுத்துகிறார் உறையூர் நாச்சியாராக.

லச்சுமி என நாச்சியார் கோயிலில் சொன்னாலும் அங்கும் நாச்சியார் கோயில் என நீளாதேவியை கலியில் வெளிப்படுத்தி அவளே இவ்விரு ஸ்தலங்களிலும் அமர்ந்துள்ளாள். நீளாதேவியான கங்கை அமர்ந்துள்ள ஸ்தலங்களில் ஊரின் பெயரிலோ, அல்லது தாயாரின் பெயரிலோ அமைந்துள்ளார்கள்.

இது எப்படி ஸாத்தியம் என்றால் பாலை அன்னபட்ச்சி அப்படியே அருந்தாமல் அதில் உள்ள நீரை பிரித்துக் காட்டி பாலில் நீர் உள்ளது போல லட்ச்சுமியில் நீளாதேவியும் இருப்பதால் நீரான நீளாதேவி லட்ச்சுமியிடமிருந்து பிரித்து ஜீவனுக்குக் காட்டி அவளுக்கு மதிப்பளிக்கிறார்கள்.

திருவிக்ரமாவதாரத்தில் பகவானின் திருவடி தேவலோகம் அடைய திருவடியை பிரம்மன் நீரால் பூஜை செய்ததே கங்கையாக

பூமியில் இறங்கி சிவனின் திருமுடியை அடைந்து பூமிக்கு இறங்குகிறாள். இவ்விதம் மூவராலும் பூஜிக்கப்படுபவள் நீளாதேவியான கங்கை.

வானத்திலிருந்தே மழை ரூபத்தில் நீராக நீளாதேவி பூமிக்கு வருவதையும் இதன் மூலம் ஜீவனுக்கு புலப்படுத்துகிறார்கள்.

இதே போல திருவண்ணாமலையில் அடி முடி காணமுடியாத அருட்பெருஞ்சோதியாக பிரம்மா அன்னபட்சியாகவும், விஷ்ணு வராஹ ரூபமாகவும் தேடினார்கள் எனக் கூறப்படுவது பிரம்ம சிருஷ்டியை பலவிதங்களிலும் மூவரும் இணைந்தே செய்கிறார்கள் என்பதையே இச்சம்பவமும் ஜீவனுக்குக் கூறுகிறது.

ஜாதி, மதங்கள் மூலம் உயர்வு, தாழ்வு பேசக் கூடாது என கூறப்படும் இக்காலத்தில் கடவுளரையும் உயர்த்தி, தாழ்த்திக் கூறாமல் எல்லாத் தெய்வங்களையும் சமநோக்குடன் செயல் படுவதும் முக்கியமாக எண்ண வேண்டும்.

சுப்ரமண்யர் ஸன்னதி முன்பாக பிரம்மா மயில் ரூபத்தில் அமர்ந்து ஜீவ சிருஷ்டியையும் முக்திப் பணிகளையும் கவனிக்கிறார்.

பசு லட்ச்சுமியாகவும், காளை விஷ்ணுவாகவும் இருந்து சகல ஜீவராசிகளுக்கும் பாலையும், உணவுப் பொருள்களையும் வழங்குவது போல காமதேனுவாக லட்ச்சுமியும், நந்தியாக மகா விஷ்ணுவும் இருந்து உலகை கண்காணிப்பதுடன் சிவாலயங்களில் நந்தியாக அமர்ந்தும் செயல்படுகிறார்கள்.

பிரதோஷத்தன்று ரிஷபமாக இருந்து பார்வதி, பரமசிவனை வளர்பிறை, தேய்பிறை ஆகிய இரு பட்ச்சங்களிலும் அவர்கள் செய்யும் பணிகளை போற்றி பங்குனி மாத உத்ஸவத்தில் அதிகார நந்தியாக வந்து சிவனைத் தன் தோளில் தாங்குகிறார். அவர் வருஷம் பூரா ஜீவனுக்காகச் செய்யும் பணிகளைப் போற்றி.

பகவான் யார் அவர் பணிக்காக உதவி செய்தாலும் ஈ, எறும்பு முதல் ஜீவசிருஷ்டிக்கு அவர்கள் செய்யும் வேலையைப் போற்றிப் புகழ்கிறார்.

துர்க்கையை சிம்மமாக வந்து தாங்குகிறார். கூர்மாவதாரத்தின் போது சிவனை கூர்ம ரூபத்துடன் சிவலிங்க ரூபத்தை பூஜிப்பது அவர் ஆலகால விஷத்தை உண்டு பூமியைக் காத்து உதவியதுடன் அமிர்தம் தேவருக்கு கிடைக்க வைத்ததை போற்றியே.

ஐயப்பனாக வரும்போது புலிக்கு மதிப்பளிக்கிறார் அதனை வாகன அந்தஸ்து அளித்து.

மகிஷன், மகிஷி துஷ்டராக இருந்தாலும் நற்பணிக்கு உதவியதால் நரகாசுரனுக்கு தீபாவளிப் பண்டிகை மூலம் மதிப்பளிப்பது போல எருமை ரூபமான அவர்கள் தோலை ஜீவனின் காலுக்கு செருப்பாக உதவச் செய்து மதிப்பு அளிக்கிறார். அதனுடன் ஜீவனின் சிரஸின் அலங்கார பொருளாக முடியாக இருந்து கோயில்களில் முடிகாணிக்கையாக தரும்படிச் செய்து அவர்களுக்கும் மதிப்பளிக்கிறார்.

பொதி சுமக்கும் கழுதைக்கும் அதனுடைய குரலைச் சகுனமாக வைத்து மதிப்பளிக்கிறார். அவர் படைப்பால் ஏற்றத் தாழ்வே கிடையாது.

ஸ்ரீரெங்கத்தில் அரங்கன் கோயிலில் தினம் சக்கிலியர்கள் செருப்பை காணிக்கையாகச் சமர்ப்பிக்கிறார்கள். குயவர்கள் தினம் புதுப்பானை சட்டிகளை சமர்ப்பிக்கிறார்கள். தினம் அரங்கனுக்கு இப்புதுக் கூன்களிலேயே ஆகாரமாகிய பிரசாதம் சமைக்கப்படுகிறது.

இவையாவும் கூறப்பட்டதின் நோக்கம் ஒவ்வொரு செயலிலும் பகவான் ஜீவனின் நன்மைகளைக் கோரியே செயல்பட்டு மக்களையும் புழு, பூச்சி, பட்ச்சி, மிருகம் வரை மதித்து போற்றுகிறார் என்பதை விளக்கவே.

பஞ்ச பூதங்களும் ஜீவனின் சரீரப் பணிகளை செயல்படவே கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. வினாயக ரூபத்திற்கு யானை ரூபமே உதவப்படுவதால் யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் என்ற அந்தஸ்தை பெற்றுள்ளது. யானைக்கு சகல கோயில்களிலும் மரியாதையுடன் தினம் பகவானின் விஸ்வரூப தரிஸனத்திற்கும், உத்ஸவ காலங்களில் முன் நடத்திச் செல்லும் மதிப்பும் அளிக்கப் படுகிறது.

இவ்விதமாக மூவரும் இணைந்து செய்யும் பணியை ஓம்கார வடிவமான வினாயகர் சுலபமாக ஜீவனுக்கு புலப்படுத்துவதுடன் அவர் கையால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ரெங்க விமானம் பிரணவாகார ரூபமாக பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இணைந்தே உலகப் பணிகளைச் செய்கிறோம் என உணர்த்துவதுடன் 4 தங்க கலசங்களைக் கொண்டு 4 வேதங்களையும் சதா பூஜிக்கிறார்கள்.

வினாயகரால் ஸ்ரீராமர் கையால் விபீஷணாழ்வாரிடம் கொடுக்கப்பட்ட ரெங்க விமானம் ஸ்ரீராமாயண காவ்யத்தின் மங்கள காண்டத்தை கலியில் பூர்த்தி செய்வதற்காகவே ஸ்ரீரெங்கத்தில் பூலோக வைகுண்டமாக பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளது என்பதை ஜீவன் இப்போது நன்றாக புரிந்து கொண்டிருக்க முடியும்.

மகாலட்ச்சுமி எப்படி பகவானை விட்டுப் பிரிந்து இருக்க முடியும் என்பதை பாலிலிருந்து நீர் பிரிவது போலவும், பெரியாழ்வார் கருட ரூபமாக இருந்தும் அவர் மதுரையில் பல்லாண்டு கூறும் போது அதைக் கேட்க பகவான் கருட வாகனத்திலேயே வந்து கேட்பது போலவே ஆகும்.

இதையே ஸ்ரீரெங்கத்தில் தாயார் தனித்து படி தாண்டாப் பத்தினியாக இருந்து இராமாயண காலத்தில் சீதையாக அவதரித்து கடைசியில் ஸ்ரீராமரைப் பிரிந்து பூமியில் பிரவேஸித்ததை கலியில் சீதையான லச்சுமியிடம் சரீர தத்வமாக இருந்த மண், நீர் என இரு தத்வத்திற்கு ஆண்டாளாக நீளாதேவியான ஐக்கியம் தந்த பின் ஸ்ரீனிவாஸரான கலிபுருஷன் சீதையிடம் ஹிருதயத்தில் கமலமாக அமர்ந்திருந்த பத்மாவதியாக அவதரிக்கச் செய்து திருமணம் செய்து கொண்டாலும் பிரிந்து இருந்து லட்ச்சுமி தன்னைவிட்டு பிரிந்து இருப்பதையே இவ்விரு க்ஷேத்திரங்கள் மூலம் புலப்படுத்தி இராமாயண மங்கள காண்டம் மூலம் கூறுகிறார்கள்.

பங்குனியில் ஜீவனின் முடிவான தீர்ப்பை கூறப் போவதால் முதலில் நீரான நீளாதேவி கமலவல்லி நாச்சியாராக அமர்ந்திருக்கும் உறையூருக்குச் சென்று ஒருநாள் சேர்த்தியில் இருந்து அவ்வருஷத்திய பணிகளை ஒப்படைக்கிறார்.

பின் மோதிரம் தொலைந்த பாவனைக் காட்டி காவேரி கரையில் மண்ணை ஜல்லடை போட்டு சலிப்பதாக ஒரு சம்பவத்தை நடத்தி குதிரை வாகனத்தில் வீதியெல்லாம் தேடுவது போல பக்தர்களுக்கு தெரிந்தாலும் மண், நீர், ஸ்வர்ணம் ஆகியவற்றிற்கு மதிப்பளித்து ஜீவனின் பிறப்பு நல்ல ஆரோக்கியம் புத்தி, ஞானம் நிறைந்ததாக இருக்க வேண்டிய ஆசியே ஆகும்.

பங்குனி உத்திரத்தன்று காலை சித்திரை வீதி, உத்திரை வீதி வலம் வந்து ஆழ்வார் திருச்சுற்று வழியே தாயார் ஸன்னதி வந்து சேர்தல் மறுமுறை தீர விஜாரித்து மக்கள் க்ஷேம நலன்களை ஜனன, மோட்ச்ச தீர்ப்புகளை தீர விஜாரித்து வழங்கப் பல வழி முறைகளை கையாளுகிறார்கள் பெருமாளும், பிராட்டியும்.

லட்ச்சுமி பகவானை விட்டுப் பிரிந்து இருந்தாலும் யாவற்றிற்கும் மூலமான மகாலட்ச்சுமி ஸ்ரீரெங்கத்தில் மூன்று சேர்த்தி மூலம் பலவித சோதனைகளை நடத்துவது முதல் சேர்த்தி மூலம் சிவரூபத்தை போற்றி அவரிடம் ஜீவனின் ஜனன கணக்கை ஒப்படைப்பதாகும்.

பின் இரண்டாவது சேர்த்தி மூலம் பிரம்மனுக்கு மதிப்பளித்து ஜீவ சிருஷ்டையின் கணக்கை ஒப்படைத்த பின் மூன்றாவது சேர்த்தியில் இருவரும் ஸ்ரீராமானுஜரால் அஷ்டாச்சர மந்திரத்திற்கும்

துவயத்திற்கும் பொருள் கூறி ஜீவனின் மோட்ச்சத்திற்கான வழியைக் காட்டிய மண்டபத்தில் அமர்ந்து அங்கும் மூன்று சேர்த்தி மூலம் ஜீவனின் மோட்ச்ச ஜனன கணக்கை இருவரும் நன்கு ஆராய்ந்து செயல்படுகிறார்கள்.

ஸ்ரீரெங்கம் போல மையிலையில் கற்பகாம்பாளும், கபாலீஸ்வரரும் பங்குனி உத்திர உத்ஸவத்தின் மூலம் அரங்கன் தங்களிடம் அளித்த ஜீவ சிருஷ்டி நலன்களை கண்காணிப்பதை புலப்படுத்துகிறார்கள்.

அம்பாள் இங்கு மயிலாக வந்து கபாலீஸ்வரரை பூஜிப்பது பிரம்மனின் பணிகளை ஏற்று நடத்தி முருகனிடம் பிறப்பு, இறப்புகளை திறம்பட கண்காணிக்க உதவுகிறாள்.

சிவ + வைஷ்ணவ ஸ்தலங்களில் ஸ்ரீரெங்க நாயகியும், பெருமாளும் அளித்த தீர்ப்பை ஏற்று அதன் வழி நடத்துகிறார்கள்.

யாவரிடமும் ஜீவனின் சரியான தீர்ப்பை கூறிய பின் மறுநாள் காலை உதயத்தில் அரங்கன் தாயாரை விட்டுப் பிரிந்து கோரதத்தில் அமர்கிறார்.

கோ என்றாலே பசு என்பதை ஜீவன் நன்றாக அறியும். இதையே சங்கர + நாராயணர் கோயில் சிவ + வைஷ்ணவ ஒற்றுமையைக் கூறுவதுடன் கோ + மதி என லட்சுமி + பார்வதியின் இணைப்பைக் கூறி புத்து மண்ணிற்கு மதிப்பளித்து அதில் பாலையும், நீரையும் கலந்து சிருஷ்டியின் துவக்கத்திற்கு செயல்படும் கோமாதாவிற்கு நன்றி கூறித் துவங்கவே கோரதத்தில் அரங்கன் அமர்கிறார்.

கோரதத்தை தென்னை நார் கொண்டு பின்னிய வடம் மூலம் இழுக்கச் செய்து ஜீவசிருஷ்டியில் தென்னைக்குள்ள பணிக்கு மரியாதை அளிக்கிறார்கள்.

ரதத்தை முன் நடத்திச் செல்ல யானை ரூபத்தில் வினாயகரை அழைத்து அவரிடம் ஜீவ சிருஷ்டியின் ஆரம்பத்தையும் அதனை காக்கும் பணியையும் ஒப்படைக்கிறார்கள்.

உத்ஸவங்கள், பண்டிகைகள் மூலம் ஜீவ சிருஷ்டியின் ஆரம்பத்தையும், முடிவையும் வெளிப்படுத்தி ஜீவன் யாவற்றையும் மகிழ்வுடன் அனுபவிக்கச் செய்கிறார்கள்.

இராமானுஜர் லட்ச்சுமணின் மறுஅவதாரம். இதை இருவர் நட்ச்சத்திரம் ஒன்றால் ஆயில்ய நட்ச்சத்திரமும், ஒன்றால் திருவாதிரை நட்ச்சத்திரமுமாக அமைத்து இராமரில் சிவ + வைஷ்ணவ தத்வம் அடங்கி உள்ளதைக் காட்டி இராமாயண மங்கள காண்டம் பூர்த்தி செய்யும் படி இராமானுஜரையே அரங்கனின் கோயில் நித்திய, உத்ஸவ கிரமங்களை அமைத்துத்தர வைத்துள்ளார்கள்.

அதே போல ஸ்ரீனிவாஸராக கலியில் சிருஷ்டிப் பணியுடன் இராமாயண மங்கள' காண்டத்தை பூர்த்தி செய்ய அவரே கண்டாமணி ரூபத்தில் வேதாந்த தேசிகராக அவதரித்து சமஸ்கிருதத்தில் பலவித ஸ்லோகங்களை ஜீவன் பலன் அடையும்படி செய்து தந்துள்ளார்கள்.

கடைசியில் வனத்தில் பிரவேஸித்து கண்டாமணி ரூபத்தில் சகல கோயில்களிலும் அமர்ந்து ஓம் என்ற பிரணவாகார ரூபத்திற்கும் ருக்குமணியின் சப்த நாதத்தையும் ஒன்று இணைத்து மதிப்பளித்து இல்லம் தோறும் மணி சப்தம் ஒலிக்கும் போது கண்ணனையும் + ருக்குமணியையும் இணைத்து ஸ்பரிசிக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறார்கள்.

அப்பேர்பட்ட ஸ்ரீனிவாஸர் ஐயப்பனாக ஆயில்ய நட்ச்சத்திரத்தில் குழந்தை ரூபத்தில் வந்து சூரியனின் காந்தியும், கஸ்தூரி திலகமுமே காந்தியும், கஸ்தூரிபாயாகவும் கலியில் வந்த ரூபத்தை வெளிப்படுத்தி அவர்கள் ரூபத்திலேயே முதலில் வந்து ஹரே ராம், ஹரே கிருஷ்ணா, ஹரே கோவிந்தா என்னும் புஸ்தகத்தை எழுத வைத்து பின் ஹிருதய கமல ஸ்ரீ புஸ்தகத்தில் பலவித தத்வங்களை வெளிக்கொண்டு வர வைத்து தற்போது இராமாயண மங்கள காண்டத்தையும் வால்மீகி நகரிலேயே வந்து இருந்து எழுதும் படி வைத்து ஜீவனுக்கு பல உண்மைகளை இதன் மூலம் வெளிக்கொண்டு வந்துள்ளார்கள்.

ஸ்ரீராமரை, சீதாதேவியுடன் சேர்ந்து பட்டாபிஷேக ரூபத்தில் வழிபட்டு வருகிறோம்.

வராஹப் பெருமாளே லவன் என்றும் குன்று தோறும் அமரும் சரவணனே குசன் என்றும் வெளிப்படுத்தி அவர்கள் மூலமே வால்மீகி முனிவர் இராமாயணத்தை காவ்யத்தை கானமாக நாடு பூரா பாதயாத்திரையாகச் சென்று பாடி ஜனங்கள் மத்தியில் அழியாமல் நிலைப்படுத்தி உள்ளதாலும், இராமர் காலத்தில் அயோத்தியை முடிசூடி அரசாண்டதாலும் சீதா, ராமருடன், லவன், குசன் ஆகிய இரு மைந்தர்களையும் சேர்ந்து வழிபட்டால் நாடும், உலகமும் சகலவித ஷேமங்களையும் அடையும் என்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை.

புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமை சீதாராமஸ்வாமியும், தாரா அம்மையாரும் பாதயாத்திரையாக வந்து இன்று பக்தர்களுடன் திருமலை வையாவூர் மலை ஏறி ஸ்ரீனிவாஸரை அலர்மேல் மங்கைத் தாயாருடன் வணங்கிடும் இப்புனித நன்னாளில் திருவாதிரையும், புனர்வஸீவும் கூடிய நட்ச்சத்திர தினத்தில் காந்தி ஜெயந்தியுமாக அமைந்துள்ளது. அவர்கள் ஆசி பூரணமாக கிடைத்துள்ள மகிழ்ச்சியில் இல்லத்தில் மாவிளக்கு ஏற்றி சீதா ராமஸ்வாமி, தாரா அம்மையாரின் திருப்பாதங்களில் அலர் மேல் மங்கை, ஸ்ரீனிவாஸப் பெருமாள் அனுக்கிரஹத்துடன் திருப்பாத கமலங்களில் வணங்குகிறேன்.

இதனுடன் புஸ்தகத்தை அச்சுக்காக எழுதி பூர்த்தி செய்த தினம் தென்னம்பாக்கம் நீளாதேவி, பூமிதேவி சகிதம் ஸ்ரீனிவாசப் பெருமாள் சக்ரத்தாழ்வாருடன் பட ரூபத்தில் இல்லம் வந்து ஆசி கூறியுள்ளது ஜீவ சிருஷ்டித் தத்வத்திற்கு மூலமான தெய்வங்களே ஆசி வழங்கிய மகிழ்ச்சி ஏற்பட்டது.

தந்தை வழிக் குல தெய்வமான அம்பில் சுந்தர ராஜப் பெருமாள், தாயார் திருவடி வணங்கி வால்மீகி முனிவரையும் வணங்கி

குருவாயூர் அப்பன் ஐயப்பன் திருக்கமலங்களில் சமர்ப்பிக்கிறேன்.

சரணம், சரணம் ஸ்வாமியே சரணம் ஐயப்பா ஆஞ்சனேயா சரணம்













அச்சிட்டோர் எம்.டி.பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை-28. தொலைபேசி: 4939612.



ஸ்ரீ சீதாராமஸ்வாமி கிருபையாலும்
ஸ்ரீ நிவாச பெருமாள் அனுகிரஹத்தாலும்
இந்த புத்தகத்தை எழுதி தயாரித்து அளிப்பவர்:

**சரோஜா கோபாலன்**
3-B, ஷரயாஷ் அபார்ட்மென்ட்
4-வது ஸீவார்டு ரோடு, வால்மீகி நகர்,
திருவான்மியூர், சென்னை - 600 041.

அச்சிட்டவர் : எம்.டி. பிரிண்டிங் ஒர்க்ஸ்
நெ. 4, முதல் மெயின் ரோடு, ஜெத் நகர்,
மந்தவெளி, சென்னை - 600 028.
தொலைபேசி : 4939612